# தேசிய கீதம்

சிறீ லங்கா தாயே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

நல்லெழில் பொலி சீரணி
நலங்கள் யாவும் நிறை வான்மணி லங்கா
ஞாலம் புகழ் வள வயல் நதி மலை மலர்
நறுஞ்சோலை கொள் லங்கா
நமதுறு புகலிடம் என ஒளிர்வாய்
நமதுதி ஏல் தாயே
நம தலை நினதடி மேல் வைத்தோமே
நமதுயிரே தாயே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

நமதாரருள் ஆனாய்
நவை தவிர் உணர்வானாய்
நமதேர் வலியானாய்
நவில் சுதந்திரம் ஆனாய்
நமதிளமையை நாட்டே
நகு மடி தனையோட்டே
அமைவுறும் அறிவுடனே
அடல் செறி துணிவருளே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

நமதார் ஒளி வளமே
நறிய மலர் என நிலவும் தாயே
யாமெலாம் ஒரு கருணை அனைபயந்த
எழில்கொள் சேய்கள் எனவே
இயலுறு பிளவுகள் தமை அறவே
இழிவென நீக்கிடுவோம்
ஈழ சிரோமணி வாழ்வுறு பூமணி
நமோ நமோ தாயே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே.

ஒரு தாய் மக்கள் நாமாவோம்
ஒன்றே நாம் வாழும் இல்லம்
நன்றே உடலில் ஓடும்
ஒன்றே நம் குருதி நிறம்

அதனால் சகோதரர் நாமாவோம்
ஒன்றாய் வாழும் வளரும் நாம்
நன்றாய் இவ் இல்லினிலே
நலமே வாழ்தல் வேண்டுமன்றோ

யாவரும் அன்பு கருணையுடன்
ஒற்றுமை சிறக்க வாழ்ந்திடுதல்
பொன்னும் மணியும் முத்துமல்ல - அதுவே
யான்று மழியாச் செல்வமன்றோ.

**ஆனந்த சமரக்கோன்**
கவிதையின் பெயர்ப்பு.



''புதிதாகி, மாற்றமடைந்து சரியான அறிவின் மூலம்
நாட்டுக்குப் போன்றே முழு உலகிற்கும் அறிவுச் சுடராகுங்கள்''

<u>கௌரவ கல்வி அமைச்சரின் செய்தி</u>

*கடந்து சென்ற இரு தசாப்தங்களுக்கு அண்மிய காலமானது உலக வரலாற்றில் விசேட தொழினுட்ப மாற்றங்கள் நிகழ்ந்ததொரு காலமாகும். தகவல் தொழினுட்பம் மற்றும் ஊடகங்களை முன்னணியாகக் கொண்ட பல்வேறு துறைகளில் ஏற்பட்ட துரித வளர்ச்சியுடன் இணைந்து மாணவர் மத்தியில் பல்வேறு சவால்கள் தோன்றியுள்ளன. இன்று சமூகத்தில் காணப்படும் தொழில்வாய்ப்பின் இயல்பானது மிக விரைவில் சிறப்பான மாற்றங்களுக்கு உட்படலாம். இத்தகைய சூழலில் புதிய தொழினுட்ப அறிவையும் திறனையும் அடிப்படையாகக் கொண்டதொரு சமூகத்தில் வெவ்வேறு விதமான இலட்சக் கணக்கான தொழில்வாய்ப்புகள் உருவாகின்றன. எதிர்கால சவால்களை வெற்றிகொள்ளும் பொருட்டு நீங்கள் பலம்பெற வேண்டுமென்பது கல்வி அமைச்சரென்ற வகையில் எனதும் எமது அரசினதும் பிரதான நோக்கமாகும்.*

*இலவசக் கல்வியின் சிறப்புமிக்கதொரு பிரதிபலனாக உங்களுக்கு இலவசமாகக் கிடைத்துள்ள இந்நூலை சீராகப் பயன்படுத்துவதும் அதன்மூலம் தேவையான அறிவைப் பெற்றுக்கொள்வதுமே உங்கள் ஒரே குறிக்கோளாக இருக்க வேண்டும். அத்துடன் உங்கள் பெற்றோர்களுட்பட மூத்தோரின் சிரமத்தினதும் தியாகத்தினதும் பிரதிபலனாகவே இலவசப் பாடநூல்களை அரசினால் உங்களுக்குப் பெற்றுத்தர முடிகிறது என்பதையும் நீங்கள் விளங்கிக்கொள்ள வேண்டும்.*

*ஓர் அரசாக நாம், மிக வேகமாக மாறி வரும் உலக மாற்றத்திற்குப் பொருந்தும் விதத்தில் புதிய பாடத்திட்டத்தை அமைப்பதும் கல்வித் துறையில் தீர்க்கமான மாற்றங்களை மேற்கொள்வதும் ஒரு நாட்டின் எதிர்காலம் கல்வி மூலமே சிறப்படையும் என்பதை மிக நன்றாகப் புரிந்து வைத்துள்ளதனாலேயேயாகும். இலவசக் கல்வியின் உச்சப் பயனை அனுபவித்து நாட்டிற்கு மாத்திரமன்றி உலகுக்கே செயற்றிறன்மிக்க ஓர் இலங்கைப் பிரசையாக நீங்களும் வளர்ந்து நிற்பதற்கு தீர்மானிக்க வேண்டியுள்ளது. இதற்காக இந்நூலைப் பயன்படுத்தி நீங்கள் பெற்றுக்கொள்ளும் அறிவு உங்களுக்கு உதவுமென்பது எனது நம்பிக்கையாகும்.*

*அரசு உங்கள் கல்வியின் நிமித்தம் செலவிடுகின்ற மிகக் கூடிய நிதித்தொகைக்கு பெறுமதியொன்றைச் சேர்ப்பது உங்கள் கடமையாவதுடன் பாடசாலைக் கல்வியூடாக நீங்கள் பெற்றுக்கொள்ளும் அறிவு மற்றும் திறன்கள் போன்றவையே உங்கள் எதிர்காலத்தைத் தீர்மானிக்கின்றன என்பதையும் நீங்கள் நன்கு கவனத்திற்கொள்ள வேண்டும். நீங்கள் சமூகத்தில் எந்த நிலையிலிருந்தபோதும் சகல தடைகளையும் தாண்டி சமூகத்தில் மிக உயர்ந்ததொரு இடத்திற்குப் பயணிக்கும் ஆற்றல் கல்வி மூலமாகவே உங்களுக்குக் கிடைக்கின்றது என்பதை நீங்கள் நன்கு விளங்கிக்கொள்ள வேண்டும்.*

*எனவே இலவசக் கல்வியின் சிறந்த பிரதிபலனைப் பெற்று, மதிப்பு மிக்கதொரு பிரசையாக நாளைய உலகை நீங்கள் வெற்றி கொள்வதற்கும் இந்நாட்டில் மட்டுமன்றி வெளிநாடுகளிலும் இலங்கையின் நாமத்தை இலங்கச் செய்வதற்கும் உங்களால் இயலுமாகட்டும் என கல்வி அமைச்சர் என்ற வகையில் நான் பிரார்த்திக்கின்றேன்.*



***அகில விராஜ் காரியவசம்***
***கல்வி அமைச்சர்***

# முன்னுரை

உலகின் சமூக, பொருளாதார, தொழினுட்ப, கலாசார விருத்தியுடன் சேர்ந்து கல்வியின் நோக்கங்கள் மிக விரிந்த தோற்றமொன்றைப் பெற்றுள்ளன. மானிட அனுபவங்கள், தொழினுட்ப மாற்றங்கள் ஆராய்ச்சி மற்றும் புதிய குறிகாட்டிகளின்படி கற்றல் கற்பித்தல் செயற்பாடும் நவீனமயமாக்கப்பட்டுள்ளது. அதன்போது மாணவர் தேவைக்குப் பொருந்தும் விதமான கற்றல் அனுபவத்தை ஒழுங்கமைத்து கற்பித்தல் செயற்பாட்டை நடைமுறைப்படுத்திச் செல்வதற்கு பாடத்திட்டத்தில் காணப்படுகின்ற நோக்கங்களிற்கிணங்க பாடம் தொடர்பான விடயங்களை உள்ளடக்கிப் பாடநூல்களை ஆக்குவது அவசியமாகும். பாடநூல் என்பது மாணவரின் கற்றல் சாதனம் மாத்திரமல்ல. அது கற்றல் அனுபவங்களைப் பெறுவதற்கும் அறிவு, பண்பு விருத்திக்கும் நடத்தை மற்றும் மனப்பாங்கு வளர்ச்சியுடன் உயர்ந்த கல்வியொன்றை பெற்றுக் கொள்வதற்கும் மிகவும் உதவக்கூடியதுமாகும்.

இலவசக் கல்விக் கருத்திட்டத்தை நடைமுறைப்படுத்தும் நோக்கில் தரம் 6 முதல் தரம் 11 வரை சுமார் 91 வகையான பாடநூல்கள் அரசினால் உங்களுக்கு வழங்கப்படுகின்றன. அந்நூல்களிலிருந்து உயர்ந்தபட்சப் பயன்களைப் பெற்றுக்கொள்வதுடன், அவற்றைப் பாதுகாப்பதும் உங்களது கடமையாகும் என்பதையும் நினைவூட்டுகின்றேன். பூரண ஆளுமைகொண்ட நாட்டிற்குப் பயனுள்ள சிறந்ததொரு பிரசையாகுவதற்கான பயிற்சியைப் பெற்றுக்கொள்வதற்கு இப்பாடநூல் உங்களுக்குக் கைகொடுக்கும் என நான் எண்ணுகிறேன்.

இப்பாடநூலாக்கத்தில் பங்களிப்புச் செய்த எழுத்தாளர், பதிப்பாசிரியர் குழு உறுப்பினர்களுக்கும் கல்வி வெளியீட்டுத் திணைக்கள உத்தியோகத்தர்களுக்கும் எனது நன்றிகள் உரித்தாகட்டும்.

டபிள்யூ. எம். ஜயந்த விக்கிரமநாயக்க<br>
கல்வி வெளியீட்டு ஆணையாளர் நாயகம்<br>
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்<br>
இசுருபாய<br>
பத்தரமுல்ல.<br>
2019.04.10

## கண்காணிப்பும் மேற்பார்வையும்

**திரு. டபிள்யூ. எம். ஜயந்த விக்கிரமநாயக்க**

கல்வி வெளியீட்டு ஆணையாளர் நாயகம்
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்.

## வழிகாட்டல்

**திருமதி டபிள்யூ. ஏ. நிர்மலா பியசீலி**
ஆணையாளர் (அபிவிருத்தி)
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்.

## இணைப்பாக்கம்

**திரு. யூ. எல். உவைஸ்**
உதவி ஆணையாளர்
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்.

## பதிப்பாசிரியர் குழு

**பேராசிரியர் பீ. அத்துக்கொரல**
ஸ்ரீ ஜயவர்தனபுர பல்கலைக்கழகம்

**கலாநிதி டீ.பி.எப். சந்துரு குமார**
சிரேஸ்ட விரிவுரையாளர்
ஸ்ரீ ஜயவர்தனபுர பல்கலைக்கழகம்

**திரு. டம்ம திசாநாயக**
சிரேஸ்ட விரிவுரையாளர்
கொழும்பு பல்கலைக்கழகம்

**திரு. ஏ. எல். எஸ். அபேவிக்ரம**
சிரேஸ்ட விரிவுரையாளர்
தேசிய கல்வி நிறுவகம்.

**திரு. எஸ். கருணாகரன்**
விரிவுரையாளர்
தேசிய கல்வி நிறுவகம்.

**திரு. யூ. எல். உவைஸ்**
உதவி ஆணையாளர்
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்.

## எழுத்தாளர் குழு

**திரு. யூ.எல். சிபார்தீன் மரிக்கார்**
சேவைக்கால ஆசிரிய ஆலோசகர்
வலயக் கல்விப் பணிமனை, வத்தேகம

**திரு. எம். எப். முஹம்மட் றியாஸ்**
ஆசிரியர்
பு/ பள்ளிவாசல் துறை முஸ்லிம் வித்தியாலயம், புத்தளம்.

**திரு. எம். எஸ். இங்கர்சால்**
ஆசிரியர்
சென்ஜோன் பொஸ்கோஸ் வித்தியாலயம், ஹட்டன்

**கலாநிதி. டபிள்யூ. எம். சாந்த வனசிங்ஹ**
விரிவுரையாளர்
இலங்கைத் திறந்த பல்கலைக்கழகம், நாவல

**திரு. எம்.கே. கிங்ஸ்லி பிரியந்த**
சிரேஸ்ட விரிவுரையாளர்
ஸ்ரீ ஜயவர்தனபுர பல்கலைக்கழகம்

**திரு. எச். எச். அருண இந்திரசேன**
சேவைக்கால ஆசிரிய ஆலோசகர்
வலயக்ப்கல்வி, பணிமனை, பலாங்கொட

**திரு. கே.கே. எஸ். குணதிலக்க**
சேவைக்கால ஆசிரிய ஆலோசகர்
வலயக்ப்கல்வி, பணிமனை கம்பஹா.

**திரு. சீ. எஸ். ஜயசிங்ஹ**
ஆசிரிய மத்திய நிலைய முகாமையாளர் (ஓய்வு), ஹொறண

## மொழிப் பதிப்பாசிரியர்

**நாராயணன் மல்லிகாதேவி**
விரிவுரையாளர்
பௌத்த பாளி பல்கலைக்கழகம், ஹோமாகம

## சரவை நோக்கு

**திருமதி ஜெயராணி தியாகராஜா**
அதிபர்
தமிழ் மகாவித்தியாலயம், நுகேகொட

## இறுதி மதிப்பீடு

**கலாநிதி ஏ.எஸ். சந்திரபோஸ்**
சிரேஸ்ட விரிவுரையாளர்
இலங்கை திறந்த பல்கலைக்கழகம், நாவல.

## கணினி வடிவமைப்பு

**செல்வி சதாசிவம் நந்தினி**
கணினி வடிவமைப்பாளர்
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்

**செல்வி பரமநாதன் உஷாநந்தனி**
கணினி வடிவமைப்பாளர்
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்

## அட்டைப்படம்
**கே.எம்.ஏ.டீ.ஆர். விக்ரமசிங்ஹ**
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்

# பொருளடக்கம்

# 01 சனநாயக ஆட்சி முறை

## அறிமுகம்

ஒரு சிறந்த ஆட்சிமுறையாக சனநாயக ஆட்சி முறையை உலக மக்கள் ஏற்றுக் கொண்டுள்ளனர். மக்களின் அபிப்பிராயங்களை அல்லது கருத்துக்களைப் பிரதிநிதித்துவப்படுத்தும், ஓர் ஆட்சிமுறை என்பதாலேயே இது உலக மக்களால் ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளது. இவ்வலகின் ஊடாக ஒரு நாட்டின் சனநாயக ஆட்சி முறை தொடர்பான பல்வேறு விடயங்களைப் பின்வரும் தலைப்புக்களின் கீழ் அறிந்து கொள்ளலாம்.

- சனநாயக ஆட்சிமுறையின் ஆரம்பமும் பரம்பலும்.
- சனநாயக ஆட்சிமுறையின் பண்புகள்.
- அரசினதும் அரசாங்கத்தினதும்இயல்புகள்.
- தேசிய அரசின் ஆரம்பமும் பரம்பலும் இயல்பும்.
- அரசின் வகிபாகம்/ பங்கு
- ஆட்சி முறைகளின் இயல்புகளும் பண்புகளும்.
- அரசாங்க கட்டமைப்பும் அதன் செயற்பாடுகளும்.
- பிரசைகளின் பொறுப்புகள்/ கடமைகள்
- அரசின் பிரசைகள் மீதான பொறுப்புகள்.
- சனநாயக ஆட்சியின் வெற்றிக்குத் தேவையான அம்சங்கள்.
- சனநாயக ஆட்சி முறையின் முக்கியத்துவம்/ பண்புகள்

## சனநாயக ஆட்சி முறையின் அறிமுகம்

பண்டைய காலம் தொட்டு மனிதன் தனது தேவைகளை இலகுவாகவும் நிறைவாகவும் பூர்த்தி செய்துகொள்வதற்காக கூட்டமாக வாழப்பழகிக் கொண்டான். காலப்போக்கில் கூட்டமாக வாழ்ந்த மனித சமூகம் படிப்படியாக வளர்ச்சி காணத்தொடங்கியது. அச்சமூகத்தின் நடைமுறைகளைப் பேணவும், சட்டம் மற்றும் சமாதானத்தைப் பாதுகாக்கவும் முறையான ஆட்சி முறை ஒன்று தேவைப்பட்டது.

இதற்கமைய, பண்டைய காலம் தொட்டு உலகில் பல்வேறு வகையான ஆட்சி முறைகள் மேற்கொள்ளப்பட்டு வந்துள்ளன. மன்னராட்சி முறை, பிரபுத்துவ ஆட்சி முறை, சர்வாதிகார ஆட்சி முறை, சோஷலிச ஆட்சி முறை, சனநாயக ஆட்சி முறை ஆகியன இந்த ஆட்சி முறைகளுக்கு உதாரணங்களாகும்.

தற்காலத்தில் இலங்கை உட்பட உலகின் பல்வேறு நாடுகள் சனநாயக ஆட்சி முறையினைத் தமது நாட்டின் ஆட்சிமுறையாகக் கொண்டுள்ளன.

## சனநாயக ஆட்சியின் ஆரம்பமும் பரம்பலும்

''சன'' என்பது மக்களையும் ''நாயகம்'' என்பது தலைவனை அல்லது ஆட்சியினையும் குறிக்கின்றது. இதற்கமைய சனநாயகம் என்பது மக்களாட்சி எனப் பொருள்படும். இவ்வகையில் ''**மக்களால் மக்களுக்காக நடைமுறைப்படுத்தப்படும் ஆட்சி**'' சனநாயக ஆட்சி எனப்படுகின்றது. சனநாயக ஆட்சி என்பது ஆங்கிலத்தில் "Democracy" என வழங்கப்படும். அது கிரேக்க மொழியில் "Demos" மற்றும் "Kratos" எனும் சொற்களின் இணைப்பாகும். "Demos" என்பது மக்களையும் "Kratos" என்பது ஆட்சியையும் குறிக்கின்றது. கிரேக்க மொழியில் இதன் பொருள் மக்களாட்சி என்பதாகும். அவ்வகையில் நேரடியாகவோ அல்லது மறைமுகமாகவோ ஆட்சி செயற்பாடுகளில் மக்களின் பங்களிப்பை பெறும் ஆட்சிமுறையே சனநாயக ஆட்சி முறை எனக் குறிப்பிடலாம்.

சனநாயக ஆட்சி முறையின் பல்வேறு பண்புகள் புரதான காலம் முதல் மேலைத்தேய மற்றும் கீழைத்தேய நாடுகளில் செயற்படுத்தப்பட்டுள்ளமைக்கான சான்றுகள் வரலாற்றில் கிடைக்கப்பெற்றுள்ளன.



உரு 1.1
காரியட்ஸ் அரங்கு எதேன்ஸ், கிரேக்கம்



உரு 1.2 பார்த்தினன் அக்கிறோ பொலிஸ்
எதேன்ஸ், கிரேக்கம்

கிரேக்கத்தின் ''எதேன்ஸ்'' நகராட்சி நேரடி சனநாயக ஆட்சியின் அம்சங்களை அடிப்படையாக கொண்டிருந்ததாக குறிப்பிடப்படுகின்றது. எதேன்ஸ் நகராட்சியில் பிரதான ஆட்சி நிறுவனமாக மக்கள் மன்றம் காணப்பட்டது. மக்கள் மன்றங்கள் மூலம் மக்களுடைய விருப்பங்கள் நேரடியாக கேட்டறியப்பட்டன. அதற்கமைய ஆட்சியில் பங்குகொள்ள சகலருக்கும் சந்தர்ப்பம் கிடைத்திருந்தது. ஆயினும், பெண்கள், அடிமைகள், வெளிநாட்டவர்கள் என்போருக்கு ஆட்சியில் பங்குகொள்ள சந்தர்ப்பம் வழங்கப்படவில்லை. எதேன்ஸ் நகராட்சியில் காணப்பட்ட இவ்வாட்சி முறை நேரடி சனநாயக ஆட்சி எனப்படுகிறது. கலந்துரையாடல்கள் நேருக்கு நேர் மக்களிடத்தில்

பரிமாறப்படுவதும் ஒரு இயல்பாகும்.

தீர்மானம் எடுக்கும் செயற்பாட்டில் மக்கள் அனைவரும் பங்குகொள்ள சந்தர்ப்பம் வழங்கப்படும் ஆட்சிமுறை நேரடி சனநாயகம் எனப்படுகிறது.

கி.மு 6 ஆம் நூற்றாண்டில் இந்தியாவில் ''வஜ்ஜி'' எனும் ஆரியரின் குடியேற்ற அரசொன்றில் குழுவாட்சி முறை நிலவியமைக்கான வரலாற்று ஆதாரங்கள் கிடைத்துள்ளன. இக்குடியேற்ற ஆட்சியில் பின்வரும் சனநாயக ஆட்சி முறையின் பண்புகள் பின்பற்றப்பட்டுள்மைக்கான ஆதாரங்கள் கிடைக்கப்பெற்றுள்ளன.

- கூட்டங்களும் கலந்துரையாடல்களும் தொடர்ந்தும் மேற்கொள்ளப்பட்டமை.
- ஒற்றுமையான ஒன்றுகூடல்கள், ஒற்றுமையான கலந்துரையாடல்கள், ஒற்றுமையாகக் கலைந்து செல்லல்.
- இயற்றப்பட்ட சட்டங்களை முறையாக நடைமுறைப்படுத்தல், அவற்றை பின்பற்றல்.
- மூத்தவர்களுக்கு மதிப்பளித்தல், அவர்களது ஆலோசனைகளையும் அறிவுரை களையும் மதித்து பின்பற்றுதல்.

எனவே கீழைத்தேய நாடுகளின் ஆட்சி முறையிலும் சனநாயகப் பண்புகள் பின்பற்றப்பட்டுள்ளமை தெளிவாகின்றது.

கி.பி 5 ஆம் நூற்றாண்டு தொடக்கம் கி.பி 15 ஆம் நூற்றாண்டு வரையான காலப்பகுதியில் ஐரோப்பாவில் நிலமானியச் சமுதாய அமைப்பு முறை காணப்பட்டது. கி.பி 15 ஆம் நூற்றாண்டுக்குப் பின்னர், நிலத்தை அடிப்படையாகக் கொண்டு சேவை வழங்கும் விவசாயப் பொருளாதார முறைமைக்கு பதிலாக வர்த்தகப் பொருளாதார முறை ஆரம்பம் கண்டது. இப்பொருளாதார முறையினால் முதலாளித்துவ வர்க்கம் ஒன்று தோற்றம் பெற்றதோடு, கி.பி 15 ஆம் நூற்றாண்டின் பின்பு ஐரோப்பாவில் தேசிய அரசு முறைமையும் ஆரம்பமானது. அத்தோடு தாராண்மை வாதக்கருத்துக்கள் பரவத்தொடங்கியதுடன், தனிமனித சுதந்திரமும் முக்கியத்துவமடைந்தது. மன்னர் ஆட்சி முறைக்குப் பதிலாக ஆட்சிச் செயற்பாடுகளில் மக்கள் பிரதிநிதிகளின் அதிகாரம் மேலோங்கியது.

கி.பி 1688 இல் ஏற்பட்ட ஆங்கிலப் புரட்சி (அமைதிப் புரட்சி) இதற்கான சிறந்த உதாரணமாகும். இப்புரட்சிக்குப் பின்னர், இங்கிலாந்தில், மக்கள் பிரதிநிதிகளைக் கொண்ட பாராளுமன்ற ஆட்சிமுறை வளர்ச்சி கண்டது.

## சனநாயக ஆட்சி முறையின் பண்புகள்

சனநாயக ஆட்சி முறை இரண்டு பிரதான பிரிவுகளைக் கொண்டுள்ளது.

1. நேரடி சனநாயகம்
2. மறைமுக சனநாயகம் (பிரதிநிதித்துவ சனநாயகம்)

### நேரடி சனநாயகம்

கிரேக்க நாட்டின் எதென்ஸ் நகராட்சியில் இடம் பெற்ற ஆட்சி முறையினை நேரடி சனநாயக முறைக்கு உதாரணமாக குறிப்பிடலாம்.

நேரடி சனநாயகம் என்பது, ''மக்கள் அனைவரும் நாட்டின் ஓரிடத்தில் ஒன்று கூடி நேரடி யாகவும் விரைவாகவும் அரசாட்சி நடவடிக்கைகள் தொடர்பாகக் கலந்துரையாடி அவர்களின் விருப்பத்திற்கமைய தீர்மானம் எடுக்கும் முறையாகும்.''

**- பேராசிரியர் காணர்**

நேரடி சனநாயக ஆட்சி முறையினைத் தற்காலத்தில் நடைமுறைப்படுத்துவதிலுள்ள சவால்கள்/ பிரச்சினைகள்

- தற்கால அரசுகளில் நிலப்பரப்பு விசாலமாகக் காணப்படுதல்
- அரசுகள் அதிக சனத்தொகையைக் கொண்டிருத்தல்
- சமூகத் தேவைகளின் சிக்கல் வாய்ந்த தன்மை.
- எல்லாப் பிரசைகளையும் ஓரிடத்தில் ஒன்று திரட்டுவதில் உள்ள சிரமம்.

### மறைமுக சனநாயகம் (பிரதிநிதித்துவ சனநாயகம்)

நேரடி சனநாயக முறை நடைமுறைப்படுத்தப்படுகையில் எதிர்கொள்ளப்பட்ட நடைமுறைச் சிக்கல்களைத் தவிர்த்துக்கொள்ளும் பொருட்டு, பிற் காலத்தில், மக்கள் பிரதிநிதிகளைத் தெரிவு செய்து, அவர்கள் மூலம் நாட்டின் ஆட்சிச் செயற்பாடுகள் நடாத்தப்படடன. இதுவே மறைமுக சனநாயக ஆட்சி அல்லது பிரதிநிதித்துவ சனநாயகம் என்று அழைக்கப்படுகின்றது. கி.பி 17 ஆம் நூற்றாண்டில், இது, ஐரோப்பாவின் பிரதான ஆட்சி முறையாகவும் காணப்பட்டது. பிற்காலத்தில், இது, மேலும் வளர்ச்சி கண்டது. அதன் விளைவாகப் பாராளுமன்றம் போன்ற பிரதிநிதித்துவ நிறுவனங்கள் தோற்றம் பெற்றன.

''மக்களால் மக்களுக்காக நடாத்தப்படுகின்ற மக்களுடைய ஆட்சிமுறை சனநாயக ஆட்சி முறையாகும்''

**- ஆபிரகாம் லிங்கன்**

''சனநாயக ஆட்சி அனைவரதும் உரிமைகளையும் பெற்றுக்கொள்ளும் ஆட்சி முறையாகும்.''

- **சீலர்**

பிரதிநிதித்துவ சனநாயகத்தின் மூலம் ஆட்சிச் செயற்பாடுகளில் மக்களின் நேரடிப் பங்களிப்பு மட்டுப்படுத்தப்பட்டுள்ளது. எனினும், சில நாடுகளில் ஆட்சிச் செயன்முறைகளின் போது மக்களின் கருத்துகளை நேடியாக அறியும் சந்தர்ப்பங்களும் உள்ளன.

இலங்கை சனநாயக சோசலிசக் குடியரசின் ஆட்சி முறை தொடர்பான நடைமுறை அரசியல் யாப்பில் மக்கள் தீர்ப்பு எனும் முறைமை காணப்படுகின்றமை இதற்கு மிகச் சிறந்த உதாரணமாகும்.

## சனநாயக ஆட்சி முறையின் முக்கியத்துவம்

தற்காலத்தில் பெரும்பாலான அரசுகள் பல்வகைமைக் கலாசாரங்களைக் கொண்ட மக்கள் சமூகத்தால் ஆனவையாகக் காணப்படுகின்றன. இவ்வாறான சமூகங்களில் சகல உறுப்பினர்களும் அந்நாட்டு ஆட்சி முறையில் பங்கு கொள்ளக் கூடியதாக காணப்படுவது சனநாயக ஆட்சி முறையின் முக்கிய அம்சமாகும்.

உலகின் பல்வேறு நாடுகள் தேசிய மட்டத்திலும் பிரதேச மட்டத்திலும் மக்களை ஆட்சியில் இணைத்துக் கொள்வதற்காக பல்வேறு நிறுவனங்களை அமைத்து ஆட்சி செய்கின்றன.

- சனநாயக ஆட்சி முறை மக்களின் விருப்பத்திற்கேற்ப நடைமுறைப்படுத்தப் படுவதால் பெரும்பான்மை மக்களின் விருப்பத்திற்கு அமையவே பிரதிநிதிகள் தெரிவுசெய்யப்படுவர்.
- பெரும்பான்மை மக்களின் வாக்கினைப் பெற்ற கட்சிக்கு அல்லது குழுவுக்கே அதிகாரம் உரித்துடையதாகும்.
- சட்டம் இயற்றப்படுவது மக்களால் தெரிவு செய்யப்பட்ட மக்கள் பிரதிநிதிகள் பெருபான்மையினரின் விருப்பின் பேரிலேயாகும்.

## சனநாயகம் ஒரு வாழ்க்கை முறை

*சமூக வாழ்க்கை முறை என்ற வகையிலும் சனநாயகம் முக்கியத்துவம் பெறுகின்றது. பிறர் கருத்துக்களை மதித்தல், கலந்துரையாடல் மூலம் தீர்மானங்களை மேற்கொள்ளல், சமத்துவம் பேணல், உரிமைகளை அனுபவிப்பதோடு அதனுடனான கடமைகளை நிறைவேற்றல் ஆகிய வாழ்க்கை முறைகளுக்குப் பழகிய சமூகமே சனநாயக மக்கள் சமூகமாகும்.*

*அவ்வாறான சமூக அமைப்பிற்குள்ளேயே சனநாயக ஆட்சிமுறை மிகவும் சிறந்த முறையில் நடைமுறைப்படுத்துவதற்கான சூழல் நிலவும்.*

### செயற்பாடு

1. *கிரேக்க எதேன்ஸ் நகரில் காணப்பட்ட நேரடி சனநாயக ஆட்சி முறை யின் அடிப்படைப் பண்புகளைப் பட்டியல்படுத்துங்கள்.*

2. *பிரதிநிதித்துவ சனநாயகம் பற்றி இங்கே குறிப்பிடப்பட்டுள்ள வற்றை அவதானித்து எளிமையான வரைவிலக்கணம் ஒன்றை ஆக்குக.*

3. *சனநாயக ஆட்சிமுறையின் அங்கத்தவர் என்றவகையில் நீங்கள் வளர்த்துக் கொள்ள வேண்டிய பண்புகளைக் கொண்டு ஒரு குறிப்பு எழுதுக.*

## சனநாயக ஆட்சி முறையின் பண்புகள்

***சர்வசன வாக்குரிமை மூலம் அரசாங்கமும் ஆட்சியாளர்களும் தெரிவு செய்யப்படுதல்.***

*சனநாயக ஆட்சிமுறையைக் கொண்ட ஒரு நாட்டில் ஆட்சி செய்வதற்கான பிரதிநிதிகளைத் தெரிவு செய்வது சர்வசன வாக்குரிமையினை அடிப்படையாகக் கொண்டாகும். அத்தோடு நேரடி சனநாயகப் பண்புகளுக்கு ஏற்ப நடைபெறும் மக்கள் தீர்ப்பின் போதும் சர்வசன வாக்குரிமை பயன்படுத்தப்படும்.*

*குறித்த வயதெல்லையைக் கொண்ட சகலருக்கும் வேறுபாடின்றி வாக்குரிமை வழங்கப்படும். ஆண், பெண், இனம், தொழில், வருமானம் ஆகிய எவ்வித வேறுபாடு களும் கவனத்திற் கொள்ளப்படாது வாக்குரிமை வழங்கப்படும்.*

*இலங்கை சனநாயகச் சோசலிசக் குடியரசின் நடைமுறையிலுள்ள அரசியல் யாப்பில் 3 வது உறுப்புரையில் பின்வருமாறு குறிப்பிடப்பட்டுள்ளது.*

‘‘இலங்கைக் குடியரசின் அரசின் இறைமை மக்களுக்கு பொறுப்பாக்கப்பட்டுள்ள இறைமை கைமாற்றத் தகாதது. இறைமை ஆட்சி அதிகாரம், அடிப்படை உரிமைகள், வாக்குரிமை என்பவற்றை உள்ளடக்கும்.’’




உரு 1.3 வாக்குரிமை பிரயோகிக்கப்படும் சந்தர்ப்பம்

### செயற்பாடு

★ இலங்கை வாக்காளர்கள் சர்வசன வாக்குரிமையை பயன்படுத்துவதற்குள்ள தேர்தல்களின் பெயர்களைக் குறிப்பிடுக.

## அரசியல் கட்சி முறை

நாட்டின் ஆட்சிக்காக ஒழுங்கமைக்கப்பட்ட கொள்கைகளின் அடிப்படையில் ஆட்சி அதிகாரத்தைப் பெற்றுக் கொள்ளும் நோக்கில் ஒன்றிணைந்த மக்கள் குழு, அரசியல் கட்சி எனக் குறிப்பிடப்படும்.

எந்தவொரு நாட்டிலும் அரச அதிகாரத்தைப் பெற்றுக் கொள்வதற்காக அரசியல் கட்சிகள் பலவற்றுக்கும் சந்தர்ப்பம் வழங்கப்பட்டிருப்பதை நாம் காணலாம். பல்வேறுபட்ட அரசியல் மற்றும் பொருளாதாரக் கொள்கைகளை அடிப்படையாகக் கொண்டு, மக்கள் ஆதரவைப்பெற்றுக் கொள்வதற்கான போட்டியில் இக்கட்சிகள் ஈடுபடுவதையும் நாம் காணலாம். இதன்போது மக்கள் தாம் விரும்பிய கட்சியைத் தெரிவு செய்யும் சந்தர்ப்பம் அவர்களுக்கு வழங்கப்படுகின்றதுதற்கால அரசுகளில்

நிலவும் கட்சிகளின் பல்வேறுபட்ட தன்மைகளின் அடிப்படையில் கட்சிகளை பின்வருமாறு வகைப்படுத்தி அறியலாம்.

| | |
|---|---|
| பல கட்சி முறை → | ஒரு நாட்டில் பல அரசியல் கட்சிகள் செயற்படும்.<br>உதாரணம் : இலங்கை, இந்தியா |
| இரு கட்சி முறை → | ஒரு நாட்டில் பல அரசியல் கட்சிகள் செயற்பட்டாலும் தேர்தலின் போது இரண்டு பிரதான கட்சிகள் அரச அதிகாரத்தை மாறிமாறிப் பெற்றுக்கொள்ளும். உதாரணம் : பெரிய பிரித்தானியா, ஐக்கிய அமெரிக்கா |
| ஒரு கட்சி முறை → | நாட்டில் சட்டரீதியாக ஓர் அரசியல் கட்சி மட்டுமே செயற்படும். இக்கட்சி சமதர்ம அரசியல் கோட்பாட்டை அடிப்படையாகக் கொண்டு செயற்படும். உதாரணம்: சீனா, கியூபா, வடகொரியா. |

சனநாயக ஆட்சி முறையினைச் செயற்படுத்துவதற்கு அரசியல் கட்சிகள் மிகவும் அவசியமானவையாக விளங்குகின்றன.

## அரசியல் கட்சி முறையின் அனுகூலங்கள்

- மக்கள் தமது கருத்துகளைப் பிரதிநிதித்துவப்படுத்துவதற்கான வாய்ப்பு அதிகரித்தல்.
- ஏதேச்சதிகார ஆட்சியைத் தடுத்தல்.
- ஆளுங்கட்சியின் பாதகமான தீர்மானங்களை விமர்சிப்பதன் மூலம் அதனைத் திருத்திக் கொள்வதற்கான வாய்ப்புக் காணப்படுதல்.
- மக்கள் சமூகத்தில் காணப்படும் பல்வகைமைத் தன்மை வெளிப்படுத்துவதற்கான சந்தர்ப்பம் காணப்படும்.
- பல்வகைமையில் ஒன்றுபட்டு செயற்பட வழி ஏற்படுதல்.
- வேற்றுமையில் ஒற்றுமையைக் கட்டியெழுப்ப உதவும்.

## செயற்பாடு

1. சனநாயக ஆட்சிமுறையினைச் செயற்படுத்துவதற்காக பல கட்சி முறையின் மூலம் ஆற்றப்படும் சேவைகளைக் குறிப்பிட்டு விளக்குக.

2. கீழே குறிப்பிடப்பட்டுள்ள நாடுகளில் காணப்படும் அரசியல் கட்சிகள் சிலவற்றின் பெயர்களைக் குறிப்பிடுக.

| இலங்கை | இந்தியா | பெரிய பிரித்தானியா |
|---|---|---|
| | | |
| | | |
| | | |
| | | |
| | | |

## தேர்தல் தொகுதி முறை

சனநாயக ஆட்சி முறையின் கீழ் பிரதிநிதிகளைத் தெரிவு செய்யும் ஓர் உபாயமாக நாட்டில் பல்வேறு தேர்தல் தொகுதிகள் ஏற்படுத்தப்படுகின்றன. இத்தேர்தல் தொகுதிகளை அடிப்படையாகக் கொண்டு நாட்டின் நாடாளுமன்றத்திற்கும் உள்ளூராட்சி நிறுவனங்களுக்கும் பிரதிநிதிகள் தெரிவுச் செய்யப்படுவர். மக்கள் பிரதிநிதிகளைத் தெரிவு செய்வதற்காகப் பின்பற்றப்படும் தேர்தல் முறைகளாக, சாதாரண பெரும்பான்மை பிரதிநிதித்துவ முறை, விகிதாசார பிரதிநிதித்துவ முறை தற்காலத்தில் நடைமுறையிலுள்ளதைக் குறிப்பிடலாம்.

இலங்கை சனநாயக சோசலிச குடியரசின் அரசில் யாப்பிற்கமைய எல்லை நிர்ணய ஆணைக்குழு மூலமாகத் தேர்தல் தொகுதிகள் பிரிக்கப்படுகின்றன. தேர்தல் தொகுதிகளைப் பிரிக்கும் போது, நிலப்பரப்பும் சனத்தொகையும் பிரதான அளவீட்டு நியதிகளாகப் பயன்படுத்தப்படுகின்றன.

**இலங்கையின் தேர்தல் மாவட்டங்களின் வரைபடத்தை இங்கே காணலாம்**




உரு 1.4 இலங்கையின் தேர்தல் மாவட்டங்களின் வரைபடம்

## தேர்தல் தொகுதிகள் மூலம் பிரதிநிதிகளைத் தெரிவு செய்வதன் நன்மைகள்

- ஒரு நிர்வாகப் பரப்பில் காணப்படும் இனம், மதம், மொழி, வர்க்கம் ஆகிய வேறுபாடுகளைக் கவனத்தில் கொள்ளாது, அனைவரது கருத்துக்களையும் பிரதிநிதித்துவப்படுத்தும் வகையில் பிரதிநிதிகளைத் தெரிவு செய்வதற்கான வாய்ப்பு ஏற்படுகின்றது.

- அரசியல் செயற்பாடுகளை நடைமுறைபடுத்துவதற்குத் தேவையான மக்கள் தலைவர்களைப் பிரதேச மட்டத்தில் உருவாக்குவதற்கு சந்தர்ப்பம் கிடைக்கிறது.

- தேர்தல் தொகுதிகளுக்குப் பொறுப்புக் கூறக்கூடிய மக்கள் பிரதிநிதிகளைத் தெரிவு செய்யும் வாய்ப்பு மக்களுக்குக் கிடைக்கின்றது.

- பிரதேச அபிவிருத்திக்கான சந்தர்ப்பம் ஏற்படுகின்றது.

### செயற்பாடு

1. உங்கள் வதிவிடத்தின் தேர்தல் மாவட்டத்தினைப் பெயரிடுக.

2. பாராளுமன்ற தேர்தலின் போது அம்மாவட்டத்தில் தெரிவு செய்யப்படும் பிரதிநிதிகளின் எண்ணிக்கையைத் தருக.

3. இலங்கை எத்தனை தேர்தல் மாவட்டங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளன?

## சுதந்திரமானதும் நியாயமானதுமான தேர்தல்

தேர்தல் மூலம் ஆட்சி நிறுவனங்களுக்கான பிரதிநிதிகளைத் தெரிவு செய்வது சனநாயக ஆட்சிமுறையின் பிரதான அம்சமாகும். ஆட்சிச் செயற்பாடுகளில் மக்கள் பங்கு பெறுவதற்கான வாய்ப்பையும் தேர்தல் வழங்குகின்றது. சனநாய கத்தின் நடைமுறைக்காக தேர்தல் அத்தியவசியக் காரணியாக அமைவதுடன், சுதந்திரமானதும் நியாயமானதுமான வகையில் தேர்தல் நடத்தப்படுவது அடிப்படை நிபந்தனையாகும். வாக்காளருக்குத் தான் விரும்பிய அரசியல் கட்சிக்கு அல்லது குழுவுக்கு ஆதரவளிப்பதற்கும் வாக்களிப்பதற்கும் சந்தர்ப்பம் இருத்தல் அவசியமாகும். அவ்வாறே வேட்பாளர் தமது தேர்தல் செயற்பாடுகளில் சுதந்திரமாக ஈடுபடுவதற்கான சூழல் இருப்பதும் அவசியமாகும்.

## சுதந்திரமானதும் நியாயமானதுமான தேர்தலின் பண்புகள்

- குறித்த காலத்தினுள் தேர்தல் நடைபெறுதல்.
- முறையான தகுதியுடையோருக்கு வாக்காளராவதற்கும் வேட்பாளராவதற்குமான உரிமை காணப்படுதல்.
- சுதந்திரமாக தேர்தல் செயற்பாடுகளில் ஈடுபடுவதற்கான உரிமைகள் காணப்படுதல்.
- தேர்தல் சட்டதிட்டங்களுக்கு அமைய தேர்தல் நடாத்தப்படுதல்.
- சுமுகமான சூழலில் தேர்தல் நடாத்தப்படுதல்.

### செயற்பாடு

- சனநாயக ஆட்சி நிலவும் ஒரு நாட்டில் வாக்காளருகு உள்ள மூன்று உரிமைகள் I ஆம் நிரலில் தரப்பட்டுள்ளன. சுதந்திரமானதும் நியாயமானதுமான அத்தேர்தலுக்கான அவ் உரிமைகளுடன் தொடர்புடைய கடமைகளை II ஆம் நிரலில் குறிப்பிடுக.

| I நிரல் | II நிரல் |
|---|---|
| **உரிமைகள்** | **உரிமைகளுடனான கடமைகள்** |
| 1. தனது வாக்கைப் பயன்படுத்தல் | |
| 2. தேர்தல் பிரசாரக் கூட்டங்களில் கலந்து கொள்ளல் | |
| 3. தேர்தல் பிரசாரக் கூட்டங்களில் உரையாற்றுதல் | |

## ஆளுங்கட்சியினதும் எதிர்க்கட்சியினதும் நிலைப்பாடு

ஆட்சி நிறுவனங்களுக்காகப் பிரதிநிதிகளைத் தெரிவு செய்யும் பொருட்டு நடைபெறும் தேர்தல் ஒன்றில் பெரும்பான்மை பிரதிநிதிகளைப் பெற்றுக் கொண்ட கட்சி, ஆளுங்கட்சியாக பாராளுமன்ற ஆட்சி முறையில் காணப்படும். ஆட்சி நடவடிக் கைகளை இக்கட்சியே மேற்கொள்ளும், தேர்தலின் போது ஆளுங்கட்சியைவிட குறைந்த பிரதிநிதிகளைப் பெற்றுக்கொண்ட கட்சிகள் அல்லது கட்சி எதிர்க்கட்சியாகச் செயற்படும்.

### சனநாயக ஆட்சி வெற்றி பெறுவதற்கு எதிர்கட்சியின் பொறுப்புகளும் கடமைகளும்

- ஆளுங்கட்சியினது சிறந்த செயற்பாடுகள் வெற்றிகரமாக நடாத்தப்படுவதற்கு ஒத்துழைப்பினை வழங்குதல்.
- ஆளுங்கட்சியின் செயற்பாடுகளை ஆராய்ந்து, அபிவிருத்திக்கான விமர்சனங்களை முன்வைத்து ஆளுங்கட்சியை நல்வழிப்படுத்தல்.
- ஆளுங்கட்சியின் சனநாயக விரோத செயற்பாடுகளுக்கும் கொள்கைகளுக்கும் எதிர்ப்பு தெரிவித்தல்.
- மிகச் சிறப்பான மாற்று ஆட்சியை அமைப்பதற்காகச் செயற்படுதல்.

**செயற்பாடு**

மக்களுக்குச் சிறந்த சேவையை பெற்றுக் கொடுப்பதற்காக ஆளுங் கட்சிக்கு எதிர்கட்சி வழங்கவேண்டிய ஒத்துழைப்புகளை சுருக்கமாக விளக்குக.

## சுதந்திரம், சமத்துவம் மற்றும் உரிமைகள்

தமது அரசியல் பொருளாதார மற்றும் சமூகத் தேவைகளைப் பூர்த்தி செய்வதற்காக தனிநபருக்கு சமூகத்தால் பெற்றுக்கொடுக்கப்படும் சந்தர்ப்பம் **சுதந்திரம்** என அழைக்கப்படும்.

''வெளித்தடைகளற்ற விதத்தில் மனிதன் தனது தனித்துவத்தை விருத்தி செய்வதற்கான நிலமை சுதந்திரமாகும்.'' **- ஜீ.டி.எச்.கோல் -**

அச் சுதந்திரத்தினைச் சமூகத்தில் உள்ள ஏனைய பிரசைகளுக்கு பாதிப்பு ஏற்படாத வகையில் அனுபவிப்பது மிக முக்கியமாகும். இச் சுதந்திரங்களை சட்டதிட்டங்களுக்கு கட்டுப்பட்டே அனுபவித்தல் வேண்டும்.

ஒரு தனிநபருக்கு தனது வாழ்வைப் பூரணப்படுத்திக்கொள்ளக் கிடைக்கும் சுதந்திரமானது, ஒரு சமூகத்தின் வளர்ச்சிக்குக் காரணமாக அமையும்.

சகலருக்கும் சமமான சந்தர்ப்பங்களையும் வாய்ப்புகளையும் பெற்றுக்கொடுப்பது சமத்துவமாகும். எவ்வித விஷேட சலுகைகளும் இன்றி உரிமைகளையும் சுதந்திரத்தையும் சமமாக அனுபவிப்பதற்கான சந்தர்ப்பம் வழங்குதல் என்பதே இதன் கருத்தாகும்.

சுதந்திரம் மற்றும் சமத்துவம் ஆகிய பண்புகள் சமூகத்தில் செயற்படவேண்டுமாயின், உரிமைகள் பாதுகாக்கப்பட வேண்டும். மனிதனுக்குத் தனது சமூக வாழ்வைப் பூரணப்படுத்திக் கொள்வதற்காகத் தேவைப்படும் நிபந்தனைத் தொகுதி உரிமைகள் எனப்படும்.

மனிதன் தனது சமூக வாழ்க்கையைச் செவ்வனே கொண்டு செல்லத் தேவையான நிபந்தனைகளே உரிமைகளாகும்.

**- பேராசிரியர் ஹரலட் ஜே. லஸ்கி -**

சமூகத்தில் கௌரவமான பிரசையாக வாழ்வதற்கு மனிதனுக்குப் பிறப்பின் மூலம் கிடைக்கும் எதுவித சிறப்பியல்பிற்கும் உட்படாத உரிமைகளே மனித உரிமைகள் எனப்படும்.

கி.பி 1948 டிசம்பர் மாதம் 10 ஆம் திகதி ஐக்கிய நாடுகள் சபையின் பொதுச் சபை மூலம் மனித உரிமைகள் பிரகடனம் வெளியிடப்பட்டது. இது வரலாற்றில் மனித உரிமைகள் வெற்றிகொள்ளப்பட்ட மிக முக்கியமான சந்தர்ப்பமாகும். இதன் மூலம் மனித உரிமை சட்டபூர்வத்தன்மையைப் பெற்றது.

உரிமைகளை முறையாக அனுபவிப்பதன் மூலம் தனிநபருக்கு சிறந்த சமூக வாழ்வை அனுபவிப்பதற்கான சந்தர்ப்பம் கிட்டும். சனநாயக சமூகத்தில் உரிமைகள் பெற்றுக் கொடுக்கப்படுவதற்கான நோக்கம், தனிநபர் அபிவிருத்தியூடாக சமூகத்தை வளர்ச்சியடையச் செய்வதாகும். கல்வி பெறுவது உங்களுக்கான உரிமையாகும், நீங்கள் கல்வி மூலம் பெறும் அறிவையும் திறமையையும் சமூக அபிவிருத்திக்காக அர்ப்பணிப்பது உங்கள் கடமையாகும்.

## செயற்பாடு

1. I ஆம் நிரலில் பிரசை ஒருவரின் உரிமைகள் குறிப்பிடப்பட்டுள்ளன. அவரால் நிறைவேற்றப்பட வேண்டிய கடமைகளை I I ஆம் நிரலில் எழுதுக.

| I நிரல் | II நிரல் |
|---|---|
| **உரிமைகள்** | **உரிமைகளுடனான கடமைகள்** |
| ஒற்றுமையாக ஒன்று கூடுவதற்கான உரிமை | |
| கல்வி கற்பதற்கான உரிமை | |
| தொழில் செய்வதற்கும் மற்றும் நியாயமான வேதனம் பெறுவதற்குமான உரிமை | |

2. உங்கள் பெற்றோர் மற்றும் பெரியோர்களுக்கு நீங்கள் செய்ய வேண்டிய பண்பாட்டுக் கடமைகளைக் குறிப்பிடுக.

## அரசியல் யாப்பிற்கிணங்க செயற்படுதல்

ஒரு நாட்டின் அடிப்படைச் சட்டமாக அமைவது அந்நாட்டின் அரசியல் யாப்பாகும். சனநாயக ஆட்சிமுறையின் கீழ் ஒரு நாட்டின் அரசாட்சியானது அரசியல் யாப்பிற்கிணங்கவே நடைபெறும்.

''அரசாங்கத்தின் முக்கிய பிரிவுகளான சட்டத்துறை, நிர்வாகத்துறை, நீதித்துறை என்பன அமைக்கப்படும் விதம், அவற்றின் அதிகாரங்கள் நடைமுறைப்படுத்தப்படும் விதம், நிறுவனங்களுக்கம் குடிமக்களுக்கும் இடையிலான தொடர்பின் தன்மை என்பன பற்றிய அடிப்படைக் கோட்பாடுகள் அடங்கிய ஆவணமே அரசியல் யாப்பாகும்.''

**- பேராசிரியர் ஐவர் ஜெனிங்ஸ் -**

அரசியல் யாப்பில் உள்ளடக்கப்பட வேண்டிய விடயங்கள் தொடர்பாக ஏற்றுக்கொள்ளப்பட்ட நியதிகள் கிடையாது. ஆயினும் ஓர் அரசியல் யாப்பில் பொதுவாகக் கீழ் குறிப்பிடப்பட்டுள்ள விடயங்கள் உள்ளடக்கப்பட்டுள்ளன.

- அரசாங்கத்தின் முக்கிய நிறுவனங்களான சட்டத்துறை, நிறைவேற்றுத்துறை, மற்றும் நீதித்துறையின் கட்டமைப்பு

- அந்நிறுவனங்களின் கடமைகள் பொறுப்புகள், அதிகாரங்கள், நிறுவனங்களுக் கிடையிலான தொடர்புகள்.

- அரசாங்கம் மற்றும் பிரசைகளுக்கிடையிலான தொடர்புகளின் தன்மை

- பிரசைகளுக்குரிய அடிப்படை உரிமைகள்

- அரசியல் யாப்பு சீர்த்திருத்தம் தொடர்பான நடைமுறைகள்

## சனநாயக ஆட்சி முறை இடம்பெறும் ஒரு நாட்டில் அரசியல் யாப்பிற்கமைய செயற்படுவதால் கிடைக்கும் நன்மைகள்

- ஆட்சியின் சீரான தன்மையையும் அதன் நிலையையும் பாதுகாத்தல்.

- மனித உரிமைகள் தொடர்பாக ஆளுவோரும் ஆளப்படுவோரும் அறிந்திருத்தல்.

- ஆட்சியாளர்கள் தன்னிச்சையாகச் செயற்படுவதைத் தடுத்தல்.

- நீதித்துறையின் சுதந்திரம் பாதுகாக்கப்படல்.

- அடிப்படை உரிமைகள் பாதுகாக்கப்படல்.

- ஆட்சி நிறுவனங்களின் மூலம் மக்கள் தமது தேவைகளையும் விருப்பங்களையும் பூர்த்தி செய்தல்

- சட்டத்தின் பாதுகாப்பு சகலருக்கும் சமமாகக் கிடைத்தல்.

## ஊடக சுதந்திரம் மற்றும் தகவல் அறிவதற்கான உரிமை

சனநாயக ஆட்சி முறை நடைபெறும் ஒரு நாட்டில் மக்கள் தமது கருத்துகளைத் தெரிவிப்பதற்கும் தகவல்களைப் பெறுவதற்கும் சுதந்திரம் உண்டு. இச் செயற்பாட்டை நிறைவேற்றுவது ஊடகங்கள் ஆகும். இவை மக்களின் அபிப்பிராயங்களை வெளிப்படுத்தவும் உதவுகின்றன.

அரசாங்கத்தின் செயற்பாடுகளையும் தீர்மானங்களையும் பற்றி தகவல்களை அறியும் உரிமை மக்களுக்கு உண்டு. இது நல்லாட்சிக்கு அத்தியாவசியமான அடிப்படைப் பண்பாகும். அதேபோன்று மக்களின் கருத்துகளை அரசாங்கத்திடம் முன்வைக்கும் ஆற்றலும் ஊடகங்களுக்குண்டு.

சனநாயக ஆட்சி முறையில் மக்களின் அபிப்பிராயங்களைக் கட்டியெழுப்புவது தொடர்பில் சிறப்பாக செயற்படுவதற்கு ஊடக சுதந்திரம் மிகவும் அவசியமாகும்.

## சனநாயக சமூகத்தின் நடைமுறைக்காக சுதந்திர ஊடகங்களால் நிறை வேற்றப்பட்ட வேண்டிய பொறுப்புகள்

- உண்மையானதும் சரியானதுமான தகவல்களை மக்களுக்கு வழங்குதல்.
- பக்கச் சார்பற்றதும் சமூக நன்மை பயக்கக் கூடியதுமான தகவல்களை வழங்குதல்.
- மக்கள் துயரங்களை ஆளுங்கட்சியின் கவனத்திற்குக் கொண்டு வரல்.
- ஆட்சியாளர்களைச் சனநாயக வழியில் இட்டுச் செல்லல்.
- மக்களின் அறிவு வளர்ச்சிக்கு உதவுதல்.
- நடைமுறைத் தகவல்களை உரிய நேரத்தில் மக்களுக்கு வழங்குதல்

### செயற்பாடு

அன்றாடத் தகவல்களை மக்களுக்கு வழங்கும் போது ஊடகங்கள் கடைப்பிடிக்க வேண்டிய ஒழுங்கு முறைகளைப் பட்டியற்படுத்துக.

## நீதித்துறையின் சுதந்திரம்

நாட்டில் நீதியை அனுபவிப்பதற்கான செயற்பாட்டை மேற்கொள்வது நீதித் துறையாகும். சனநாயக மக்கள் சமூகத்தில் உரிமைகள், சுதந்திரம் மற்றும் பாதுகாப்பு தொடர்பாக நீதித்துறை மிக முக்கிய பங்கினை ஆற்றுகின்றது.

நீதித்துறையானது அரசியல் யாப்பின் மூலம் ஏனைய துறைகளினதும் தனியார்களினதும் தலையீடுகளின்று சுதந்திரமாக இயங்க ஏற்பாடுகள் மேற்கொள்ளப்பட்டிருத்தல் வேண்டும். இவ்வாறு நீதித்துறையின் சுதந்திரத்தைப் பாதுகாப்பதற்காக தற்கால அரசுகள் அரசியல் யாப்பின் மூலம் பல்வேறு ஏற்பாடுகளை மேற்கொண்டுள்ளன.

நீதித்துறை சுதந்திரமாகச் செயற்படுவதன் மூலம் மக்களுக்கு சமமான நீதி, நியாயம் கிடைக்க வழியேற்படுகின்றது.

## சட்டத்தின் ஆட்சியும் சட்டத்தின் முன் சமத்துவமும்

ஒரு நாட்டின் அனைத்துத் துறைகளையும் விட சட்டமே உயர்வானது. அதுவே சட்டத்தின் மேன்மையாகும். ஆளுவோரும் ஆளப்படுவோரும் சட்டத்திற்கு அடிபணிதல் அவசியமாகும். அத்துடன் அனைவரும் சட்டத்தை மதித்தல் வேண்டும். சட்டத்தை மீறி எவரும் செயற்பட முடியாது. சட்டத்தை நடைமுறைப்படுத்தும் போது ஆளுவோருக்கும் ஆளப்படுவோருக்கும் அது பொதுவானதாக இருத்தல் வேண்டும்.

இனம், குலம், மொழி, சமயம், பால், நிலை எனும் எந்தவொரு இயல்புக்கும் உட்படாது சட்டம் செயற்படுவதை, சட்டத்தின் முன் சகலரும் சமம் எனச் சுருக்கமாகக் கூறலாம்.

## சட்ட ஆட்சியின் நடைமுறைப் பண்புகள்

- அனைவரும் சட்டத்தை மதித்தல், அதற்கு அடிபணிதல், சட்டத்தை மீறாதிருத்தல்.
- நடைமுறையிலிருக்கும் சட்டங்களுக்கிணங்க குற்றவாளிகளைத் தண்டித்தல்.
- குற்றப்பத்திரத்திற்கு அமைய மட்டுமே ஒருவரைக் கைது செய்தல்,சட்டத்தின் முன் சகலரும் சமமானவர்கள்.
- சட்டத்தின் பாதுகாப்பு அனைவருக்கும் சர்வசாதாரணமாகக் கிடைத்தல்.

### செயற்பாடு

நீதித்துறையின் சுதந்திரத்தைப் பாதுகாப்பதற்காக இலங்கை அரசியல் யாப்பின் மூலம் மேற்கொள்ளப்பட்டுள்ள ஏற்பாடுகள் இரண்டைத் தருக.

## அரசினதும் அரசாங்கத்தினதும் இயல்புகள்

அரசு நிலையான நிறுவனமாவதோடு அரசாங்கம் என்பது, அவ்வப்போது பல்வேறு மாற்றங்கள் ஏற்படும் நிறுவனமாகும். தற்கால அரசுகள் தேசிய அரசுகளாகக் காணப்படுவதோடு அவ்வாறான அரசுகளின் மூலக்கூறுகள் நான்கு வகைப்படுகின்றன. அவையாவன, நிலம், மக்கள் தொகை, அரசாங்கம், இறைமை என்பன ஆகும்.

### நிலம் (ஆட்புல பிரதேசம்)

- குறிக்கப்பட்ட எல்லையைக் கொண்ட நிலப்பரப்பு காணப்படுதல்
- அதனை சுற்றியுள்ள கடல் எல்லை
- நிலம் மூடப்பட்டுள்ள வான் பரப்பு

### மக்கள் தொகை

- குறித்த நிலப்பரப்பிற்குள் வாழும் மக்கள் தொகை

### அரசாங்கம்

- அரசிற்குள் நீதி மற்றும் சமாதானத்தைப் பாதுகாத்தலும், மக்களின் பொது நோக்கங்களை நிறைவேற்றுவதும், வழிப்படுத்துவதும் அரசாங்கமாகும்.

### இறைமை

- எவ்வித உள்ளக மற்றும் வெளியக சக்திகளால் கட்டுப்படுத்த முடியாத மக்களுக்காகப் பிரயோகிக்கும் அதி உயர் அதிகாரம் இறைமை எனப்படும். சட்டங்களை இயற்றவும் நடைமுறைப்படுத்தவும் மக்களைச் அச்சட்டங்களுக்கு அடிபணியச் செய்யவும் இறைமை உதவும்.

## அரசு தொடர்பாக முன்வைக்கப்பட்டுள்ள வரைவிலக்கணங்கள்

''எண்ணிக்கையில் அதிகமாகவோ குறைவாகவோ அமைந்த மக்கள் சமுதாயம் வெளிக்கட்டுபாட்டிலிருந்து சுதந்திரத்துடன் ஒரு குறிப்பிட்ட ஆட்சி நிலத்தை நிரந்தரமாக்கிக்கொண்டு அமைக்கப்பட்ட அரசாங்கத்துடன் வாழ்கின்றபோது, பெரும்பான்மையான மக்கள் அவ் அரசாங்கத்திற்குக் கீழ்ப்படிவார்களேயானால் அது அரசு எனப்படும்.''

**- பேராசிரியர் கானர் -**

''மகிழ்ச்சிகரமானதும் கௌரவமானதுமான வாழ்க்கையை நோக்காகக் கொண்ட அமைப்பே அரசாகும்.''

**- அரிஸ்டோட்டில் -**

## தேசிய அரசு

அரசியல் அமைப்பின் மூலம் ஐரோப்பாவில் தேசிய அரசுகள் கி.பி 15 ஆம் நூற்றாண்டின் பின்னரே நிறுவப்பட்டன.

### தேசிய அரசுகளின் பிரதான பண்புகள்

- ஓர் இனத்துக்கு ஓர் அரசு என்ற கோட்பாட்டை அடிப்படையாக கொண்டிருத்தல்
- நிலம், மக்கள்தொகை, அரசாங்கம், இறைமை ஆகிய மூலக்கூறுகளைக் கொண்டிருத்தல்
- தொழில் ரீதியாக உயர் வகுப்பினரைக் கொண்டு ஆட்சி நடாத்தப்படல்
- உள், வெளி இறைமையைக் கொண்டிருத்தல்.

### தேசிய அரசின் ஆரம்பமும் பரம்பலும்

கி.பி 15 ஆம் நூற்றாண்டின் பின்பு ஐரோப்பாவில் தேசிய அரசுகள் தோற்றம் பெற்றன. இங்கிலாந்து, ஸ்பெயின், பிரான்ஸ் என்பன ஐரோப்பாவில் தோற்றம் பெற்ற தேசிய அரசுகளாகும். பின்பு, ஜேர்மனி, இத்தாலி என்பன தேசிய அரசுகளில் ஒன்றிணைந்தன. 20 ஆம் நூற்றாண்டளவில் ஐரோப்பாவைப் போன்று உலகம் முழுவதும் தேசிய அரசுகள் உருவாயின.

### தேசிய அரசின் தோற்றத்திற்கான காரணிகள்

- புரட்டஸ்தாந்து மத சீர்திருத்த இயக்கம்
- விஞ்ஞான மறுமலர்ச்சி
- மானிய முறை வீழ்ச்சியும் முதலாளித்துவத்தின் எழுச்சியும்
- விஞ்ஞான அறிவு வளர்ச்சியடைந்தமை.

தேசிய அரசின் தோற்றத்திற்குத் தேவையான அடிப்படை, புரட்டஸ்தாந்து மத சீர்திருத்த இயக்கத்தின் மூலம் கிடைக்கப்பெற்றது. மேலும், **நிக்கலோ மக்கியவல்லி ஜீன்போடின், தோமஸ் ஹொப்ஸ்** போன்ற அரசியல் சிந்தனையாளர்களின் சிந்தனைகள் தேசிய அரசு பலமடைவதற்கு காரணமாக அமைந்தன.

இங்கிலாந்து, பிரான்ஸ், ஒல்லாந்து, போர்த்துக்கல் ஆகிய நாடுகள் பலம்மிக்க தேசிய அரசுகளாக எழுச்சி பெறுவதற்குப் பல்வேறு காரணிகள் பங்களித்தன. அவையாவன,

- தேசிய ஒருமை
- போர் மற்றும் படைப்பலம்
- வளர்ச்சியடைந்த பொருளாதாரம்
- மக்களின் அறிவு மற்றும் ஆக்க பூர்வமான திறமைகள்

## அரசின் வகிபங்கு

தற்கால தேசிய அரசுகள் பெரிய நிலப்பரப்பை அடிப்படையாகக் கொண்டும் சிறிய நிலப்பரப்பை அடிப்படையாகக் கொண்டும் காணப்படுகின்றன . அவ்வாறே அதிக சனத்தொகையைக் கொண்ட அரசுகளும் குறைந்த சனத்தொகையைக் கொண்ட அரசு களும் காணப்படுகின்றன. தற்கால தேசிய அரசுகளுக்குரிய நிலப்பரப்பு மற்றும் மக்கள் தொகையைக் கணிப்பிடுவதன் மூலம் அவை எதிர்நோக்குகின்ற சமூக, பொருளாதார

வேறுபாடுகளைக் காணமுடியும். இப்பிரச்சினைகளைத் தீர்ப்பதும், சமூக, நீதி மற்றும் சமத்துவத்தைப் பாதுகாக்கும் வகையில் செயற்படுவதும் அரசின் அடிப்படைப் பொறுப்பாகும். அரசின் பொறுப்புகள் கீழே குறிப்பிடப்பட்டுள்ளன.

- சட்டம் மற்றும் சமாதானத்தைப் பாதுகாத்தல்.
- சமூக நல சேவைகளை வழங்குதல்.
- வறுமையை ஒழிக்க நடவடிக்கைகள் மேற்கொள்ளல்.
- பொதுச் சேவைகளை நடாத்திச் செல்லல்.
- அபிவிருத்தி செயற் திட்டங்களைச் செயற்படுத்தல்.
- போர், வன்முறைகள், இன முரண்பாடுகளைக் களைதல்.
- அடிப்படை மனித உரிமைகளைப் பாதுகாத்தல்.

**செயற்பாடு**

வறுமை ஒழிப்பு மற்றும் சமூகநல சேவைகளை வழங்கும் அரசு என்ற வகையில் இலங்கை முன்னெடுக்கும் செயற்பாடுகளை உதாரணங்காட்டி சுவரொட்டி ஒன்றுக்கான ஆக்கம் ஒன்றை வடிவமைக்குக

## அரசின் பிரதான வகைகள்

அரசில் யாப்பின் ஊடாக மத்திய அரசு மற்றும் பிரதேச நிர்வாக நிறுவனங்களுக்கிடையில் வழங்கப்பட்டுள்ள அதிகாரங்களின் அடிப்படையில் அரசுகளை பின்வருமாறு வகைப்படுத்தலாம்.

- ஒற்றையாட்சி
- கூட்டாட்சி (சமஷ்டி ஆட்சி)

### ஒற்றையாட்சி

ஒரு மத்திய அரசின் கீழ், அதிகாரங்கள் ஒன்று குவிக்கப்பட்ட அரசு ஒற்றையாட்சி எனப்படும். சட்டவாக்கம், நிறைவேற்று, நீதித்துறைகளை நடைமுறைப்படுத்தப் படுத்தும் முக்கிய பொறுப்பு இம் மத்திய அரசுக்கு உண்டு.

ஒற்றையாட்சியில் பிரதேச, நிர்வாக நிறுவனங்கள் மூலம் மத்திய அரசால் வழங்கப்படும் நிர்வாக அதிகாரங்கள் நடைமுறைப்படுத்தப்படும். (இது பற்றிய தெளிவான விளக்கம் 2 ஆம் அத்தியாயத்தில் வழங்கப்பட்டுள்ளது)

### கூட்டாட்சி/ சமஷ்டி ஆட்சி

இரு வகையான அரசாங்கங்களினால் செயற்படுத்தப்படும் ஆட்சிமுறை கூட்டாட்சி எனப்படும். இங்கு சட்டவாக்கம், நிறைவேற்று, நீதி அதிகாரங்கள் மத்திய அரசு மற்றும் மாநில அரசாங்கங்களினால் நிறைவேற்றப்படும். (இது பற்றிய தெளிவான விளக்கம் 2 ஆம் அத்தியாயத்தில் வழங்கப்பட்டுள்ளது)

## செயற்பாடு

ஒற்றையாட்சி, கூட்டாட்சி முறைகளின் அடிப்படைப் பண்புகளை வெவ்வேறாக அட்டவணைப்படுத்துக.

## அரசாங்கம்

அரசின் விருப்பத்தைச் செயல்வடிவம் பெறச் செய்யும் முகவரை அரசாங்கம் எனக் குறிப்பிடலாம். சட்டம் மற்றும் சமாதானத்தைப் பாதுகாத்தலும், மக்களைப் பொது நோக்கில் இட்டுச் செல்வதும் அரசாங்கமாகும்.

*''அரசின் அல்லது மக்களின் விருப்பங்களைக் கொள்கைகளாக மாற்றுவதன் மூலம் அவற்றை நடைமுறைக்குக் கொண்டு வரும் பிரதிநிதி அரசாங்கமாகும்.''*

**- பேராசிரியர் காணர் -**

சனநாயக ஆட்சி முறையின் கீழ் தேர்தல் மூலம் மக்களின் பெரும்பான்மை ஆதரவுடன் அரசாங்கம் தெரிவு செய்யப்படும். தேர்தலின் போது வெளிப்படும் பொதுசன அபிப்பிராயத்துக்கு அமைய அரசாங்கம் மாற்றமடையலாம்.

அரசாங்கம் கீழே குறிப்பிடப்பட்டுள்ள மூன்று துறைகளால் ஆனது

**அரசாங்கம்**

**சட்டத்துறை** **(சட்டம் இயற்றல்)**

**நிறைவேற்றுத்துறை** **(சட்டம் நடைமுறைபடுத்தல்)**

**நீதித்துறை** **(நியாயத்தை நிலைநாட்டல்)**

## செயற்பாடு

அரசு மற்றும் அரசாங்கத்திற்கான வேறுபாடுகளை விளக்குக.

### அரசாங்கத்தின் பிரதான கூறுகளும் அவற்றின் செயற்பாடுகளும்

அரசாங்கமானது சட்டத்துறை, நிறைவேற்றுத்துறை, நீதித்துறை ஆகிய முக்கிய கூறுகளால் ஆக்கப்பட்டுள்ளது.

## சட்டத்துறை

குறித்த கால எல்லைக்குள் நடைபெறும் தேர்தல் மற்றும் சர்வசன வாக்குரிமையின் அடிப்படையில் சட்டத்துறையின் பிரதி நிதிகள் மக்களால் தெரிவு செய்யப்படுவர்.



உரு 1.5 இலங்கைப் பாராளுமன்றம்

**சட்ட சபையின் செயற்பாடுகள்**

- சட்டத்தை உருவாக்குதல்
- நிதி நிர்வாகம்
- நிறைவேற்றுத் துறையை வழி நடாத்துதல்

## நிறைவேற்றுத்துறை

சட்டத்துறையின் மூலம் உருவாக்கப்படும் சட்டங்களை நடைமுறைப்படுத்தும் நிறுவனம் நிறைவேற்றுத்துறையாகும். நிறைவேற்றுத்துறைக்குப் பிரதிநிதிகளைத் தெரிவு செய்தலானது அரசாங்கத்தின் தன்மையில் தங்கியுள்ளது. பாராளுமன்ற ஆட்சி முறையில் பிரதமர் உள்ளிட்ட அமைச்சர்கள் நிறைவேற்றுத்துறை உறுப்பினர்களாவர். அவர்கள் பொதுத் தேர்தல் ஒன்றின் போது பெரும்பான்மை ஆசனங்களைப் பெற்று கொண்ட அரசியல் கட்சி அல்லது குழுவிலிருந்து தெரிவு செய்யப்படுவர்.

சனாதிபதி ஆட்சி முறையில் நிறைவேற்றுத்துறையின் தலைவராக சனாதிபதி தெரிவு செய்யப்படுவது, அப்பதவிக்காக நடைபெறும் தேர்தல் ஒன்றின் மூலமாகும்.

## நீதித்துறை

சட்டத்துறையால் இயற்றப்படும் சட்டங்களை நிறைவேற்றுத்துறை நடைமுறைப் படுத்தும் போது தோன்றும் பிரச்சினைகளைத் தீர்த்துவைக்கும் நிறுவனமே நீதித் துறையாகும். நியாயத்தை நிலை நிறுத்துவது நீதித்துறையின் முக்கிய கடமையாகும்.

மக்கள் உரிமைகளைப் பாதுகாத்தல் மற்றும் அரசியல் யாப்பின் பாதுகாவலனாகச் செயற்படுதல் என்பவற்றில் நீதித்துறை மிக முக்கிய பங்கினை ஆற்றுகின்றது.

கூட்டாட்சியில் மத்திய அரசாங்கம் மற்றும் மாநில அரசாங்களுக்கிடையிலான முரண்பாடுகளைத் தீர்த்துவைப்பது நீதித்துறையின் மேல்நிலை நீதிமன்றங்களாகும். நீதித்துறைக்கான நீதிபதிகளைத் தெரிவு செய்வது தொடர்பான விடயங்கள் அந்தந்த நாடுகளின் அரசியல் யாப்புக்களில் உள்ளடக்கப்பட்டிருக்கும்.

## செயற்பாடு

சட்டத்துறை, நீதித்துறை, நிறைவேற்றுத்துறை என்பவற்றின் செயற்பாடுகளை வெவ்வேறாக அட்டவணைப்படுத்துக.

## அரசாங்க முறைகளின் வகைகள்

தற்கால அரசுகளில் செயற்படுத்தப்படும் அரசாங்க முறைகளை இரண்டாக வகைப்படுத்தலாம்.

- பாராளுமன்ற அரசாங்க முறை
- சனாதிபதி அரசாங்க முறை

### பாராளுமன்ற அரசாங்க முறை

மக்களால் குறித்த கால எல்லைக்காகத் தெரிவு செய்யப்படும் பிரதிநிதிகளைக் கொண்ட பாராளுமன்றத்தாலும், பாராளுமன்றத்தால் தெரிவு செய்யப்படும் நிறைவேற்றுத் துறையாலும் சுயாதீனமான நீதித்துறையாலும் உருவாக்கப்படும் அரசாங்க முறை பாராளுமன்ற அரசாங்க முறை எனலாம்.

பாராளுமன்ற அரசாங்க முறையில் நிறைவேற்றுத்துறை உறுப்பினர்கள் நேரடியாக பாரளுமன்ற பிரதிநிதிகளிலிருந்தே தெரிவு செய்யப்படுவர். இதனால் நிறைவேற்றுத் துறையினர் நேரடியாகப் பாராளுமன்றத்திற்குப் பொறுப்புக் கூறல் வேண்டும். இதற்கமைய பாராளுமன்ற அரசாங்க முறையை பொறுப்பு கூறும் அரசாங்க முறை எனவும் விளக்கலாம். பிரதமர் உள்ளிட்ட அமைச்சர்கள் குழு தங்களது நிறைவேற்றுக் கருமங்கள் தொடர்பாக பாராளுமன்றத்திற்கு கூட்டாகப் பொறுப்புக் கூறுதல் அவசியமாகும். இச் செயற்பாட்டிலிருந்து விலகும் எந்தவொரு சந்தர்ப்பத்திலும் அரசாங்கத்தை தோல்வியுறச் செய்யும் ஆற்றல் சட்டத்துறைக்கு உள்ளது.

பாராளுமன்ற அரசாங்க முறையானது இரு நிறைவேற்றுப் பிரிவுகளைக் கொண்டிருப் பதைக் காணலாம். அவை பெயரளவு நிர்வாகம் (நாமநிர்வாகம்), உண்மை நிர்வாகம்(அரசியல் நிர்வாகம்) என்பனவாகும். பெரிய பிரித்தானியாவில் பெயரளவு நிர்வாகி முடி (அரசர் அல்லது அரசி) ஆவார். அங்கு சம்பிரதாய முறையில் இது பின்பற்றப்பட்டு வருகின்றது.

பாராளுமன்ற அரசாங்க முறையில் பெயரளவிலான நிர்வாகி பிரதமரால் தெரிவு செய்யப்படுவார். இத்தகைய பெயரளவிலான நிர்வாகி தன்னுடைய அதிகாரங்களைப் பிரதமரின் ஆலோசனைப்படி நிறைவேற்றுவார்.

பாராளுமன்ற ஆட்சி முறையில் அரசியல் நிர்வாகம் என்பது நேரடியாக மக்கள் வாக்குகள் மூலம் தெரிவு செய்யப்பட்ட பிரதமர் உள்ளிட்ட அமைச்சர் குழுவாகும்.

### பாராளுமன்ற அரசாங்க முறையின் பண்புகள்

- இது பெயரளவு நிர்வாகம் மற்றும் உண்மை நிர்வாகம் என இரு பிரிவுகளைக் கொண்டு இருக்கும்
- சட்டத்துறையின் மூலம் நிறைவேற்றுதுறை தெரிவுச் செய்யப்படும்.
- சட்டத்துறைக்கும் நிறைவேற்றத்துறைக்கும் நேரடித் தொடர்பு காணப்படும்
- நிறைவேற்றுத்துறை தனது செயற்பாடுகள் தொடர்பாக சட்டத்துறைக்குப் பொறுப்புக் கூறக் கடமைப்பட்டுள்ளது.
- சட்டத்துறையால் நிறைவேற்றுத்துறையைப் பதவி விலக்க முடியும்.

### சனாதிபதி அரசாங்க முறை

நாட்டின் நிர்வாக அதிகாரங்கள் யாப்பு ரீதியாகத் தனியொரு நபரான சனாதிபதியிடம் ஒப்படைக்கப்பட்டிருப்பின், அதனைச் சனாதிபதி அரசாங்க முறை எனலாம்.

**சனாதிபதி அரசாங்க முறையின் விசேட பண்புகள்**

- நிறைவேற்றுத்துறையின் நிறைவேற்று அதிகாரத்தை செயற்படுத்துபவர் சனாதிபதியாவார்.
- அரச தலைவரும் அரசாங்கத்தின் தலைவரும் சனாதிபதியாவர்.
- நிறைவேற்றுதுறை, சட்டத்துறைக்கு நேரடியாகப் பொறுப்புக் கூறவேண்டிய அவசியம் இல்லை.
- சட்டத்துறையின் மூலம் நிறைவேற்றுத்துறையை நேரடியாக கட்டுபடுத்த முடியாது.

அனைத்து நிறைவேற்று அதிகாரங்களும் சனாதிபதியிடம் குவிந்துள்ளதோடு ஓர் அரசியல் யாப்பின் மூலம் சனாதிபதி பாராளுமன்றப் பொறுப்பிலிருந்து விடுவிக்கப்பட்டும் தமது கொள்ளைகள் தொடர்பாக பாராளுமன்றத்துக்குப் பொறுப்புக்கூறத் தேவையில்லாததும் சனாதிபதி சுயா தீனமான நிலைப்பாடுள்ளதுமான ஓர் ஆட்சி முறையே சனாதிபதி ஆட்சி முறையாகும்.

**- பேராசிரியர் காணர் -**

## செயற்பாடு

- பாராளுமன்ற ஆட்சி முறை மற்றும் சனாதிபதி ஆட்சி முறைகளுக் கிடையிலான வேறுபாடுகளைப் பட்டியல் படுத்துக.

- 1978 ஆம் ஆண்டின் இரண்டாம் குடியரசு யாப்பின்படி சனாதிபதியைத் தெரிவு செய்யும் முறையையும் அவரது அதிகாரங்களையும் சுருக்கமாக விளக்குக.

## பிரசைகளின் பொறுப்புகள்

சனநாயக சமூகத்தின் பிரசை ஒருவருக்கு சிவில், பொருளாதார, அரசியல் உரிமைகளை அனுபவிப்பதற்கான சந்தர்ப்பங்கள் வழங்கப்பட்டுள்ளன. இவ் உரிமைகளை அனுபவிப்பதோடு அதனூடான பொறுப்புகளை சமூகத்தில் நிறைவேற்றுதல் பிரசை களின் பிரதான கடமையாகும். அக்கடமைகளைப் பின்வருமாறு பாகுபடுத்தலாம்.

- சட்ட ரீதியான கடமைகள்
- பண்பாட்டு ரீதியான கடமைகள் (ஒழுக்கவியல் கடமைகள்)

அரசுக்குரிய வரியைச் செலுத்துதல், நடைமுறையிலுள்ள சட்டங்களை மதித்தல், அரசியல் யாப்பினைப் பாதுகாத்தல், சட்டம் மற்றும் சமாதானத்தைப் பாதுகாக்க உதவுதல் ஆகியன சட்டரீதியான கடமைகளுக்கு உதாரணங்கள் ஆகும். சட்டக் கடமைகளை நிறைவேற்றாமை தண்டனைக்குரிய குற்றமாகும்.

பெரியோரை மதித்தல், சமூகப் பழக்க வழக்கங்களைக் கடைப்பிடித்தல் என்பன பண்பாட்டு கடமைகளுக்கு உதாரணங்களாகும். பாண்பாட்டுக் கடமைகளை நிறைவேற்றுவதில் நீதிபதியாக விளங்குவது தனிமனிதனின் மனசாட்சியாகும்.

தனிநபர் ஒருவர் தனது உரிமைகளை அனுபவிக்கும் போது அது சமூக அபிவிருத்திக்கு உதவ வேண்டும். ஏதேனும் ஒரு தொழிலில் ஈடுபட ஒருவருக்கு உரிமையுண்டு எனினும் அத்தொழிலுக்கு ஏற்ப அதனை அர்ப்பணிப்புடன் சமூக வளர்ச்சிக்காக நிறைவேற்றுவது அவருடைய கடமையாகும்.
பிரசைகளின் கடமைகள் தொடர்பான விளக்கம் பெறுவதற்கு இலங்கை சனநாயகக் குடியரசின் இரண்டாம் குடியரசு யாப்பு (1978) குறிப்பிடும் பின்வரும் விடயத்தை நன்கு அவதானியுங்கள்.

28 ஆம் அத்தியாயம்: உரிமைகள் மற்றும் பல்வேறு சுதந்திரங்கள் செயற்படுவதும் அவற்றை அனுபவிப்பதும் கடமைகள், பொறுப்புகளை நிறைவேற்றுவதற்குப் புறம்பாக நிகழ முடியாது.

அ. அரசியல் யாப்பு மற்றும் சட்டத்தைப் பாதுகாத்துக் கடைப்பிடித்தல்.

ஆ. தேசிய அபிவிருத்தியை வளர்ச்சியடையச் செய்வதோடு தேசிய ஒற்றுமையைப் போசித்தல்.

இ. தம்மால் தெரிவு செய்யப்பட்ட தொழிலில் மனச்சாட்சிக்கமைய துரோகமின்றி சேவை செய்தல்.

ஈ. பொதுச் சொத்துக்களைப் பாதுகாக்கவும் பொதுச் சொத்துக்களை வீண்விரயம் செய்தலுக்கும் அவற்றை முறைக்கேடாக பயன்படுத்தலுக்கும் எதிராகச் செயற்படுதல்.

உ. ஏனையோருடைய உரிமைகளுக்கும், சுதந்திரங்களுக்கும் மதிப்பளித்தல்.

ஊ. இயற்கைச் சூழலையும் வளங்களையும் பாதுகாப்பதும் இலங்கைவாழ் மக்கள் ஒவ்வொருவரினது கடமையாகும்.

## அரசின் பிரசைகள் மீதான பொறுப்புகள்

பிரசைகளின் பொறுப்புகளைப் போன்றே அரசுக்கும் பிரசைகள் மீது பொறுப்புகள் உண்டு. பல்வேறு அரசுகளில் அதன் அரசியல் யாப்புகளில் இப் பொறுப்புக்கள் அரச கொள்கைகளாக உள்ளடக்கப்பட்டுள்ளன. அரசு தனது அரசாட்சியை நடைமுறைப்படுத்தும் போது மக்கள் சமூகத்திற்கு நிறைவேற்றவேண்டிய பொறுப்புகள் இதன் மூலம் விளக்கப்பட்டுள்ளன.

***அரசின் பிரசைகள் மீதான பொறுப்புகளுக்கு சில உதாரணங்கள் கீழே தரப்பட்டுள்ளன.***

- சட்டத்தையும் சமாதானத்தையும் பாதுகாத்தல்.
- சமத்துவம் எனும் மூலக் கொள்கையைப் பாதுகாத்தல்.
- அரசியல் யாப்பிற்கமைய செயற்படுதல்.
- சட்டத்தினையும் நியாயத்தையும் பேணல்.
- நாட்டின் வளங்களை நியாயமாகப் பகிர்ந்தளித்தல்.
- அரச நிதியை பயன்படுத்தும் போது வெளிப்படைத் தன்மையைப் பேணல்.
- சமூகப் பாதுகாப்பையும் நலன்களையும் பேணல்.
- சுற்றாடலைப் பாதுகாத்துப் பராமரித்தல்.

**செயற்பாடு**

1. மாணவர் என்ற வகையில் நீங்கள் அனுபவிக்கும் உரிமைகள் மூன்றைக் குறிப்பிட்டு அதற்காக நீங்கள் நிறைவேற்றிய கடமைகளையும் பட்டியல் படுத்துக.

2. குடும்ப அங்கத்தவர் என்ற வகையில் உமக்குக் கிடைக்கும் உரிமைகளையும் அவ்வுரிமைகளுடனான உமது கடமைகளையும் பட்டியல்படுத்துக.

3. எதிர்காலப் பிரசைகள் என்ற வகையில் நீங்கள் நாட்டுக்கு ஆற்ற வேண்டிய கடமைகளைப் பட்டியற்படுத்துக.

## சனநாயக ஆட்சி முறை வெற்றிபெற அவசியமான காரணிகள்

சனநாயக ஆட்சிமுறை வெற்றிபெற பல காரணிகள் உள்ளன, அவற்றில் சில காரணிகள் பின்வருமாறு

### சுதந்திரமானதும் நீதியானதுமான தேர்தல்

சுதந்திரமானதும் நீதியானதுமான தேர்தலில் இருக்க வேண்டிய பண்புகள் தொடர்பாக இதற்கு முன்பு சனநாயக ஆட்சிமுறையின் பண்புகள் எனும் தலைப்பில் கற்றறிந்தீர்கள். சனநாயக ஆட்சிமுறையில் ஆட்சியாளர்கள் தெரிவு செய்யப்படுவர். சர்வசன வாக்குரிமை மூலம் நடைபெறும் தேர்தல் மூலம் வாக்காளர் எவ்விதத் தடைகளும் பாதிப்புகளும் இன்றி தனது அரசியல் அபிப்பிராயங்களை தேர்தலின் மூலம் வெளிப்படுத்துவதற்கு சந்தர்ப்பம் வழங்குதல் மிகவும் அவசியமாகும். இது சுதந்திரமான தேர்தலின் பிரதான பண்பாகும்.

நியாயமான தேர்தல் என்பது தேர்தலை எதிர்கொள்ளும் சகல அரசியல் குழுக்களுக்கும் சமமான வாய்ப்பையும் சுதந்திரமான தேர்தல் செயற்பாடுகளில் ஈடுபடுவதற்கான சூழலையும் அமைத்துக் கொடுப்பதாகும்.

தேர்தல்களை நடத்துவது மாத்திரம் சனநாயகத்தின் நடைமுறைக்குப் போதுமான தாகாது. அத்தேர்தல் சுதந்திமானதும் நியாயமானதுமான தேர்தலாக இருத்தல் வேண்டும்.

சுதந்திரமானதும் நியாயமானதுமான தேர்தலானது, ஆட்சியாளர்கள் அதிகாரத்திற்கு வருவதற்கும் மக்களின் ஒத்துழைப்பு, நம்பிக்கை, என்பன ஆட்சியாளர்கள் மீது ஏற்படுவதற்கும் காரணமாகின்றது. இந்நிலையினை அரசாங்கத்தின் நல்ல தன்மையாகக் கொள்ளலாம்.

## சட்டத்தின் ஆட்சி நடைபெறுதல்

பிரசைகளின் வெளிநடத்தைக் கோலத்தைக் கட்டுப்படுத்துவதற்காக அரசால் நடைமுறைப் படுத்தப்படும் நிபந்தனைகளே சட்டங்கள் எனப்படும். இச் சட்டங்களுக்கு ஆளும் மற்றும் ஆளப்படுவோர் எனும் இருத்தரப்பினரும் கீழ்ப் படிதல், கட்டுப்படுதல், மதிப்பளித்தல் என்ப வற்றுடன் சட்டத்தை மீறி நடக்கவும் கூடாது. நாட்டின் அனைத்து விடயங்களையும் விட சட்டமே உயர்வானது. சட்டத்தின் பாதுகாப்பு சகலருக்கும் சமமாகக் கிடைத்தல் வேண்டும். இதனைச் சட்டத்தின் ஆட்சி எனச் சுருக்கமாகக் கூறலாம்.



உரு 1.6

சட்டத்தின் ஆட்சியானது, அரசாங்கம் தமது செயற்பாடுகளை எவ்விதத் தங்கு தடையுமின்றிக் கொண்டு செல்வதற்கு உதவுவதோடு மக்கள் அரசாங்கத்தின் மீது கொண்டுள்ள நம்பிக்கையை உறுதிப்படுத்தவும் காரணமாகின்றது.

## நீதித்துறை சுதந்திரமாகச் செயற்படுதல்

சனநாயகத்தைக் கட்டியெழுப்புவதில் பிரதான அங்கமாக நீதித்தறை விளங்குகின்றது. இந்நீதித்துறை நிறுவனங்களை எவ்விதத் தடைகளுமின்றி நடாத்தி செல்வது சனநாயக ஆட்சி முறையின் வெற்றிக்கு மிகவும் அவசியமாகும். நடைமுறையில் இருக்கும் சட்டங்களுக்கு அமைவாகப் பக்கச்சார்பற்ற தீர்ப்பைப் பெற்றுத்தர வேண்டுமாயின் நீதித்துறையில் எவரும் தலையிடாது அதனைச் சுதந்திரமாகச் செயற்படவிடுதல் அவசியமாகும். நாட்டிலுள்ள சகலரும் நடைமுறையிலுள்ள சட்டத்திற்கமைய நீதியையும் நியாயத்தையும் பெற்றுக்கொள்ள முடியும். சனநாயக அரசுகள் அரசியல் யாப்பின் மூலம் நீதித்துறையின் சுதந்திரத்தைப் பாதுகாப்பதற்கான ஏற்பாடுகளை மேற்கொண்டுள்ளன. சுதந்திரமான நீதித்துறையானது நீதியையும் நியாயத்தையும் மதிக்கின்ற ஒரு சமூகத்தைக் கட்டியெழுப்ப உதவுகின்றது.

## அரசியல் அறிவு படைத்த மக்கள் இருத்தல்

தேர்தல் ஒன்றின் போது மக்கள் பொருத்தமான ஓர் அரசாங்கத்தைத் தெரிவு செய்வது சனநாயக ஆட்சி முறையின் வெற்றிக்கு அவசியமாகின்றது. இச் செயற்பாட்டில் மிக முக்கியபங்கு வகிப்பவர்கள் வாக்காளர்களே.

தேர்தலில் போட்டியிடும் பல்வேறு அரசியல் கட்சிகள் மற்றும் குழுக்கள் தமது கொள்கைகளை மக்களுக்கு முன் வைக்கும். இக் கொள்கைகளைக் கருத்திற் கொண்டு தமது எண்ணத்தை சரியாக வெளிப்படுத்தப் போதுமான அரசியல் அறிவு அல்லது விளக்கம் வாக்காளருக்கு இருப்பது அவசியமாகும்.

அவ்வாறே சிறந்த சமூகத்திற்கு முன்மாதிரியான நல்ல நடத்தை உள்ள, சமூகத்தில் சிறந்த தலைமை தாங்கக் கூடிய ஆற்றல் உள்ள வேட்பாளர்களைத் தெரிவு செய்வதில் வாக்காளர்கள் கவனம் செலுத்த வேண்டும். சமூக விரோத செயற்பாடுகளில் ஈடுபட்ட அரசியல் வாதிகள் தேர்தலின் மூலம் மீண்டும் அதிகாரத்திற்கு வருவதைத் தடுப்பதற்கு அறிவுள்ள வாக்காளருக்கு முடியும்.

அதன் மூலம் நாட்டில் சிறந்த ஆட்சி முறையைக் கட்டியெழுப்புவதற்கு அறிவுள்ள வாக்காளருக்கு பங்களிப்புச் செய்ய முடியும். நாட்டில் அரசியல் அறிவுள்ள மக்கள் இருப்பது சமாதானமான அரசியல் சூழலைக் கட்டியெழுப்புவதற்கும் ஊழல் மற்றும் துஷ்பிரயோகமற்ற சமூக நடைமுறைக்கும் மிகவும் இன்றியமையாததாகும்.

**செயற்பாடு**

வாக்காளர்கள் தமது வாக்களிப்பின் போது கவனத்தில் கொள்ள வேண்டிய அம்சங்களை பட்டியற்படுத்துக.

## சிறந்த பொருளாதார நிலையில் நாடு இருத்தல்

அடிப்படை மனிதத் தேவைகள் சிறந்த முறையில் நிறைவேற்றப்படுவது சனநாயக ஆட்சியின் பலத்தின் மீது தாக்கம் செலுத்தும் மிக முக்கிய காரணியாகும். உணவு, உடை, உறையுள், கல்வி, சுகாதாரம் மற்றும் பொதுச் சேவைகள் ஆகியன போதுமான அளவு அனுபவிக்கக் கிடைப்பது சனநாயக சமூகத்தின் நிலைபேற்றுக்கு ஆதாரமாகும். சுதந்திரம், உரிமைகள், சமத்துவம் போன்ற குணாம்சங்கள் நிலைத்திருப்பது சிறந்த பொருளாதார நிலையிலாகும். இதனால் சனநாய ஆட்சி முறையின் கீழ் பெரும்பாலும் இத்தேவைகளைப் பூர்த்திசெய்வதற்காக சமூக நலனோம்பல் செயற்பாடுகள் நடைமுறைப்படுத்தப்படல் வேண்டும்.

## சுதந்திரமானதும் பக்கச்சார்பற்றதுமான ஊடகம் இருத்தல்

'சனநாயக ஆட்சி முறையின் பண்புகள்' எனும் தலைப்பில் ஊடகங்களின் செயற்பாடுகள் தொடர்பாக அறிந்துகொள்ளும் சந்தர்ப்பம் உங்களுக்கு கிடைத்தது.

தகவல்களை அறிந்துக் கொள்ளும் உரிமை சனநாயக சமூகத்தில் அத்தியாவசியமானது. அதை உறுதி செய்யும் பொறுப்பு ஊடகங்களுக்கு உண்டு சுதந்திரமாகவும் பக்கச்சார்பின்றியும் ஊடகங்கள் செயற்படுவதற்கான சூழல் இருப்பதும் சனநாயகத்தின் வெற்றிக்கு காரணமாக அமையும்.

அவ்வாறே பக்கசார்பின்றி செய்திகளை வழங்குவதும் உண்மையான தகவல்களை பொறுப்புடன் வழங்குவதும் ஊடகங்களுக்கான பொறுப்புகளும் கடமைகளும் ஆகும். அவ்வாறு செயற்படுவதன் மூலம் சரியான மக்கள் கருத்தை கட்டியெழுப்பவதற்கு ஊடகங்களுக்கு சந்தர்ப்பம் கிடைக்கும்.

## சனநாயகப் பிரசைகளிடம் காணப்படும் பண்புகள்

சனநாயகப் பண்புகள் மக்கள் சமூகத்திற்குள் நிலவுவது சனநாயக ஆட்சி முறையின் வெற்றிக்கு காரணமாக அமையும். சனநாயகப் பிரசைகளிடம் காணப்படும் முக்கிய பண்புகள் சில கீழே குறிப்பிடப்பட்டுள்ளன.

- கலந்துரையாடல்மூலம் தீர்மானங்களுக்கு வரல்.
- எதிர்க்கருத்துக்களை சகித்துக் கொள்ளும் மனப்பான்மையை உயர்த்திக் கொள்ளல்.
- பெரும்பான்மைக் கருத்துகளுக்கு மதிப்பளித்தல்.
- ஒத்துழைப்புடன் செயற்படுதல்.
- மனித உரிமைகளுக்கு மதிப்பளித்தல்.
- சட்டத்திற்கு மதிப்பளித்தல்.
- உரிமைகளை அனுபவிப்பதோடு கடமைகளை நிறைவேற்றுதல்.
- சனநாயகத்திற்குத் தடையாக இருக்கும் காரணங்களைத் தெரிந்து கொண்டு அபிவிருத்தி நோக்கிலான விமர்சனங்களை முன்வைத்தல்.

இதற்கமைய மக்கள் சமூகத்தின் முக்கிய நிறுவனங்களான குடும்பம், பாடசாலை, உயர்கல்வி நிறுவனங்கள், தொழில் நிலையங்கள் ஆகிய சகல நிறுவனங்களிலும் செயற்பாடுகளை நடைமுறைப்படுத்தும்போது அந்நிறுவன உறுப்பினர்கள் சனநாயக பண்புகளுக்கு மதிப்பளித்து செயற்படுதல் அவசியமாகும்.

## சனநாயக ஆட்சி முறையின் முக்கியத்துவம்

### சமமான உரிமைகள் கிடைக்கப்பெறுதல்

சனநாயக ஆட்சி முறையானது; தனிநபரின் சுதந்திரம், உரிமை, சமத்துவம் ஆகிய அடிப்படை எண்ணக்கருக்கள் மீது கட்டியெழுப்பப்பட்டதொன்றாகும். சனநாயக ஆட்சி முறையின் கீழ் சகலருக்கும் சமமான உரிமைகள் கிடைக்கப் பெறும் அதேவேளை, எவரும் வேறுபாட்டிற்கு உள்ளாக மாட்டார்கள். அவ்வாறான சூழ் நிலையைக் கட்டியெழுப்புவதற்குப் பொருத்தமான இயந்திரம் சனநாயக ஆட்சியில் நிலவுவதற்கு ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. உதாரணம், சனநாயக ஆட்சி முறை நிலவும் நாடுகளில் அரசியல் யாப்பு இருப்பதையும் அதற்கமைய செயற்படுவதையும் கூறலாம்.

சம உரிமைகளைப் பெற்றுக்கொள்ளவும் சமூக ஒருமைபாட்டைப் கட்டியெழுப் புவதற்கும் சமூக முரண்பாடுகளைக் குறைப்பதற்கும் தனிநபர் அபிவிருத்தியை ஏற்படுத்துவதற்கும் சனநாயக ஆட்சிமுறை அடிப்படை காரணமாக அமைகிறது. இதற்கமைய சமவுரிமைகளை அனுபவிப்பதற்கான சந்தர்ப்பங்களை மக்களுக்குப் பெற்றுக் கொடுப்பது முழுச் சமூகத்தின் அபிவிருத்திக்கும் பங்களிப்புச் செய்வதாக அமையும்.

### தனிநபர் இயலுமைக்கும் திறமைக்கும் ஏற்ற சந்தர்ப்பம் காணப்படல்

சனநாயக ஆட்சி முறை காணப்படும் நாடுகளில் மக்களுக்கு தமது இயலுமை மற்றும் திறமைகளை அபிவிருத்தி செய்து கொள்ளவதற்கான சந்தர்ப்பம் வழங்கப்படும். ஒரு நபர் தனது அறிவு, திறமைகளை வளர்த்துக் கொள்வதற்கான சந்தர்ப்பமும் கிடைக்கும். இதற்குத் தடைகளோ எல்லைகளோ ஒரு போதும் இருப்பதில்லை.

கல்வி தொழில் பயிற்சிக்கான சந்தர்ப்பங்களைப் பெற்றுக் கொடுப்பதோடு அவர்களிடம் காணப்படும் விசேட திறமைகளை இனங்கண்டு அவற்றை அபிவிருத்தி செய்துகொள்ளவும் சந்தர்ப்பம் கிடைக்கும்.

சுதந்திரம், உரிமைகள், சமத்துவத்தை அடிப்படையாகக் கொண்டு அவற்றை அனுபவிப்பதற்கு சந்தர்ப்பம் கிடைத்தல், தனிநபர் இயலுமை மற்றும் திறமைகளின் வளர்ச்சிக்கு மிகவும் உதவியாகும்.

### பிரசைகளுக்கு ஆட்சியில் பங்குகொள்ளச் சந்தர்ப்பம் கிடைத்தல்

சனநாயக ஆட்சிமுறையில் விசேட பண்பாகக் காணப்படுவது பிரசைகளுக்கு ஆட்சியில் பங்குகொள்ளக் கிடைக்கும் அரசியல் உரிமையாகும். நேரடியாக ஆட்சியில்

பங்குபற்ற முடியாமையினால் பிரதிநிதிகள் ஊடாக ஆட்சியில் பங்குகொள்ளும் சந்தர்ப்பம் மக்களுக்குக் கிடைக்கின்றது. அதற்கமைய சர்வசன வாக்குரிமை மூலம் ஆட்சியாளர்களைத் தெரிவு செய்வது வாக்காளர்களாவர். சனநாயக ஆட்சியில் தேர்தல் செயற்பாடுகளில் கலந்துகொள்ள மக்களுக்கு சந்தர்ப்பம் கிடைப்பதுடன் தேர்தலின் போது வேட்பாளராகவும் முடியும். அவ்வாறே தேர்தலின்போது ஆட்சிக்கு வரும் அர சாங்கத்தின் செயற்பாடுகள் பற்றி அவதானித்து அது தொடர்பாக தமது கருத்துக்களை முன்வைக்கும் உரிமையும் மக்களுக்கு உண்டு.

## தனி மனித அபிவிருத்திக்கு முக்கியத்துவமளித்தல்

உணவு, உடை, உறையுள், கல்வி, சுகாதாரம், தொழில் மற்றும் வேறு பொதுவச திகள் ஆகியன மனித அபிவிருத்தியில் தாக்கம் செலுத்தும் காரணிகளாகும். மக்களின் வாழ்க்கை நிலையில் தரமான அபிவிருத்தியை ஏற்படுத்துவதற்கு இக்காரணிகள் உதவுகின்றன.

சனநாயகம் செயற்படும் போது பல்வேறு அரசியல் கட்சிகள் அதிகாரத்தைப் பெற்றுக் கொள்ள பெரும் போட்டியில் ஈடுபட்டிருக்கும். இப் போட்டியின் போது மக்களுக்கு முன்வைக்கும் கொள்கைகளில் மக்கள் நலன் சார்ந்த வேலைத் திட்டங்களுக்கே அதிக முன்னுரிமை கொடுக்கப்பட்டிருக்கும். இவ்வாறு செயற்படுவது சனநாயக ஆட்சியின் முக்கிய பண்பாகும். சனநாயக வளர்ச்சியோடு அரசு, நலன்புரி நிறுவனமாக 20 ஆம் நூற்றாண்டின் முதல் தசாப்தத்தில் மாற்றமடைந்தது. இதற்கமைய சனநாயக ஆட்சி முறை நடைபெறும் நாடுகளில் கல்வி, சுகாதாரம் போன்ற சேவைகள் இலவசமாக பெற்றுக்கொடுப்பதற்கான சந்தர்ப்பங்கள் ஏற்பட்டன. இலங்கை அதற்கு ஓர் உதாரணம் ஆகும்.

## சுமுகமான சமூகம் ஒன்றைக் கட்டியெழுப்புவதற்கான அடித்தளம் காணப்படுதல்

தற்கால மக்கள் சமூகம், பல்வேறு கலாசாரங்களைப் பின்பற்றி வருகின்றன. சனநாயக ஆட்சி முறையில் மக்கள் அனைவரும் ஆட்சியில் பங்குதாரர்களாவர். சனநாயக ஆட்சியின் பண்புகள் சுமுகமான மக்கள் சமூகத்தை கட்டியெழுப்புவதற்கு உதவி புரிகின்றன. அவ்வாறான சில பண்புகள் பின்வருமாறு

- சட்டத்தின் ஆட்சி இருத்தல், நீதித்துறை சுதந்திரமாகச் செயற்படுதல்.
- சுதந்திரம், சமத்துவம் மற்றும் சமவுரிமைகள் கிடைக்கப்பெறுதல்.
- பெரும்பான்மையினரின் கருத்துக்களுக்கு, அபிப்பிராயங்களுக்கு மதிப்பளித்தல்
- சிறுபான்மையினரின் கருத்துகளுக்கு மதிப்பளித்தல்.
- கலந்துரையாடல் மூலம் தீர்மானங்களை எடுத்தல்.
- மக்கள் தமது கருத்துகளை சுமூகமாக முன்வைக்கச் சந்தர்ப்பம் காணப்படுதல்

### சமூக நலனோம்பல் காணப்படுதல்

சனநாயக ஆட்சிமுறையின் வளர்ச்சியைத் தொடந்து அரசு, நலன்புரி நிறுவனமாக மாற்றமடைதல் 20 ஆம் நூற்றாண்டின் முதலாம் தசாப்தத்தில் ஆரம்பமாகியது. அதன் பயனாக மக்களின் வாழ்க்கைத் தரம் சிறப்படையும் பொருட்டு, சமூக நலன்புரிச் செயற்பாடுகளில் விசேட கவனம் செலுத்தப்படுகின்றமை சன நாயக ஆட்சி முறையில் காணக்கூடிய விசேட பண்பாகும்.

கல்வி, சுகாதாரம், வீடமைப்பு, போக்குவரத்து, சமூகப் பாதுகாப்பு, வறுமை ஒழிப்பு வேலைத்திட்டங்கள், முதியோர்பாதுகாப்பு வேலைத் திட்டங்கள் ஆகியன அரச தலையீட்டுடன் மேற்கொள்ளப்படுதல் இதற்கான எடுத்துக்காட்டுகளாகும்.



உரு 1.7

## செயற்பாடு

இலங்கைப் பிரசைகளுக்குப் பின்வரும் உரிமைகள் கிடைக்கப்பெறும் சந்தர்ப்பங்களுக்கான உதாரணங்களை அட்டவணையில் எழுதுக.

| **உரிமைகள்** | **கிடைக்கும் சந்தர்ப்பங்கள்** |
|---|---|
| 1. சமவுரிமை கிடைத்தல் | உதாரணம் - சட்டத்தின் முன் சமம்<br>1. ..............................................<br>2. .............................................. |
| 2. தனிநபர் இயலுமை திறமைகளை வளர்த்துக் கொள்ளல் | 1. ..............................................<br>2. .............................................. |
| 3. ஆட்சியில் பங்கு கொள்ளல் | 1. ..............................................<br>2. .............................................. |

பாடசாலை மாணவர் என்ற வகையிலும் குடும்ப அங்கத்தவர் என்ற வகையிலும் கீழ் காணப்படும் அட்டவணை நிரல் I இல் குறிப்பிடப்பட்டுள்ள பண்புகளை வளர்த்துக் கொள்ள உங்களுக்குக் கிடைக்கும் சந்தர்ப்பங்களை II ஆம் III ஆம் நிரல்களில் குறிப்பிடுக.

| **நிரல் I**<br>**பண்புகள்** | **நிரல் II**<br>**மாணவர் பண்புகள்** | **நிரல் III**<br>**குடும்ப அங்கத்தவர்** |
|---|---|---|
| 1. ஒத்துழைப்புடன் செயற்படுதல் | | |
| 2. ஏனையோர் கருத்துக்கு மதிப்பளித்தல் | | |
| 3. சட்டத்தை மதித்தல் | | |
| 4. கலந்துரையாடல் மூலம் தீர்மானம் எடுத்தல் | | |

# 02 அதிகாரத்தைப் பன்முகப்படுத்தலும் பகிர்ந்தளித்தலும்

## அறிமுகம்

அரசின் நிர்வாக நடவடிக்கைகளை மேற்கொள்வதற்கு அவ்வரசுக்குள்ள ஆற்றலே அதிகாரம் எனப்படும். அதிகாரத்தின் இறுதி உரிமை பொதுமக்களுக்குரியது. மக்களின் இவ்வதிகாரம் இறைமை எனப்படும். அதில் ஆட்சியதிகாரம், வாக்குரிமை, அடிப்படை உரிமைகள் எனும் மூன்று விடயங்கள் உள்ளடங்கும். அதிகாரம் என்பது பல்வகைப்படும். அரசியல் அதிகாரம், பொருளாதார அதிகாரம் என்பன அவற்றுள் சிலவாகும். அதிகாரத்தை நடைமுறைப்படுத்துவோர் தமக்கு விருப்பமான வகையில் அதிகாரத்துக்குட்பட்டோரை ஆட்சி செய்யும் அதேவேளை, தமது விருப்பத்திற்கு கீழ்ப்படியாதோரை வற்புறுத்துவதன் மூலம் அடி பணியவைக்க முயற்சித்தலும் அரசியல் கண்ணோட்டத்தில் அதிகாரம் என்பதற்கான வரைவிலக்கணமாகும். அரசுக்குரிய இவ்வதிகாரத்தை பன்முகப்படுத்தவோ பகிர்ந்தளிக்கவோ முடியும். எனவே இன்றைய அரசுகளில் அதிகாரம் பன்முகப்படுத்தப்படுவது போன்று, பகிர்ந்தளிக்கப்படுகின்றது. அர சொன்றின் அதிகாரம் பன்முகப்படுத்தப்படுவதோ பகிர்ந்தளிக்கப்படுவதோ அவ்வரசின் தேவையைப் பொறுத்தாகும். ஒரு நாட்டில் நிர்வாகத்தை இலகுபடுத்துவதற்காக மத்திய அரசின் நிர்வாக அதிகாரம் மாத்திரம் பிராந்திய நிர்வாக அலகுகளுக்கு வழங்கப்படுமாயின், அங்கு அதிகாரம் பன்முகப்படுத்தப்பட்டுள்ளது எனலாம். அதே போன்று, மத்திய அரசின் சட்டம், நீதி, நிறைவேற்றுத்துறை எனும் முத்துறை அதிகாரங்களிலும் குறிப்பிடத்தக்களவு அதிகாரங்கள் அரசியல் யாப்பின் மூலம் பிரதேச நிர்வாக அலகுகளுக்கு வழங்கப்படுமாயின், அங்கும் அதிகாரம் பகிர்ந்தளிக்கப்பட்டுள்ளது எனலாம்.

இவ்வலகைக் கற்பதன் மூலம் நீங்கள் அதிகாரம் எனும் எண்ணக்கரு அதன் பல்வேறு வடிவங்கள், அதிகாரத்தை பன்முகப்படுத்தலும் பகிர்ந்தளித்தலும், ஒற்றை மற்றும் சமஷ்டி ஆட்சி முறைகள், அதிகாரப் பங்கீடு, அதிகாரப் பன்முகப்படுத்தல் தொடர்பாக எமது நாட்டின் கடந்தகால அனுபவங்கள், ஐக்கிய அமெரிக்கா மற்றும் சுவிட்சர்லாந்து நாடுகளில் அதிகாரம் பகிர்ந்தளிக்கப்பட்டுள்ள விதம் என்பன பற்றிய தெளிவினைப் பெறலாம்.

## அதிகாரம்

சனநாயக ஆட்சி முறையில் அதிகாரம் என்பது, அரசின் ஆட்சி நடவடிக்கைகளை மேற்கொள்வதற்காக அவ்வரசுக்குள்ள ஆற்றலாகும். அதிகாரத்தின் இறுதி உரிமை பொதுமக்களிடமே உள்ளது. மக்களிடம் காணப்படும் அதிகாரமே இறைமை எனப்படும். நிர்வாக அதிகாரம், வாக்குரிமை, அடிப்படை உரிமை என்பன அதில் அடங்கும்.

இலங்கையில் 1978 அரசியல் யாப்பின்படி இறைமை அதிகாரம் செயற்படுத்தப்படும் விதம் பின்வருமாறு விபரிக்கப்படுகின்றது.

1. பொதுமக்களின் சட்டத்துறை அதிகாரம், மக்களால் தெரிவு செய்யப்படும் பிரதிநிதிகளால் ஆன பாராளுமன்றத்தினாலும் பொதுசன அபிப்பிராய வாக்கெடுப்பின் போது மக்களாலும் செயற்படுத்தப்படுதல் வேண்டும்.
2. நாட்டின் பாதுகாப்பு உட்பட மக்களின் நிர்வாக அதிகாரம் மக்களால் தெரிவு செய்யப்படும் குடியரசின் சனாதிபதியால் செயற்படுத்தப்படுதல் வேண்டும்.
3. மக்களின் நீதி அதிகாரம், அரசியல் யாப்பினால் அமைக்கப்படும் அல்லது அரசியல் யாப்பினால் ஏற்றுக்கொள்ளப்பட்ட அல்லது ஒரு சட்டத்தால் அங்கீகரிக்கப்பட்ட அல்லது வேறொரு சட்டத்தால் உருவாக்கப்பட்ட நீதிமன்றம், நீதி அதிகாரமுடைய நிறுவனங்கள் மூலம் பாரளுமன்றத்தால் செயற்படுத்தப்பட வேண்டும்.

### அதிகாரத்தின் வகைகள்

அதிகாரம் என்பது பல்வேறு வகைப்படும். அவை அரசியல் அதிகாரம், சமூக அதிகாரம், பொருளாதார அதிகாரம் ஆகியனவாகும்.

அரசியல் விஞ்ஞானக் கண்ணோட்டத்தின் படி ''அதிகாரத்தை நடைமுறைப் படுத்துவோர் தாம் விரும்பியவாறு அதிகாரத்துக்குட்பட்டோரை ஆட்சி செய்யும் ஆற்றலும் தமது விருப்பத்துக்கு இணங்காதபோது வற்புறுத்துவதன் மூலம் அடிபணியவைக்கும் ஆற்றலும் அதிகாரமாகும்.'' என்று வரைவிலக்கணப்படுத்துவர்.

''பொருளாதார முறையொன்றில் அதிகாரம் பெற்ற குழுவினரால் ஏனையோரை வழிநடத்துவதற்கு மேற்கொள்ளப்படும் முயற்சியே அதிகாரமாகும்.'' என்பது பொருளியல் நிபுணர்களின் வரைவிலக்கணமாகும்.

''ஒரு சமூகத்தில் வாழும் பிரசைகள் மற்றும் சமூக இயக்கங்கள் என்பவற்றுக்கு மேலாகச் செயற்படுவதற்கு சமூகத்திற்குள்ள ஆற்றலே அதிகாரமாகும்.'' என்பது சமூகவியல் ரீதியான வரைவிலக்கணமாகும்.

## அதிகாரத்தைப் பன்முகப்படுத்தல்

அதிகாரத்தைப் பன்முகப்படுத்தல் என்பது, மத்திய அரசிடமுள்ள நிர்வாக அதிகாரங்களுள் சிலவற்றை பிராந்திய நிர்வாக அலகுகளிடம் கையளித்தலாகும். அதாவது, நிர்வாக நடவடிக்கைகளை இலகுபடுத்தும் வகையிலும் பிராந்தியரீதியாக நபர்களை நிர்வாக நடவடிக்கைகளில் பங்குகொள்ளச் செய்யும் வகையிலும் மத்திய அரசுக்குரிய அதிகாரங்கள் பிராந்திய நிர்வாக அலகுகளிடம் ஒப்படைக்கப்படுதல் அதிகாரப் பன்முகப்படுத்தல் எனப்படும்.

அதிகாரத்தைப் பன்முகப்படுத்துகையில் அவதானிக்ககூடிய இருபிரதான இயல்புகளான மத்திய அரசின் சட்டத்துறையினால் அனுமதிக்கப்பட்ட மசோதா ஒன்றின் மூலம் அது செயற்படுத்தப்படுவதும். எந்தவொரு சந்தர்ப்பத்திலும் அவ்வதிகாரங்களை மத்திய அரசு திரும்பப் பெற்றுக் கொள்ள முடியும் என்பதுமாகும். இதற்குச் சிறந்த உதாரணம் இலங்கையின் உள்ளூராட்சி மன்றங்களுக்கு வழங்கப்பட்டுள்ள அதிகாரங்களாகும்.

அதிகாரத்தைப் பன்முகப்படுத்துகையில் மத்திய அரசு மற்றும் அதன் பல்வேறு நிறுவனங்கள் வாயிலாக திட்டமிடல், முகாமை செய்தல், வளங்களைப் பெறல் மற்றும் பங்கிடுதல் முதலிய பொறுப்புகளைப் பிரதேச மட்டத்திலான நிர்வாக நிறுவனங்களிடமும் உள்ளூராட்சி மன்றங்களிடமும் மாகாண சபைகளிடமும் அதிகாரம் பரவலாக்கப்பட்ட அரச அதிகாரசபைகளிடமும் கூட்டுத்தாபனங்களிடமும் ஒப்படைக்கப்பட்டிருக்கும்.

மத்திய அரசின் அதிகாரங்களைப் பன்முகப்படுத்தல் பல்வேறு வகைகளில் செயற்படுத்தப்படும். நிர்வாக அதிகாரத்தைப் பன்முகப்படுத்தல் அதில் ஒரு முறையாகும். இலங்கையில் தேசிய மட்டத்திலிருந்து பிராந்திய மட்டம் வரையில் நிர்வாக அதிகாரம் பன்முகப்படுத்தப்பட்டுள்ள விதத்தைப் பின்வரும் உதாரணம் மூலம் அறிந்துகொள்ள முடியும்.

| | | |
|---|---|---|
| தேசிய மட்டம் | → | அமைச்சின் செயலாளர் |
| ↓ | | |
| மாவட்ட மட்டம் | → | மாவட்ட செயலாளர் |
| ↓ | | |
| பிரதேச மட்டம் | → | பிரதேச செயலாளர் |
| ↓ | | |
| கிராம அலுவலர் பிரிவு மட்டம் | → | கிராம அலுவலர் |

மத்திய அரசின் பணிகளை பிரந்திய நிர்வாக அலகுகளிடம் ஒப்படைத்தல் அதிகாரத்தைப் பன்முகப்படுத்தலின் மற்றும் ஒரு முறையாகும். இதே போன்று மாநகர சபை, நகர சபை பிரதே சபை எனும் உள்ளூராட்சி மன்றங்கள் உருவாக்கப்பட்டுள்ள மையையும் அவதானிக்கலாம்.

அரசு முயற்சியாண்மைக்கு அல்லது அதிகார சபைகளுக்குரிய அதிகாரங்களைப் பிரதேச அலகுகளிடம் ஒப்படைத்தல் அதிகாரப் பன்முகப்படுத்தலின் மற்றொரு முறையாகும். அதன் மூலம் அரச முயற்சிகளை மேற்கொள்வதற்கான திணைக்களங்கள், கூட்டுத்தாபனங்கள், சபைகள், அதிகாரசபைகள் என்பவற்றுக்குத் தேவையான அதிகாரங்கள் வழங்கப்பட்டுள்ளன.

உதாரணம் - இலங்கைப் பெற்றோலியக் கூட்டுத்தாபனம்
இலங்கைத் துறைமுக அதிகார சபை

## ஒற்றையாட்சி அரசு

அதிகாரத்தைப் பன்முகப்படுத்தும் போது அரசாங்கத்தின் நிர்வாக அதிகாரங்கள் மாத்திரமே பிராந்திய அலகுகளிடம் ஒப்படைக்கப்படுகின்றன. அத்துடன் சட்டத்துறை, நிறைவேற்றுத்துறை, நீதித்துறை என்பவற்றின் பணிகள் ஒரு மத்திய நிலையத்தின் மூலம் செயற்படுத்தப்படுகின்றன. அரசின் சட்டம், நீதி, நிர்வாகம் எனும் முத்துறை அதிகாரங்களும் ஒரு மத்திய அரசினால் செயற்படுத்தப்படுமாயின் அவ்வரசு ஒற்றையாட்சி அரசாகும். இங்கு எவ்வகையிலும் அதிகாரம் பகிர்ந்தளிக்கப்படமாட்டாது. மேலும் அரசியல் யாப்பில் அரசின் இயல்பு ஒற்றையாட்சி என்று தெளிவாகக் குறிப்பிடப்பட வேண்டும். ஆயினும் நிர்வாக நடவடிக்கைகளை இலகுபடுத்துவதற்காக மத்திய அரசின் சில நிர்வாக அதிகாரங்கள் பரவலாக்கப்பட்டு உள்ளூராட்சி மன்றங்களிடம் ஒப்படைக்க முடியும். இதற்கு உதாரணமாக இலங்கையில் செயற்படும் உள்ளூராட்சி மன்றங்களைக் கூறமுடியும். நிர்வாக அதிகாரங்கள் பாராளுமன்ற கட்டளைச் சட்டம் ஒன்றின் மூலம் உள்ளூராட்சி மன்றங்களுக்கு வழங்கப்படுவதால், அவ்வதிகாரங்கள் மத்திய அரசினால் மீண்டும் பெற்றுக்கொள்ள முடியுமாயிருப்பதும் ஒற்றையாட்சி முறையின் பண்பாகும்.

பேராசிரியர் ஹர்மன் ஜே பைனர் எனும் அரசியலறிஞர் ''எல்லா வகையிலும் அரசியல் அதிகாரம் ஒரு மத்திய நிறுவனத்தினுள் குவிந்திருப்பின் அது ஒற்றையாட்சி முறையாகும்.'' என்கின்றார்.

### ஒற்றையாட்சியின் பண்புகள்

- அரசின் சட்டத்துறை, நீதி, நிறைவேற்றுத்துறையின் அதிகாரங்கள் ஒரு மத்திய அரசினால் மாத்திரம் நடைமுறைப்படுத்தப்படுதல்.
- மத்திய அரசுக்குரிய நிர்வாக நடவடிக்கைகளை இலகுபடுத்துவதை நோக்காகக் கொண்டு சில அதிகாரங்களை பிராந்திய நிர்வாக அலகுகளிடம் ஒப்படைத்தல்.
- மத்திய அரசின் சட்டத்துறை மூலம் நிறைவேற்றப்படும் சட்டம் ஒன்றின் மூலம் மாத்திரம் அதிகாரம் பன்முகப்படுத்தப்படுதல்.

- மத்திய அரசுக்குத் தேவையான சந்தர்ப்பத்தில் பன்முகப்படுத்தப்பட்ட நிர்வாக அதிகாரங்களை மீண்டும் பெறுதல்.

## அதிகாரத்தைப் பகிர்ந்தளித்தல்

மத்திய அரசின் சட்டத்துறை, நிறைவேற்றுத்துறை மற்றும் நீதித்துறை அதிகாரங்கள் அரசியல் யாப்பின் மூலம் பிராந்திய ஆட்சிஅலகுகளிடம் ஒப்படைக்கப்படுதல் 'அதிகாரத்தைப் பகிர்ந்தளித்தல்' எனப்படும். அதிகாரப்பகிர்வு என்பது அரசியல் யாப்பின் மூலம் மட்டுமே மேற்கொள்ளப்படும்.

தேவைகளின் நிமித்தம் புதிதாக அதிகாரத்தைப் பகிர்ந்தளிப்பதாயின் அல்லது பகிர்ந்தளிக்கப்பட்ட அதிகாரங்களை சீர்த்திருத்துவதாயின் அது நடைமுறையில் உள்ள அரசியல் யாப்பைச் சீர்த்திருத்துவதன் மூலம் மேற்கொள்ளப்பட வேண்டும்.

## நவீன அரசுகள் அதிகாரப் பங்கீடு செய்வதற்கான காரணங்கள்

- வேற்றுமையில் ஒற்றுமையைக் கட்டியெழுப்புவதற்கு ஓர் அரசில் பிராந்திய ரீதியாக செறிந்து வாழும் பல்வேறு மொழி, சமயம், இனங்களைச் சேர்ந்த மக்களின் தனித்துவத்திற்கு மதிப்பளித்து சகல இனக்குழுக்களையும் பொதுத் தேசியக் குறிக்கோள் ஒன்றின் கீழ் இணைத்து ஆட்சி செய்வதற்கு சமஷ்டி ஆட்சி முறை உதவும்.
- நாட்டின் பாரிய பரப்பளவு விசாலமானதாகக் காணப்படும் போது ஒரு மத்தியிலிருந்து நாட்டை நிர்வகிப்பது சிரமமாக இருத்தல்.
- தேசிய பாதுகாப்பை உறுதிப்படுத்தல்

## சமஷ்டி அரசு/கூட்டாட்சி

மத்திய அரசின் சட்ட, நிறைவேற்று, நீதித்துறை அதிகாரங்களைப் பிராந்திய ஆட்சி அலகுகளிடம் ஒப்படைத்தல் அதிகாரத்தைப் பகிர்ந்தளித்தலாகும் என்று ஏற்கனவே அறிந்திருப்பீர்கள். அவ்வாறு அதிகாரம் பங்கீடு செய்யப்பட்ட அரசு சமஷ்டி அரசு எனப்படும். அல்லது மத்திய அரசின் சட்ட, நிறைவேற்று, நீதித்துறை அதிகாரங்கள் அரசியல் யாப்பின் மூலம் பிராந்திய ஆட்சி அலகுகளிடம் பகிர்ந்தளிக்கப்பட்ட அரசு சமஷ்டி அரசு எனப்படும்.

அரச அதிகாரங்கள் மத்திய அரசிடமும் பிராந்திய அரசுகளிடமும் பகிர்ந்தளிக்கப் பட்டிருத்தல் சமஷ்டி ஆட்சி முறையின் அடிப்படைப் பண்பாகும். ஒற்றையாட்சியின் ஓர் அதிகார மையத்திற்குப் பதிலாக சமஷ்டி அரசாங்க முறையில் மத்திய அரசு, மாநில அரசுகள் எனும் இருவகையான அதிகார மையங்களை அவதானிக்கலாம். அதேபோன்று சமஷ்டி ஆட்சி முறையில் சிலவேளை மத்திய அரசின் சட்டம், மாநில அரசின் சட்டம் எனும் இருவகையான சட்டங்கள் காணப்படலாம்.

சமஷ்டி அல்லது கூட்டாட்சி முறை என்று அழைக்கப்படும் ஆட்சிமுறையானது பல்வேறு காரணங்களின் அடிப்படையில் உருவாகியுள்ளது. சுயாதீனமான அரசுகள் சில ஒன்றுபட்டு நிர்வாகத்தை இலகுபடுத்திக் கொள்வது சமஷ்டி முறையின் தோற்றத்திற்கான பிரதான காரணமாகும்.

சமஷ்டி ஆட்சி முறையில் பிரதேச அலகு 'மாநிலம்' என்றழைக்கப்படும். சில நாடுகளில் அது வேறு சிறப்புப் பெயர்களாலும் அழைக்கப்படுகின்றது.

உதாரணம் - சுவிட்சர்லாந்தில் பிராந்திய அலகு 'கன்ரன்' என்றழைக்கப்படுகிறன.

### சமஷ்டி அரசொன்றின் பண்புகள்

- எழுதப்பட்ட அரசியல் யாப்பு காணப்படுதல்
- மத்திய அரசுக்கும் மாநில அரசுகளுக்கும் உரிய அதிகாரங்கள் அரசியல் யாப்பில் உள்ளடக்கப்பட்டிருத்தல்
- அரசியல் யாப்புக்கு விளக்கமளிக்கும் அதிகாரம் உயர் நீதிமன்றம் ஒன்றிடம் ஒப்படைக்கபட்டிருத்தல்

  உதாரணம் : ஐக்கிய அமெரிக்காவின் சமஷ்டி நீதிமன்றம்
- சட்டவாக்கத்துறையில் மேற்சபையொன்று காணப்படுதல்

  உதாரணம் : ஐக்கிய அமெரிக்காவின் செனட்சபை

### சமஷ்டி அரசொன்று வெற்றிபெறுவதற்கான இயல்புகள்

- அரசியல் யாப்புக்கு ஏற்ப செயற்படுதல்.
- சகல இனக்குழுக்களும் தேசிய உணர்வுடன் செயற்படுதல்
- நிதி வளங்களைப் பங்கிடும் போது நேர்மையான முறையில் மாநில அரசுகளுக்கு வழங்கப்படுதல்.

### சமஷ்டி அரசுகளின் புதிய போக்கு

சமஷ்டி ஆட்சி முறையில் மத்திய அரசைப் போன்று மாநில அரசுகளும் சமமாக மதிக்கப்படும். ஆயினும் செயற்பாட்டுரீதியாக நோக்கும் போது மத்திய அரசு பலம்பெறுவது பொதுவான தன்மையாகும். அல்லது மத்திய அரசு மாநில அரசுகளை வழிநடாத்தும் தன்மை காணப்படுகின்றது. இவ்வாறான நிலைமை தோன்றுவதில் செல்வாக்குச் செலுத்தும் காரணிகள் பின்வருமாறு

- அரசியல் யாப்புச் சீர்த்திருத்தங்களை மேற்கொள்வதற்கு மாநில அரசுகளின் விருப்பத்தைப் பெற்றுக்கொண்ட போதிலும் பொதுவான சட்டங்களை உருவாக்கும் போது மாநில அரசுகளை உதாசீனம் செய்தல்.
- அரசியல் யாப்புக்கு விளக்கம் வழங்கும் போது மத்திய அரசுக்கு சார்பான வகையில் அதனை மேற்கொள்ளுதல்.

- மத்திய அரசுக்கும் மாநில அரசுகளுக்குமிடையில் நிதிக்கொடுக்கல் வாங்கல்களை மேற்கொள்ளும் போது மத்திய அரசின் அதிகாரம் மேலும் வலுவடையும். மத்திய அரசினால் மாநில அரசுகள் இயங்குவதற்குத் தேவையான நிதியுதவிகள் வழங்கப்படுகின்றன. அவ்வாறு நிதியுதவி வழங்கும் போது பல்வேறு நிபந்தனைகள் மத்திய அரசினால் விதிக்கப்படும்.
- பிராந்திய அரசினால் மேற்கொள்ளப்படும் நலன்புரி நடவடிக்கைகள் அதிகரிக்கும் போது அதன் பொறுப்புகள் மத்திய அரசு மீது சுமத்தப்படுதல்.
- தொடர்பாடல், போக்குவரத்துச் சேவைகளில் ஏற்பட்டுள்ள பாரிய வளர்ச்சிக்குக் காரணமாகத் தொடர்புகள் துரிதமடைதல்.
- உலகப் பொருளாதாரப் பிரச்சினைகளை எதிர்கொள்ளும் வகையில் முழுநாட்டுக்குமான பொருளாதாரத் தீர்வினைக் காணும் பொறுப்பு மத்திய அரசின் மீது சுமத்தப்படுதல்.
- இரண்டாம் உலக மகாயுத்தத்தின் பின்னர் சர்வதேச அரசியல் களத்தில் ஏற்பட்டுள்ள மாற்றம்

  உதாரணம்: ஐக்கிய அமெரிக்க சனாதிபதியின் அதிகாரங்கள் விருத்தியடைதல்.

## அதிகாரப் பன்முகப்படுத்தல்



## அதிகாரப் பகிர்வு




மேலுள்ள வரிப்படங்கள் இரண்டையும் கூர்ந்து நோக்கினால் உங்களுக்கு அதிகாரப் பன்முகப்படுத்தல், அதிகாரப் பகிர்வு எனும் இரு எண்ணக்கருக்களினதும் வேறுபாட்டைப் புரிந்து கொள்ள முடியும். அதிகாரம் பன்முகப்படுத்தப்படுவது என்பது மத்திய அரசின் அதிகாரங்கள் பிராந்திய ஆட்சி அலகுகளிடம் ஒப்படைக்கப்படுவது மட்டுமேயாகும். அப்பிரதேச ஆட்சி அலகு மாநிலம் என்றோ சுயாதீன அரசு என்றோ அழைக்கப்படுவதில்லை என்பதை அவ்வரிப்படத்தின் மூலம் நீங்கள் புரிந்து கொள்ள வேண்டும். எமது நாட்டில் செயற்படும் மாகாண சபைகள் இதற்குச் சிறந்த உதாரணமாகும்.

அதேபோன்று அதிகாரம் பகிர்ந்தளிக்கப்படுவதனால் மத்திய அரசின் பணிகள் பங்கிடப்படுவதன் மூலம் மாநில அரசுகள் அல்லது சுயாதீன அரசுகள் உருவாவதையும் விளங்கிக்கொள்ள முடியும். அதேபோல் அச்சுயாதீனமான ஆட்சி அலகுகளின் நிர்வாக நடவடிக்கைகளை இலகுபடுத்தும் பொருட்டு தேவையாயின் அதிகாரப் பகிர்வைச் செய்யலாம். சில சமஷ்டி அரசுகளில் அதிகாரம் பகிர்ந்தளிக்கப்பட்டுள்ளதுடன் பன்முகப்படுத்தப்பட்டிருப்பதையும் நீங்கள் தெரிந்துகொள்ள வேண்டும்.

**செயற்பாடு**

நீங்கள் கற்ற விடயங்களைக் கொண்டு அதிகாரப் பன்முகப்படுத்தல், அதிகாரப்பகிர்வு எனும் இரு எண்ணக்கருக்களுக்குமான இவ்விரண்டு வரைவிலக்கணங்களைத் தருக.

## ஒற்றையாட்சி

அதிகாரப் பரவலாக்கம் எனும் எண்ணக்கருவின் விளக்கம் பற்றி இவ்வலகில் கற்றீர்கள். அவ்வாறு அதிகாரப் பரவலாக்கம் செய்யப்பட்ட நாடுகள் ஒற்றையாட்சி நாடுகள் எனப்படும். அந்நாடுகளில் நிலவும் ஆட்சிமுறை ஒற்றையாட்சி எனப்படும். ஒற்றையாட்சி பற்றிக் கூறப்பட்டுள்ள வரைவிலக்கணங்கள் சிலவற்றை நோக்குவோம்.

எல்லா வகையிலும் அரசியல் அதிகாரம் ஒரு மத்திய அதிகார பீடத்திடம் மையப்படுத்தப்பட்டிருப்பின் அது ஒற்றையாட்சி முறையாகும்.

**- பேராசிரியர் ஹர்மன் ஜே.பைனர் -**

ஒற்றையாட்சி நிலவும் நாடுகளுக்கு உதாரணங்கள் :

இலங்கை, ஐக்கிய இராச்சியம், பிரான்ஸ் முதலிய நாடுகளைக் குறிப்பிடலாம்.

### ஒற்றையாட்சி முறையொன்றின் பண்புகள்

ஒற்றையாட்சி என்றால் என்ன வென்பதை இப்பொழுது நீங்கள் விளங்கியிருப்பீர்கள். ஒற்றையாட்சி முறையின் பிரதான பண்புகள் பற்றி அரசியலறிஞர்கள் வெளியிட்டுள்ள வேறுபட்ட இரண்டு கருத்துக்கள் பின்வருமாறு.

ஒரு மத்திய அதிகாரபீடம் மாத்திரம் சட்டமியற்றும் உயர் அதிகாரத்தைக் கொண்டிருப்பது ஒற்றையாட்சியின் அடிப்படைப் பண்பாகும்.

**- பேராசிரியர் ஏ. வீ. டைசி -**

மத்திய அரசின் மேன்மை நிலையும் மேலதிக இறைமையுள்ள நிறுவனங்கள் அரசியல் யாப்பில் இல்லாதிருப்பதும் ஒற்றையாட்சியில் காணப்படும் பிரதான பண்பாகும்.

**- பேராசிரியர் சீ.எப். ஸ்ட்ரோங் -**

இதன்படி ஒற்றையாட்சி முறையொன்றின் பொதுவான பண்புகளாகப் பின்வருவனவற்றைக் குறிப்பிடலாம்.

- சட்டமியற்றுவது தொடர்பான உயர் நிறுவனமாகச் செயற்படுவது மத்திய அரசின் சட்டத்துறையான பாராளுமன்றமாகும்.
- நிர்வாக நடவடிக்கைகளை இலகுபடுத்திக்கொள்வதற்காக உள்ளூராட்சி நிறுவனங்கள்வரையில் அதிகாரப் பரவலாக்கம் செய்யப்பட்டிருக்கும். உதாரணமாக இலங்கையில் செயற்படும் மாநகர சபைகள், நகர சபைகள், பிரதேச சபைகள்
- அரசின் இறைமை அதிகாரம் ஓரிடத்தில் (மத்திய அரசிடம்) குவிந்திருக்கும்.
- சட்டத்துறை, நிறைவேற்றுத்துறை, நீதித்துறை எனும் அரசின் முத்துறை அதிகாரங்கள் மத்திய அரசிடம் மையப்படுத்தப்பட்டிருக்கும்.

### ஒற்றையாட்சி முறையின் நன்மைகள்

- ஒற்றையாட்சி முறை பல்லின சமூக அமைப்பு இல்லாத நாடுகளுக்கே மிகப் பொருத்தமானது. இம்முறையின் கீழ் இலகுவாகவும் விரைவாகவும் அரசாங்கம் தீர்மானங்களை மேற்கொள்ள முடியும்.
- மத்திய அரசு, மாநில அரசுகள் எனும் இருவேறு அதிகார நிறுவனங்கள் இன்மையால் அவற்றுக்கிடையில் ஏற்படும் முரண்பாடுகள் இந்நாடுகளில் ஏற்படுவதற்கான வாய்ப்புகள் குறைவாகும்.
- நிறைவேற்றுத்துறையும் நீதித்துறையும் முழுநாட்டிற்கும் பொதுவானதாக அமைதல்.

## சமஷ்டி அரசு

சமஷ்டி அரசொன்றில் காணப்படும் அரசியல் முறை சமஷ்டி அரசு அல்லது கூட்டரசு எனப்படும். அரச அதிகாரம் மத்திய அரசுக்கும் மாநில அரசுகளுக்கும் இடையே பகிரப்பட்டிருப்பது சமஷ்டி ஆட்சி முறையின் பிரதான பண்பாகும். சமஷ்டி அரசு பற்றி அரசியலறிஞர்கள் முன்வைத்துள்ள வரைவிலக்கணங்கள் சில பின்வருமாறு,

> வேற்றுமையில் ஒற்றுமை காண்பதற்கு வழிவகுக்கும் ஆட்சி முறையாகும்.
> **- ஏ.வீ. டைசி -**

> தத்தமது அதிகார எல்லைக்குள் சுயாதீனமாக செயற்பட முடிந்த போதிலும் சில விடயங்கள் தொடர்பாக ஒற்றுமையுடன் செயற்படுவதற்கும் வழிவகுக்கும் நிலைமை ஆகும்.
> **- கலாநிதி. கே. சீ.வியர் -**

**சமஷ்டி ஆட்சி முறை நிலவும் நாடுகளுக்கான உதாரணங்கள் :**

ஐக்கிய அமெரிக்கக் குடியரசு, சுவிற்சர்லாந்து, இந்தியா, அவுஸ்திரேலியா

### சமஷ்டி ஆட்சி முறையின் அனுகூலங்கள்

- பல்லின சமூகமொன்றில் பல்வகைமைக்கு மதிப்பளிக்கும் வகையில் பொதுத் தேசியம் ஒன்றைக் கட்டியெழுப்புதல்.
- பரந்த நிலப்பரப்பில் காணப்படும் அரசுகளில் நிர்வாகரீதியிலான தீர்மானங்களை இலகுவாக மேற்கொள்ளக்கூடியதாக இருத்தல்.
- ஓர் அரசு கட்டளையிடும் வகையில் செயற்படுவதைத் தடுக்க முடியுமாயிருத்தல்
- சனநாயக ஆட்சி சக்திவாய்ந்ததாகக் காணப்படல்.

### சமஷ்டி ஆட்சி முறையின் பிரதிகூலங்கள்

- அதிகாரப் பங்கீட்டின் போது தமக்குக் கிடைக்கப் பெற்றுள்ள அதிகாரங்கள் தொடர்பில் மாநில அரசுகள் அதிருப்தியுடன் செயற்படுதல்.
- மாநிலங்கள் மத்திய அரசிலிருந்து விலகிச் செல்லும் போக்கு காணப்படுதல்.
- மத்திய, மாநில அரசுகள் யாப்பின் மூலம் தீர்வுகளுக்கு வரும்போது, சில துறைகளில் ஏற்படும் பிரச்சினைகளால் நிர்வாகம் ஸ்தம்பித்தல்.
- இரண்டாம் மன்றமொன்று செயற்படுவதால் சட்டவாக்க நடவடிக்கைகள் தாமதமடைதல்.
- மாநில நிர்வாகம் தொடர்பில் அனுபவமும் ஆற்றலும் மிக்க அதிகாரிகளுக்கான பற்றாக்குறை நிலவுவதனால் நிர்வாக முறை சீர்கெடல்.

**செயற்பாடு**

ஒற்றையாட்சி மற்றும் சமஷ்டியாட்சி முறைகளுக்கிடையிலான வேறுபாடு களை அட்டவணைப்படுத்துக.

## இலங்கையின் அதிகாரப் பகிர்வு மற்றும் அதிகாரப் பன்முகப்படுத்தல் தொடர்பான வரலாறு

### இலங்கையின் அதிகாரப் பரவலாக்கல் வரலாறு

அதிகாரப் பரவலாக்கம் என்னும் எண்ணக்கரு இலங்கைக்குப் புதியதன்று. மிகப் புராதான காலந்தொட்டு எமது நாட்டில் நிலவிய ஆட்சி முறையை நோக்கின் நிர்வாகத்தை இலகுப்படுத்தும் வகையில் பல்வேறு வகைகளிலும் அதிகாரப் பரவலாக்கம் மேற்கொள்ளப்பட்டிருந்தது.

எடுத்துக்காட்டாக அநுராதபுர காலத்தின் முதல் மன்னனான பண்டுகாபய மன்னன் கிராம நிர்வாகத்திற்காக 'கம்பார', 'காமினி' போன்ற அதிகாரிகள் நியமிக்கப்பட்டிருந்ததைக் குறிப்பிடலாம்.

பொலனறுவைக் காலத்தில் மகா பராக்கிரமபாகு மன்னன் பிரதேச ஆட்சியாளர்களை நியமித்து அவர்களுக்கு நிர்வாக அதிகாரங்களை வழங்கியிருந்தான்.

ஐரோப்பியர் எமது நாட்டை ஆட்சிசெய்த போது பல நிர்வாக அதிகாரிகள் மூலம் பிரதேச அலகுகள் நிர்வாகம் செய்யப்பட்டன.

உதாரணமாக 1815 ஆம் ஆண்டு பிரித்தானியரால் மாகாண மட்டத்தில் '' றெசிலெண்ட்'' /அதிகாரி (Resident oppicev) ஒருவர் நியமிக்கப்பட்டமை குறிப்பிடத்தக்கது.

## பிரித்தானியர் ஆட்சியின் போது இலங்கையில் அதிகாரப் பரவலாக்கம் செய்யப்பட்டிருந்த விதம்

பிரித்தானியர் ஆட்சியின் போது இலங்கையில் அதிகாரப் பரவலாக்கமாக 1865 ஆம் ஆண்டு மாநகரசபை கட்டளைச்சட்டம் நிறைவேற்றப்பட்டமையைக் குறிப்பிடலாம். அக்கட்டளைச் சட்டத்தின் கீழ் 1865 இல் கொழும்பு, 1866 இல் கண்டி எனும் நாட்டின் இரண்டு பிரதான நகரங்களையும் அடிப்படையாக கொண்டு மாநகர சபைகள் உருவாக்கப்பட்டன. இன்று நடைமுறையில் உள்ள அதிகாரப் பரவலாக்க முறைக்கான அத்திவாரம் பிரித்தானியர் ஆட்சிக் காலத்திலேயே இடப்பட்டது.

1871 ஆம் ஆண்டு கிராம சபை முறையை மீண்டும் அமுல்படுத்தி, அதன் அதிகாரங்களை அதிகரிக்கும் பொருட்டு 1924 ஆம் ஆண்டு கிராம சபைக் கட்டளைச் சட்டம் ஒன்று உருவாக்கப்பட்டது. 1931 ஆம் ஆண்டு டொனமூர் யாப்பின் கீழ் கிராம சபைகளின் அதிகாரம் மேலும் அதிகரிக்கப்பட்டன. அதே போன்று 1940 ஆம் ஆண்டு நகர சபைகள் உருவாக்கப்பட்டதுடன், 1943 ஆம் ஆண்டு உள்ளூராட்சிமன்ற, கட்டளைச் சட்டம் அங்கீகரிக்கப்பட்டது இதன் மூலம் ஆங்கிலேயராட்சியில் அதிகாரப் பரவலாக்கம் மேலும் விரிவாக்கம் அடைவதற்கான நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன.

## சுதந்திரத்தின் பின்னர் அதிகாரப் பரவலாக்கம் தொடர்பாக மேற்கொள்ளப்பட்ட முயற்சிகள்

1948 இல் இலங்கைக்கு சுதந்திரம் கிடைத்ததன் பின்னரும் அதற்கு முன்னரும் செயற்பட்ட உள்ளூராட்சி மன்றங்கள் தொடர்ந்தும் இயங்கி வந்ததைக் காணமுடிகின்றது. 1973 ஆம் ஆண்டு அதிகாரப் பரவலாக்கத்தின் பொருட்டு அரசியல் அதிகாரசபை முறை உருவாக்கப்பட்டது. மாவட்ட மட்டத்தில் நிர்வாகத்தைச் செயற்படுத்தும்பொருட்டு அரசியல் தலைமைத்துவத்தைப் பெற்றுக் கொடுப்பதற்கு

அன்றைய அரசாங்கம் முனைப்புடன் செயற்பட்டது. 1980 ஆம் ஆண்டு மாவட்ட அமைச்சு முறையின் கீழ் மாவட்ட சபைகள் அறிமுகம் செய்யப்பட்டதன் வாயிலாக கிராமசபை, சிறு நகர சபைகள் என்பன நீக்கப்பட்டன. அந்நிறுவனங்கள் மூலம் செயற்படுத்தப்பட்ட நிர்வாக அதிகாரங்கள் 1981 இல் பிரதேச சபைகள், கிராமோதய சபைகள் மூலம் மேற்கொள்ளப்பட்டன. மீண்டும் 1987ஆம் ஆண்டின் 15ம் இலக்க பிரதேச சபைகள் சட்டத்தின் மூலம் பிரதேச சபைகள் நிறுவப்பட்டன.

## இலங்கையின் அதிகாரப் பங்கீடு தொடர்பாக மேற்கொள்ளப்பட்ட பிரயத்தனங்கள்

இலங்கையில் அதிகாரப் பங்கீடு தொடர்பாக சுமார் நூறு ஆண்டுகளுக்கு முன்னரே கருத்துகள் வெளியிடப்பட்டன. 1926 ஆம் ஆண்டு எஸ். டப்ளியூ.ஆர்.டி. பண்டார நாயக்க அவர்களால் மலைநாட்டுப் பகுதிக்கு சமஷ்டி ஆட்சி முறையின் தேவை பற்றி வெளியிடப்பட்ட கருத்து அவற்றுள் முக்கியமானது. சுதந்திரத்தின் பின்னர் 1957 இல் எஸ். டப்ளியூ. ஆர்.டி. பண்டாரநாயக்க மற்றும் எஸ்.ஜே.வீ. செல்வநாயகம் போன்றோர்களால் மேற்கொள்ளப்பட்ட 'பண்டா - செல்வா ஒப்பந்தம்' 1965 இல் டட்லி சேனநாயக, - செல்வநாயகம் போன்ற தலைவர்களால் மேற்கொள்ளப்பட்ட டட்லி-செல்வா ஒப்பந்தம் இதற்கு உதாரணங்களாகும். ஆயினும் அவ்வொப்பந்தங்கள் நடைமுறைப்படுத்தப்படவில்லை.

அண்மைக் காலத்தை அவதானிக்கும் போது 1970 - 1980 தசாப்தங்களிலும் அதிகாரப் பகிர்வு தொடர்பாக ஆழமான முறையில் அணுகப்பட்ட போதிலும், அக்காலப் பகுதியில் ஆட்சியிலிருந்த அரசாங்கங்கள் அதில் நேரடியாகத் தலையிடாது அதிகாரப் பன்முகப்படுத்தல் தொடர்பாகவே கவனம் செலுத்தின.

## இலங்கையில் மாகாண சபைகள் அமைக்கப்படுதல்

1978 ஆம் ஆண்டு இரண்டாம் குடியரசு யாப்பில் ஏற்படுத்தப்பட்ட 13 ஆம் சட்டத் திருத்தம் மற்றும் 1987 ஆம் ஆண்டு 42 ஆம் இலக்க பாராளுமன்ற கட்டளைச் சட்டம் என்பவற்றின் மூலம் இலங்கையில் மாகாணசபை முறை உருவானது. இதில் 5 மாகணங்கள் உள்ளடக்கப்பட்டன. 1978 ஆம் ஆண்டு. அரசியல் யாப்பின் xvii (அ) அத்தியாயம் 154 (அ) (i) தலைப்பின் கீழ் பின்வருமாறு குறிப்பிடப்பட்டுள்ளது.

> ''ஜனாதிபதியால் வர்த்தமானியில் வெளியிடப்படும் நியதி ஒன்றின் மூலம் குறிப்பிடப்படும் திகதியிலிருந்து அல்லது திகதிகளிலிருந்து 8 வது உப தலைப்பில் குறிப்பிடப்படும் எல்லா மாகாணங்களுக்காகவும் அரசியல் யாப்பின் சட்ட திட்டங்களுக்கு கீழ்ப்பட்ட வகையில் மாகாணசபை அமைக்கப்பட்டுள்ளது.''

அரசியல் யாப்பின் எட்டாம் உபதலைப்பின் கீழ் உருவாக்கப்பட்டுள்ள மாகாண சபைகள் ஒன்பதும் பின்வருமாறு.

1. வட மாகாண சபை
2. கிழக்கு மாகாண சபை
3. மேல் மாகாண சபை
4. மத்திய மாகாண சபை
5. வட மத்திய மாகாண சபை
6. வடமேல் மாகாண சபை
7. ஊவா மாகாண சபை
8. சபரகமுவ மாகாண சபை
9. தென் மாகாண சபை



## மாகாண சபை ஒன்றின் நிறுவனக் கட்டமைப்பு

மாகாண சபையொன்றின் நிறுவனக் கட்டமைப்பானது, ஆளுநர், முதலமைச்சர், அமைச்சரவை, மாகாண சபைப் பிரதிநிதிகள் சபை எனும் பிரதான அலகுகள் சிலவற்றை கொண்டமைந்துள்ளது. அந்நிறுவனக் கட்டமைப்பைப் பின்வரும் வரிப்படத்தின் மூலம் விளங்கிக் கொள்ளலாம்.




இதன்படி ஆளுநர், முதலமைச்சர், அமைச்சரவை, மாகாண சபை எனும் நிறுவனங்கள் அவை கொண்டுள்ள அதிகாரங்கள் என்பன பற்றி விளங்கிக்கொள்வோம்.

### மாகாண ஆளுநர்

எல்லா மாகாண சபைகளுக்கும் ஆளுநர் ஒருவர் இருப்பதுடன், மத்திய அரசு மற்றும் மாகாண சபை என்பவற்றின் இணைப்பாளராகவும் அவர் செயற்படுவார். ஆளுநர் ஜனாதிபதியால் நியமிக்கப்படுவதுடன் அவரது பதவிக் காலம் ஐந்து வருடங்களாகும். தனது பதவிக் காலத்தில் ஆளுநர் விரும்பினால் தானாகத் தனது பதவியை இராஜினாமாச் செய்யலாம். அதேபோன்று மாகாண சபை உறுப்பினர்களுள் 2/3 பெரும்பான்மை உறுப்பினர்களின் சம்மதத்துடன் நிறைவேற்றப்பட்ட ஒரு பிரேரணையை ஜனாதிபதிக்கு அனுப்பி வைப்பதன் மூலம் ஆளுனரைப் பதவியிலிருந்து நீக்கலாம். 1978 அரசியல் யாப்பின் 154 (ஆ) (1) மற்றும் (2) சரத்துகளில் ஆளுநர் பதவி பற்றி பின்வருமாறு கூறப்பட்டுள்ளது.

> ''154 (அ) சரத்துப்படி மாகாண சபை அமைக்கப்பட்டுள்ள ஒவ்வொரு மாகாணத்திற்கும் ஒவ்வொரு ஆளுநர் நியமிக்கப்படுவர். ஜனாதிபதி கையெழுத்திடும் ஆணைப்பத்திரமொன்றின் மூலம் ஆளுநர் நியமிக்கப்படுவதுடன் ஜனாதிபதியின் விருப்பம் உள்ள காலம் வரை 4 (ஆ) எனும், சரத்துப் படி அவரால் பதவிவகிக்க முடியும்.''

## ஆளுநரின் அதிகாரங்களும் பணிகளும்

- *மாகாண சபையைக் கூட்டுதல், தவணைகளை முடிவுறுத்துதல், கலைத்தல்.*
- *மாகாண சபையில் உரையாற்றுதல் மற்றும் செய்திகளை அனுப்புதல்.*
- *முதலமைச்சரை நியமித்தல், அமைச்சரவை மற்றும் மாகண சபை நிர்வாக அதிகாரிகளை நியமித்தல்.*
- *மாகாண சபையின் கொள்கைகளை அனுமதித்தல்.*
- *அவசரகால நிலைமைகளின் போது ஜனாதிபதியின் ஆலோசனையின் பேரில் செயற்படுதல்.*

  **உதாரணம்**

  *மாகாண சபை வலுவிழக்கும்போதும் நிதிரீதியாக முடக்கமடையும்போதும் மத்திய அரசுக்கும் மாகாண சபைக்கும் இணைப்பாளராகச் செயற்படுதல்.*
- *மாகாண சபையின் பெயரளவு நிர்வாகியாக மாகாணசபையின் முதலமைச்சரின் ஆலோசனையின் படி செயற்படுதல்.*

## முதலமைச்சரும் அமைச்சரவையும்

*ஒவ்வொரு மாகாண சபையும் ஒரு முதலமைச்சரையும் நான்கிற்கு மேற்படாத அமைச்சரவையையும் கொண்டிருக்க வேண்டும் என 1978 அரசியல் யாப்பில் குறிப்பிடப்பட்டுள்ளது. மாகாண சபை உறுப்பினர்களிலிருந்து இவர்கள் தெரிவு செய்யப்படுவர். ஆளுநரின் செயற்பாடுகளுக்கு உதவியாக இருத்தலும் அது தொடர்பான ஆலோசனைகள் வழங்குவதும் அமைச்சரவையின் பிரதான பணியாகும். முதலமைச் சரை நியமனம் செய்வது ஆளுநரின் பணிகளுள் ஒன்றாகும். அவ்வாறு நியமனம் செய்யப்படுபவர் மாகாண சபை உறுப்பினர்களுள் பெரும்பான்மையானோரின் விருப்பத்திற்குரியவராய் இருத்தல் வேண்டும். முதலமைச்சரின் ஆலோசனைப் படி ஏனைய அமைச்சர்களை நியமித்தல் வேண்டும். முதலமைச்சரைப் போலவே ஏனைய அமைச்சர்களும் தமது செயற்பாடுகள் தொடர்பாக மாகாண சபைக்கு கூட்டாகப் பொறுப்புச் சொல்லக் கடமைப்பட்டுள்ளனர்.*

## முதலமைச்சர் மற்றும் அமைச்சரவையின் அதிகாரங்களும் பணிகளும்

- *மாகாண ஆளுநருக்கு ஆலோசனை வழங்குதல்.*
- *மாகாண வரவு - செலவுத் திட்டத்தைத் தயாரித்தல்.*
- *மாகாணத்தின் பொருளாதார அபிவிருத்தி, நிர்வாகத் திட்டமிடல் என்பவற்றைத் தயாரித்தலும் அவற்றை நடைமுறைப்படுத்தலும்.*

## மாகாண சபை

*1978 ஆம் ஆண்டின் அரசியல் யாப்பில் மேற்கொள்ளப்பட்ட 13 ஆம் சீர்திருத்தத்தின் படி அதுவரை பிரிக்கப்பட்டிருந்த இலங்கையின் ஒன்பது மாகாணங்களுக்காக எல்லா மாகாண சபைகள் அமைக்கப்பட்டதை நீங்கள் விளங்கிக் கொண்டிருப்பீர்கள். அவ்வாறு அமைக்கப்பட்ட மாகாண சபைகளும் வெவ்வேறாக சட்டவாக்கத்துறை உருவாக்கப்பட்டதன் பின்னர் செயற்படும் என்று அரசியல் யாப்பின் 154 அ (2) ஆம் உப தலைப்பில் கீழ் கண்டவாறு குறிப்பிடப்பட்டுள்ளது.*

> *''154 அ (1) உப தலைப்பின் கீழ் உருவாக்கப்பட்ட எல்லா மாகாண சபைகளும் மாகாண சபைத் தேர்தல் சட்டத்திற்கேற்ப அச்சபைக்கான பிரதிநிதிகள் தெரிவு செய்யப்படுவதன் மூலம் உருவாக்கப்படும்.''*

*அரசியல் யாப்பின் 154 ஈ (1) சரத்தில் மாகாண சபையின் கட்டமைப்பு பற்றிக் கூறப்பட்டுள்ளது. அதன்படி மாகாண சபை அமைக்கப்பட்டுள்ள மாகாணத்தின் பரப்பளவு, சனத்தொகை என்பன கவனத்தில் கொள்ளப்பட்டு சட்டத்தால் எடுக்கப்படும் முடிவின் பிரகாரம் பிரதிநிதிகள் தொகை தீர்மானிக்கப்படும்.*

*மாகாண சபையின் பதவிக்காலம் ஐந்து வருடங்களாகும். யாதேனும் ஒரு காரணத்தால் உரிய பதவிக்காலம் முடிவடைந்தும் மாகாண சபை கலைக்கப்படாது விட்டாலும், அது கலைந்ததாகவே கருதப்படும். மாகாணசபையின் பிரதிநிதிகள் அனைவரும் பொது மக்களின் வாக்குரிமையால் மட்டுமே தெரிவு செய்யப்படுவர்.*

*மாகாண சபை சட்டத்துறையின் பிரதான பணியாக அமைவது, 09 ஆம் உபதலைப்பின் படி மாகாண சபையின் அதிகாரங்கள் எனும் அட்டவணைப்படி சிற்சில விடயங்கள் தொடர்பான கொள்கைகளை உருவாக்குதலும் அவற்றுக்கு அனுமதியைப் பெற்றுக்கொள்வதுமாகும். அதேபோன்று மாகாண வரவு - செலவு திட்டத்தை அனுமதித்தலும் மாகாணத்தின் உட்கட்டமைப்பு வசதிகளை அபிவிருத்தி செய்வதற்கு தீர்மானங்களை மேற்கொள்வதும் நடைமுறைப்படுத்துவதாகும். அதேபோன்று மாகாண முதலமைச்சரும் நான்கு பேருக்கு மேற்படாத அமைச்சர்களும் தெரிவு செய்யப்படுவதும் மாகாணசபை சட்டவாக்கத்துறையின் பிரதிநிதிகளிலிருந்தே ஆகும்.*

## மாகாணசபை ஒன்றின் அதிகாரங்களும் தொழிற்பாடுகளும்

*1978 அரசியல் யாப்பின் 13 ஆம் சீர்திருத்ததின் படி மூன்று நிரல்களின் பிரகாரம் அதிகாரங்கள் வகுக்கப்பட்டுள்ளன.*

- I வது நிரல் *(மாகாண சபைக்குரிய அதிகாரங்கள்)*
- II வது நிரல் *(மத்திய அரசுக்குரிய அதிகாரங்கள்)*
- III வது நிரல் *(இணைந்து நிறைவேற்றும் பணிகள்)*

அதன்படி மத்திய அரசு, மாகாண சபை இவ்விரண்டுக்கும் பொதுவானவை எனும் அடிப்படையில் மூன்று நிரல்களாக அதிகாரங்கள் வகுக்கப்பட்டுள்ளன. அந்த நிரல்களையும் அவை பெற்றுள்ள அதிகாரங்களையும் அடுத்து நோக்குவோம்.

### முதலாம் நிரல் (மாகாண சபைக்குரிய அதிகாரங்கள்)

இதன் கீழ் மாகாண சபைக்குரிய அதிகாரங்கள் விபரிக்கப்பட்டுள்ளன. இந்நிரலின் கீழ் மாகாண சபைக்குரிய 37 அதிகாரங்களும் பணிகளும் குறிக்கப்பட்டுள்ளன. உதாரணம் மாகாணத்தின் பொருளாதாரத் திட்டமிடல், உள்ளூராட்சிமன்ற நடவடிக்கைகள், மாகாண வீடமைப்பும் அபிவிருத்தியும், சமூக சேவைகளும் புனர்வாழ்வும், மாகாண விவசாய நடவடிக்கைகள், சிறிய நீர்ப்பாசனத் திட்டங்கள், புனரமைத்தலும் நிர்வகித்தலும் போன்றவற்றைக் குறிப்பிடலாம்.

மாகாணசபை நிரலின் மூலம் மாகாண சபைக்கான கொள்கைகளை உருவாக்கலாம். ஆனால் அனுமதி பெற முடியாது என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

### இரண்டாம் நிரல் ( மத்திய அரசுக்குரிய அதிகாரங்கள்)

இதன் கீழ் மத்திய அரசு, மாகணசபை தொடர்பாக மேற்கொள்ளத்தக்க 17 அதிகாரங்கள் உள்ளடக்கப்பட்டுள்ளன. தேசியரீதியில் முக்கியத்துவம் பெறும் விடயங்கள், இதில் உள்ளடங்கியுள்ளதுடன் அதற்கான சட்டமியற்றும் தனி அதிகாரம் இலங்கைப் பாராளுமன்றத்துக்குரியதாகும். அதன்படி இரண்டாம் நிரலில் அடங்கியுள்ள அதிகாரங்களுள் சில பின்வருமாறு.

- **எல்லா விடயங்களும் செயற்பாடுகளும் தொடர்பான தேசிய கொள்கை உருவாக்கம்**

இது அரச பாதுகாப்பு, தேசிய ஒற்றுமை, உள்நாட்டுப் பாதுகாப்பு, தேசிய சட்டமும் ஒழுங்கும் எனும் விடயங்கள் தொடர்பான கொள்கை உருவாக்கத்திற்கான அதிகாரங்களைக் கொண்டுள்ளது.

- **வெளிவிவகார நடவடிக்கைகள்**

இலங்கை வெளிநாடுகளுடன் தொடர்புகொள்ளும் எல்லா விடயங்களும், இராஜதந்திர நடவடிக்கைகள், ஐக்கியநாடுகள் சபை, சர்வதேச மாநாடுகளில் பங்கேற்றல் அதன் தீர்மானங்களை நிறைவேற்றல், வெளிநாட்டு ஒப்பந்தங்கள், இணக்கப்பாடுகளை ஏற்படுத்திக்கொள்ளல், அவற்றைச் செயற்படுத்தல், போரும் சமாதானமும், வெளிநாட்டு நீதிமன்ற அதிகாரங்கள் என்பன இதில் அடங்கும்.

- **தேசிய வருமானத்திற்கும் நிதிக்கொள்கைக்கும் மற்றும் வெளிநாட்டு வளங்களுக்குமான நிதி நடவடிக்கைகள்**
- **நீதிமன்றத்திற்கும் நீதிமன்றத் தொகுதிக்கும் கீழ்ப்பட்ட வகையில் நீதியை அனுபவித்தல்**

- குடிவரவு, குடியகல்வு மற்றும் குடியுரிமை
- சனத்தொகை மற்றும் புள்ளிவிபரங்கள்

### மூன்றாவது நிரல் (இணைந்து நிறைவேற்றும் பணிகள்)

மத்திய அரசும் மாகாண சபைகளும் இணைந்து அனுபவிக்கும் அதிகாரங்களே இந் நிரலில் இடம்பெறுகின்றன. இந்நிரலில் 36 அதிகாரங்கள் குறிப்பிடப்பட்டுள்ளன. அவற்றுள் சில வருமாறு.

#### திட்டமிடல்

இதன் மூலம் மாகாண மட்டத்தில் திட்டமிடல் முறையை உருவாக்கலும் மதிப்பிடல், நிர்வாகம், அரச தனியார் துறைகளில் முதலீட்டு வேலைத் திட்டங்களை மதிப்பீடு செய்தல்.

#### தேசிய வீடமைப்பும் நிர்மாணமும்

நகர அபிவிருத்திப் பிரதேசங்களில் பொருளாதார, சமூக ரீதியிலானதும் பௌதிக அபிவிருத்தி, ரீதியிலானதும் ஒன்றிணைந்த திட்டத்தை மேம்பாடடையச் செய்தலும் திட்டத்தை செயற்படுத்தலும்

#### சமூக சேவைகளும் புனர்வாழ்வும்

இருப்பிடங்கள் இழந்தோருக்கு உதவி செய்தல், அவர்களுக்குப் புனர்வாழ்வளித்தல் மற்றும் நிவாரணம் வழங்கல், வறட்சி, வெள்ளம், நோய் மற்றும் அசாதாரண காரணங்களின் போது ஏற்படும் இடரின் போது நிவாரணம் வழங்கல், மற்றும் பாதிக்கப்பட்டோருக்குப் புனர்வாழ்வளித்தல், மீள்குடியேற்றம்.

#### விவசாயமும் கமநல சேவையும்

விவசாயத்துடன் இணைந்த கைத்தொழில்களை ஆரம்பித்தலும் அபிவிருத்தி செய்தலும் விவசாயப் பண்ணைகளை உருவாக்குதலும் அவற்றைப் பரிபாலித்தலும், தனியார் நாற்று மேடைகளை மேற்பார்வை செய்தல் மற்றும் மண் பாதுகாப்பு.

## உள்ளூராட்சி மன்றங்கள்

மத்திய அரசின் நிர்வாக நடவடிக்கைகளை இலகுவாக்கும் பொருட்டும் செயற்றிறன் மிக்க மக்கள் சேவையை வழங்கும் பொருட்டும் இலங்கையில் உள்ளூராட்சி மன்றங்கள் நிறுவப்பட்டுள்ளன. குறிப்பிட்ட நிலப்பிரதேசத்தை அடிப்படையாகக் கொண்டு மக்களினதும் மக்கள் பிரதிநிதிகளினதும் பங்களிப்புடன் பொது மக்களின் தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ளக் கூடியதாயிருப்பதை உள்ளூராட்சி மன்றங்களில் காணலாம். இந்த உள்ளூராட்சி மன்றங்கள் மற்றும் அதன் பணிகள்

தொடர்பாக ஒன்பதாம் தரத்தில் கற்றுள்ளீர்கள். எனவே இங்கு உள்ளூராட்சி மன்றங்களின் பிரதானிகள் மற்றும் அவர்களின் பணிகள் பற்றி அறிந்து கொள்ளலாம். எமது நாட்டில் செயற்படும் உள்ளூராட்சி மன்றங்களும் அவற்றின் பிரதானிகளும் அவர்களின் பதவிகளும் பின்வருமாறு.

| | | |
|---|---|---|
| மாநகர சபை | → | நகர பிதா/ உப நகர பிதா |
| நகரசபை | → | தலைவர் / உப தலைவர் |
| பிரதேச சபை | → | தலைவர் / உப தலைவர் |

### நகரபிதா (தலைவர்) வின் பதவி வகிப்போரின் அதிகாரங்களும் பணிகளும்

- மாநகர, நகர, பிரதேச சபைகளின் நிறைவேற்று அதிகாரியாகச் செயற்படுதல்.
- சபைக் கூட்டத்திற்கு அழைப்பு விடுத்தல், தலைமை வகித்தல், ஒத்திவைத்தல்.
- வரவு - செலவுத் திட்டத்தைத் தயாரித்தலும் அதற்கு சபையின் அனுமதியைப் பெற்றுக் கொள்ளுதலும்.
- தனது நிர்வாகப் பிரதேசத்திற்குரிய அபிவிருத்தியைத் திட்டமிடலும் அதனை செயற்படுத்தலும்.
- மத்திய அரசு மற்றும் மாகாண சபைகளுடன் இணைந்து நடவடிக்கைகளை மேற்கொள்ளுதல்.
- மக்கள் பயன்பாட்டுக்கான சேவைகளை வழங்குவதில் முன்னின்று செயற்படுதல்

### உப நகர பிதா (உப தலைவர்) அதிகாரங்களும் பணிகளும்

- தான் சார்ந்த உள்ளூராட்சி சபைத் தலைவருக்கு உதவியாகச் செயற்படுதல்.
- தலைவர்கள் இல்லாத சந்தர்ப்பத்தில் தலைமை தாங்குதல்.

## பொதுச் சபை

உள்ளூராட்சி மன்றமொன்றின் கொள்கை உருவாக்கம் செய்யும் அலகாக இதனைக் குறிப்பிடலாம். இச்சபையானது உள்ளூராட்சி மன்ற எல்லைக்குள் வாழும் வாக்காளர்களால் தேர்தல் மூலம் தெரிவு செய்யும் மக்கள் பிரதிநிதிகளைக் கொண்டிருக்கும். இப்பொதுச் சபையே தலைவர், உபதலைவர் பதவிகளைத் தெரிவு செய்யும். மேலும், சபையின் வரவு - செலவுத் திட்டத்தை அனுமதித்தல், நிர்வாக நடவடிக்கைகளை மேற்கொள்ளல் தொடர்பாக தலைவர் மற்றும் நகர பிதாவுக்கு உதவியாக இருத்தல் என்பனவும் இதன் பணிகளாகும்.

## தெரிவு செய்யப்பட்ட சில நாடுகளின் கட்டமைப்பு ரீதியான மாற்றம்

### ஐக்கிய அமெரிக்கா சமஷ்டி அரசாக உருவெடுத்தமைக்கான காரணங்கள்

ஆரம்ப காலத்தில் 13 குடியேற்றங்களுடன் எழுச்சியடைந்த ஐக்கிய அமெரிக்கா இன்று 50 மாநிலங்களைக் கொண்டதாக விளங்குகின்றது. நாட்டின் கிழக்கு கரையோரமாகவே ஆரம்பக்குடியேற்றங்கள் அமைந்திருந்தன.

அக்குடியேற்றங்கள் பதின்மூன்றும் சமஷ்டியாக உருவாக முன்னர் சுயதீனமான அரசுகளாக விளங்கின. ஆயினும் பிற்காலத்தில் தேசிய பாதுகாப்பை உறுதிப்படுத்தல், பொருளாதார அபிவிருத்தி என்பவற்றை நோக்காகக் கொண்டு ஐக்கிய அமெரிக்க குடியரசுகளாக ஒன்றிணைந்தன. அதன் பயனாக 13 குடியரசுகளை உள்ளடக்கிய ஐக்கிய அமெரிக்கா என்ற அரசு உருவானது. அதே போன்று நீண்ட காலம் பிரித்தானியாவின் குடியேற்றமாக இருந்து எதிர்கொண்ட கசப்பான அனுபவங்கள் மீண்டும் ஏற்படாத வண்ணம் பலம் வாய்ந்த அரசொன்றைக் கட்டியெழுப்புவதை நோக்கமாக கொண்டிருந்தமை குறிப்பிடத்தக்கது.




உரு 2.1
ஆரம்பகால 13 குடியேற்றங்கள்

ஐக்கிய அமெரிக்க குடியரசுகள் கி.பி 1787 இல் அரசியல் யாப்பை உருவாக்கும் போது அதிகாரத்தைப் பங்கீடு செய்வதற்கான சட்டத்தை யாப்பில் உள்ளடக்கியிருந்தது. அதன்படி மத்திய அரசின் அதிகாரங்களை யாப்பில் குறிப்பிட்டு ஏனைய அனைத்து அதிகாரங்களயும் மாநில அரசுகளுக்கு வழங்கியது. மாநில அரசுகளைப் பலப்படுத்துவதே இதன் நோக்கமாகும்.

## ஐக்கிய அமெரிக்காவின் அரசியலமைப்பின் கட்டமைப்பு

- நிறைவேற்றதிகாரம் கொண்ட சனாதிபதியால் அதிகாரத்தைச் செயற்படுத்தப்படுதல்
- சட்டத்துறையான காங்கிரஸ் பிரதிநிதிகள் சபை, செனட் சபை எனும் இரட்டை மன்றமாகச் செயற்படுதல்.
- சனாதிபதியால் சில அதிகாரங்கள் நடைமுறைப் படுத்தப்படும் போது, செனட் சபையின் அனுமதியைப் பெறுதல் வேண்டும்.

  **உதாரணம்** : போர்ப் பிரகடனம், உயர் அதிகாரிகளின் நியமனம் (வெளிநாட்டுத் தூதுவர், உயர் நீதிமன்ற நீதிபதிகள்).
- மத்திய அரசிற்கும் மாநில அரசுகளுக்கும் இடையில் அதிகாரங்களைச் செயற்படுத்துவது தொடர்பில் பிரச்சினைகள் ஏற்படின், அதனைத் தீர்ப்பதற்கான அதிகாரம் உயர் நீதிமன்றத்திடம் ஒப்படைக்கப்பட்டுள்ளது.

- ஒவ்வொரு மாநிலத்திலிருந்தும் செனட் சபைக்கு இரண்டு பிரதிநிதிகள் வீதம் நியமனம் செய்தல்.
- சமஷ்டி நீதிமன்றத் தொகுதியொன்று செயற்படுதல்.
- சட்டத்துறையான காங்கிரஸ் உருவாக்கும் சட்டமொன்று அரசியல் யாப்புடன் முரண்படுமாயின், அதனை இரத்துச் செய்யும் அதிகாரம் உயர் நீதிமன்றத்திடம் வழங்கப்பட்டுள்ளது.
- அரசியல் யாப்பை மாற்றம் செய்வதற்கு மத்திய அரசின் 2/3 பெருபாண்மையும் மாநில அரசுகளின் 3/4 பெருபாண்மையும் தேவைப்படுதல்.




உரு 2.3 - ஐக்கிய அமெரிக்காவின் 50 மாநிலங்கள்

## ஐக்கிய அமெரிக்கக் குடியரசின் சமஷ்டி யாப்பின்படி அதிகாரப் பங்கீடு செய்யப்பட்டுள்ள விதம்

அரசியல் யாப்பிற்கு ஏற்ப மத்திய அரசுக்குரிய அதிகாரங்கள் குறிப்பிடப்பட்டு ஏனைய அதிகாரங்கள் மாநிலங்களுக்கு வழங்கப்பட்டுள்ளன. அதாவது மத்திய அரசுக்கு நிகராகவே மாநில அரசுகளுக்கும் அதிகளவு அதிகாரங்களை வழங்குவது அரசியல் யாப்பை உருவாக்கியவர்களின் எதிர்பார்ப்பாகும்.

ஐக்கிய அமெரிக்காவின் மத்திய, மாநில அரசுகளுக்குரிய அதிகாரங்கள் சில பின்வருமாறு :

| மத்திய அரசுக்குரிய அதிகாரங்கள் | மாநில அரசுக்குரிய அதிகாரங்கள் |
|---|---|
| • வரி அளவிடலும் அறவிடலும்<br>• நிதி நடவடிக்கை<br>• தேசிய பாதுகாப்பைத் திட்டமிடல்<br>• வெளிநாட்டு வர்த்தகமும் வெளி விவகாரமும்<br>• தேசிய பொருளாதார அபிவிருத்தி | • கல்வி<br>• சுகாதாரம்<br>• வீடமைப்பு<br>• உள்ளூராட்சி பெருந்தெருக்கள் |

நிகழ்காலத்தில் ஐக்கிய அமெரிக்க மாநில அரசுகளை விஞ்சும் வண்ணம் மத்திய அரசாங்கம் பலம்பெற்றுத் திகழ்கின்றபோக்கே காணப்படுகின்றது. அதற்குப் பல்வேறுக் காரணங்கள் ஏதுவாகின்றன. அவற்றள் சில பின்வருமாறு

- சமூக, அரசியல், பொருளாதாரப் பிரச்சினைகளின் சிக்கல்வாய்ந்த தன்மை
- இரண்டாம் உலக யுத்தத்தின் பின்னர் சர்வதேச ரீதியாக ஏற்பட்ட அரசியல் போட்டி நிலைமை
- நிதி தொடர்பாக மத்திய அரசு பலம் பெறும்

## சுவிட்சர்லாந்து சமஷ்டி அரசாக எழுச்சியடைதல்

### சமஷ்டி அரசு உருவாவதற்கான காரணங்கள்

- பிரான்ஸ், ஜேர்மன், இத்தாலி, ஆஸ்திரியா எனும் நாடுகளுக்கு மத்தியில் அமைந்திருந்த காரணத்தால் தேசிய பாதுகாப்பைக் கருத்திற் கொண்டமை
- அதிகளவு தரைத்தோற்ற வேறுபாடு காரணமாகப் பொருளாதார அபிவிருத்தியை அடைவது கடினமாக இருந்தமை.
- இன, மொழி, சமய வேறுபாடுகளுக்குத் தீர்வு காணவேண்டிய நிலைமை.

மேற்படி காரணங்களை அடிப்படையாகக் கொண்டு சுவிட்சர்லாந்து சமஷ்டி அரசாக உருவானது. அது சமஷ்டி அரசாக உருவாக முன்னர், பல்வேறு சிறிய அரசுகளாகக் காணப்பட்டது. 19 ஆம் நூற்றாண்டின் மத்தியில் கத்தோலிக்க, புரட்டஸ்தாந்து சமயங்களிடையே சிவில் யுத்த நிலை ஒன்று தோன்றியது. சமஷ்டி ஆட்சி முறை உருவாக்கத்தின் மூலமே அது தீர்க்கப்பட்டது.




உரு 2.3 சுவிட்சர்லாந்தின் பூகோள வரைபடம்

41,300 சதுர கிலோமீற்றர் பரப்பளவைக் கொண்ட சுவிட்சர்லாந்து, ஜேர்மன், பிரான் சிய, இத்தாலிய, உரோமானிய மொழிகளைப் பேசுகின்ற மக்களைக் கொண்ட ஒரு நாடாகும். அம்மொழிகள் அனைத்தும் அரச கரும மொழிகளாகக் கருதப்படுவது ஒரு சிறப்பம்சமாகும்.



உரு 2.4 சுவிட்சர்லாந்து

சுமார் 150 வருடங்களுக்கு முன்னர் சுவிட்சர் லாந்தின் அரசியல் யாப்பு உருவாக்கப்பட்டது. ஆயினும் அவ்வப்போது அது சீர்திருத்தம் செய்யப்பட்டு வந்துள்ளது. இறுதியாக 1999 ஆம் ஆண்டு அரசியல் யாப்பில் சீர்த்திருத்தம் செய்யப்பட்டது. அதன்படி 'கென்ரன்' எனப்படும் 26 மாநில அரசுகள் அங்கு நிலவுகின்றன. அவை மிகவும் சுதந்திரமாக செயற்படுவது மற்றுமொரு சிறப்பம்சமாகும்.

## சுவிட்சர்லாந்து சமஷ்டி முறையில் அரசியல் கட்டமைப்பு

- சமஷ்டிப் பேரவை எனும் சட்டத்துறை இரட்டை மன்றமாக செயற்படுதல் அவை தேசிய சபை, அரச சபை என்பனவாகும்.
- நிறைவேற்றுத் துறையானது ஏழு பேரைக் கொண்ட ஒரு குழுவாகச் செயற்படுகின்றது. அக்குழுவின் அங்கத்தவர்களை சமஷ்டிப் பேரவை நியமனம் செய்யும்.
- நிறைவேற்றுக் குழுவினர் 'சமஷ்டி சபை' என்று அழைக்கப்பட்டதுடன் அச்சபை யில் ஒருவர் தலைவராக செயற்படுவார். ஆயினும் அத்தலைவர் ஏனைய குழு அங்கத்தவர்களைவிட மேன்மையானவராகக் கருதப்படமாட்டார்.

## மத்திய அரசின் அதிகாரங்கள்

- வெளிவிவகாரம்
- போர், சமாதானம் என்பவற்றைப் பிரகடனப்படுத்தல்
- வெளிநாடுகளுடன் ஒப்பந்தங்கள் செய்தல்
- பாதுகாப்பு மற்றும் இராணுவ நடவடிக்கை
- தகவல் பரிமாற்றம், தபால் தந்தி சேவை

## ‘ கென்ரன்’ களுக்குரிய அதிகாரங்கள்

- கல்வியும் உயர் கல்வியும்
- செய்திப் பத்திரிகைக் கட்டுப்பாடு
- பெருந்தெருக்கள்
- கைத்தொழில்
- சமயங்கள்
- தொற்று நோய்களைத் தடுத்தல்
- வங்கி நடவடிக்கை

## சுவிட்சர்லாந்து சமஷ்டி முறையின் சிறப்பியல்புகள்

- மத்திய அரசுக்கும் ‘‘கென்ரன்’’ அரசுகளுக்குமான அதிகாரங்கள் யாப்பில் கூறப்பட்டுள்ளதுடன் ஏனைய அதிகாரங்கள் யாவும் மத்திய அரசுக்குரியன.
- அதிகாரங்களை செயற்படுத்தும் போது பிரச்சினையொன்று உருவாகுமானால் அதனைத் தீர்க்கும் ‘அதிகாரம்’ சமஷ்டிப் பேரவைக்குரியது
- ‘கென்ரன்’ களுக்கு தமது அதிகாரத்தை செயற்படுதுவதில் சுயாதீனமாக செயற்பட முடியாது.
- ‘கென்ரன்’ அரசுகள் தீர்மானம் மேற்கொள்ளும் போது மக்கள் கருத்துக்களைக் கோருவதற்கு நேரடி சனநாயக முறைகளைப் பிரயோகிக்க முடியும்.

# 03 பன்மைப் பண்பாட்டுச் சமூகம்

## அறிமுகம்

எமது நிகழ்கால சமூகமானது மிகவும் சிக்கலானதாக விளங்குகின்றது. இதில் சமூக, பொருளாதார, அரசியல், கலாசாரக் காரணிகள் செல்வாக்குச் செலுத்துகின்றன. அத்துடன் குடிப்பெயர்வு, ஆக்கிரமிப்பு போன்ற புவியியல்ரீதியான காரணிகளும் செல்வாக்குச் செலுத்துகின்றன. இதன் காரணமாக நிகழ்கால சமூகமானது இனரீதியாக, மொழி ரீதியாக, மதரீதியாக, பண்பாடுகள் மற்றும் பழக்கவழக்கங்களின் அடிப்படையில் வேறுபட்டதாக விளங்குகிறது. இவ்வேறுபாடுகளைக் கொண்ட சமூக முறை சமூக விஞ்ஞானிகளால் பன்மைத்துவ சமூகம் என அறிமுகம் செய்யப்படுகின்றது. பன்மைத்துவ சமூகங்களில் வேறுபட்ட மக்கள் குழுக்கள் தமது பெறுமானங்களைப் பாதுகாத்துக் கொள்வது தொடர்பில் அவர்களுக்கு உரித்தான விசேட பழக்க வழக்கங்கள், சமய வழிபாடுகள், விருப்பு வெறுப்புகளை சம்பிரதாயங்களுக்கு ஏற்ப பழக்கப்படுத்திக் கொண்டுள்ளனர். இவ்வாறு ஒரு நாட்டிற்குள்ளும் பணிமனைப் பண்பாட்டுப் பல்வகைமைத் தன்மை நிலவலாம். இவ்வாறன சமூகம் ''பன்மைப் பண்பாட்டுச் சமூகம்'' என அழைக்கப்படுகின்றது.

## பன்மைப் பண்பாட்டுச் சமூகம் என்பதனை அறிந்து கொள்வோம்

''பண்பாடு'' என்றால் என்ன? என்பது தொடர்பில் சமூக விஞ்ஞானிகளும் தத்துவஞானிகளும் பல்வேறு வரைவிலக்கணங்களை முன்வைக்கின்றனர். அவற்றில் சில வரைவிலக்கணங்கள் கீழே தரப்படுகின்றன.

''பண்பாடு'' என்பது அறிவு, வழிபாடுகள், கலைகள், சட்டம், கலாசாரம், பழக்கவழக்கம் மற்றும் சமூகத்தில் வாழ்வதன் மூலம் மனிதர்கள் பெற்றுக்கொள்கின்ற ஏனைய சகல பின்பற்றுதல்கள், ஆற்றல்கள் என்பவற்றின் மொத்த அமைப்பாகும்''

- T.B. **டெயிலர்** -

''குறியீட்டு ரீதியாக சமூகம் உரித்தாக்கிக் கொண்டுள்ளதும் பாரம்பரியமாக தமதாக்கிக் கொண்டுள்ளதுமான சகலவிதமான நடத்தைக் கோலங்களுக்கும் வழங்கக்கூடிய கூட்டான பெயரே பண்பாடாகும்''

**-சார்ளஸ். A. எல்வூட்-**

''வழிபாடுகள், சிந்தனை முறை, நடைமுறைக் கலைகள், வாழ்க்கை முறைகள், பழக்கவழக்கங்கள், சம்பிரதாயங்கள் மற்றும் சமூக ரீதியாகப் பின்பற்றுவது தொடர்பில் ஏற்றுக்கொள்ளப்பட்ட நடத்தைகள் பண்பாடாகும்.''

**- உ.கூ.ஹீலர் -**

மேற்படி வரைவிலக்கணங்களிலிருந்து எமது அனைத்து நடவடிக்கைகளும், விருப்பு வெறுப்புகளும் பண்பாடு என்பதற்கு உரித்தானவையாகும் என்பது தெளிவாகின்றது.

நாம் யாவரும் சமூகத்தில் ஏற்றுக்கொள்ளப்பட்ட வாழ்க்கை முறைகளுக்கேற்ப ஒழுகிச்செயற்பட வேண்டியுள்ளது. இத்தகைய பழக்க வழக்க முறைகள் அல்லது நற்பண்புகளே பண்பாடாகும். தனிமனிதர் என்ற வகையில் பிறப்பு முதல் இறப்பு வரை ஒவ்வொருவரும் உரிய பண்பாட்டிற்கு ஏற்பவே நாம் செயற்படுகின்றோம். சமூகத்தில் உள்ள எல்லாச் சவால்களையும் எதிர்கொள்வதற்கான கூறுகள் பண்பாட்டில் உள்ளன. அவற்றுள் சில கூறுகள் கீழே தரப்பட்டுள்ளன.

- சமயம்
- மொழி
- அறிவு
- ஆடையணிகலன்கள்
- உணவு, பானங்கள்
- கலைகள்
- விதிமுறைகள்
- வழிபாடுகள்
- பழக்கவழக்கங்கள்
- மரபுகள்
- மதிப்பு
- குடும்பப் பின்னணி
- பொருளாதாரப் பின்னணி
- நம்பிக்கைகள்
- உபகரணப் பயன்பாடு
- நண்பர் குழாம்
- கல்வி
- அரசியல்
- தொழினுட்பம்
- வாழ்விடப் பிரதேசம்
- உட்கட்டமைப்பு வசதிகள்

ஒவ்வொரு சமூகத்திலும் அந்த சமூகத்தை இயக்குவதற்குத் தேவையான முக்கிய பொறுப்புகள் பண்பாட்டின் மூலம் மேற்கொள்ளப்படுகின்றன. அத்துடன் காலத்திற்கேற்ப சமூகத்தின் பண்பாடு மாற்றமடைந்தும் வளர்சியடைந்தும் வருகின்றது. மனிதர் வாழ்கின்ற சமூக நிலைமைக்கேற்ப பண்பாடும் வேறுபடுகிறது. இதன் காரணமாக வெவ்வேறு சமூகங்களில் அவர்களுக்கே உரித்தான பண்பாடுகளைக் காணலாம்.

**செயற்பாடு**

நீங்கள் பங்குபற்றுகின்ற ஏதாவதொரு வைபவம் ஒன்றின் செயற்பாடுகளை அதன் தொடக்கத்திலிருந்து முடிவுவரை நன்கு அவதானித்து அதன்போது வெளிப்படுத்தப்படும் பண்பாட்டுப் பண்புக்கூறுகளை படிமுறையாக எழுதுங்கள். உதாரணம் - திருமண வைபவம் அல்லது மரணச் சடங்கு நிகழ்வு

## பன்மைப் பண்பாட்டுச் சமூகத்தின் அடிப்படைப் பண்புகள்

1. பல்வேறு இனங்களைச் சேர்ந்த, பல்வேறு மத நம்பிக்கைகளையுடைய, பல்வேறு மொழிகளைப் பேசுகின்ற மக்கள் ஒன்றாக வாழுதல்.

2. மேற்படி பல்வகைத் தன்மை காரணமாக ஒவ்வொரு கலாசாரத்திற்கும் உரியதான பழக்க வழக்கங்கள், மரபுகள் மற்றும் பண்பாட்டு அடிப்படைகள் காணப்படல்.

3. ஒரே இனக் குழுவினராக இருந்தபோதிலும் பிரதேச ரீதியான வேறுபாட்டைக் காணமுடிதல்.

4. தற்காலத்தில் உலக நாடுகளில் வாழும் மக்கள் இனரீதியாகத் தமது நாட்டு எல்லையைத் தாண்டிச் சென்று வேறு இனங்களுடன் கலந்து பல்வகைமைக் கலாசார சமூகவமைப்பொன்று உருவாகியிருத்தல்.

5. பூகோளமயமாக்கல், தொடர்பாடல் சாதனங்களின் வளர்ச்சி மற்றும் சுற்றுலாத்துறையின் வளர்ச்சி என்பவற்றால் முழு உலகமும் ஒரு கிராமமாகச் சுருங்கியிருப்பதால் கலாசாரச் சங்கமங்கள் மிக வேகமாக நிகழ்தல்.

### இலங்கைப் பன்மைச் சமூகம்



## செயற்பாடு

வேறுபட்ட இனத்தவர் அல்லது மத நம்பிக்கையுடையவர்களின் பழக்கவழக்கங்கள், சம்பிரதாயங்கள் தொடர்பில் உதாரணங்கள் எழுதுக.

- பௌத்தர்களின் பழக்கவழக்கங்களும் சம்பிரதாயங்களும்
- இந்துக்களின் பழக்க வழக்கங்களும் சம்பிரதாயங்களும்
- முஸ்லிம்களின் பழக்க வழக்கங்களும் சம்பிரதாயங்களும்
- கிறிஸ்தவர்களின் பழக்க வழக்கங்களும் சம்பிரதாயங்களும்

(இது தொடர்பில் 6,7,8,9 ஆம் தரங்களில் நீங்கள் கற்றுக்கொண்ட விடயங்களைப் பயன்படுத்துங்கள்)

பல்வேறு மொழிகளைப் பேசக்கூடிய, பல்வேறு சமயங்களைக் கடைப்பிடிக்கக்கூடிய, பல்வேறு பண்பாடுகளைப் பின்பற்றக்கூடியவர்கள் ஒன்றாக வாழுகின்றனர். சமகால உலகில் அநேக நாடுகளில் பன்மைப் பண்பாட்டுச் சமூகங்கள் காணப்படுகின்றன. பன்மைப் பண்பாட்டுச் சமூகத்திற்கு எமது நாடான இலங்கை இந்தியா, ஐக்கிய அமெரிக்கா போன்ற நாடுகள் சிறந்த எடுத்துக்காட்டாகும்.

**இன அடிப்படையில் இலங்கையின் சனத்தொகை - 2012**

| இனங்கள் | குடித்தொகை | சதவீதம் |
|---|---|---|
| சிங்களவர் | 15,250,081 | 74.9% |
| இலங்கைத் தமிழர் | 2,269,266 | 11.2% |
| இலங்கை முஸ்லிம் | 1,892,638 | 9.3% |
| இந்தியத் தமிழர் | 839,504 | 4.1% |
| வேறு | 107,950 | 0.5% |

அட்டவணை - 3.1 மூலம் - குடிசன தொகை மதிப்பீடு - 2012

**சமய அடிப்படையில் இலங்கையின் சனத்தொகை - 2012**

| சமயம் | குடித்தொகை | சதவீதம் |
|---|---|---|
| பௌத்தம் | 14,272,056 | 70.1% |
| இந்து | 2,561,299 | 12.6% |
| இஸ்லாம் | 1,967,523 | 9.7% |
| கிறிஸ்தவம் | 1,552,161 | 7.6% |
| வேறு | 6,400 | 0.1% |

அட்டவணை - 3.2 மூலம் - குடிசன தொகை மதிப்பீடு - 2012

இனரீதியிலும், சமயரீதியிலும் குடித்தொகை மேற்படி அமைந்தாலும் ஓர் இனக் குழுவினர் வேறுபட்ட சமயங்களைப் பின்பற்றுபவர்களாகவும் காணப்படுகின்றனர்.

| | | |
|---|---|---|
| **உதாரணம் :** | சிங்கள மக்கள் - | பௌத்தம், கத்தோலிக்க சமயங்கள் |
| | தமிழ் மக்கள் - | இந்து, கத்தோலிக்க சமயங்கள் |




உரு 3.1 இலங்கையில் காணப்படும் சமயத் தலங்கள் சில

**செயற்பாடு**

இந்தியா, ஐக்கிய அமெரிக்கா போன்ற நாடுகளில் உள்ள பன்மைப் பண்பாட்டின் பண்புகளை அட்டவணைப்படுத்துக.

## இலங்கையில் பன்மைப் பண்பாட்டுச் சமூகம் உருவாவதில் செல்வாக்குச் செலுத்தும் காரணிகள்

### அமைவிடம் தொடர்பான காரணிகள்

- புவியியல் அமைவிடம்
- இந்து சமுத்திரத்தின் மத்தியில் அமைந்துள்ளமை
- இந்தியாவிற்கு அண்மையில் அமைந்துள்ளமை
- கிழக்கு - மேற்கு வர்த்தகப் பாதையின் மத்தியில் அமைந்துள்ளமை

### குடிப்பெயர்வு தொடர்பான காரணிகள்

- விஜயனும் தோழர்களும் வருகை தந்தமை
- விஜயனின் முடிசூட்டலுக்கு மதுராபுரி இளவரசி வருகை தந்தமை
- பண்டுவாசுதேவனும் குழுவினரும் வருகை தந்தமை
- பத்தகச்சனாவும் சகோதரக் குழுவினரும் வருகை தந்தமை
- மகிந்த தேரரும் மதத்தூதுக் குழுவினரும் வருகை தந்தமை
- சங்கமித்தை பிக்குணியும் குழுவினரும் வருகை தந்தமை

இவற்றை விட சமகாலத்தில் சுற்றுலா நடவடிக்கைகள், வேலைவாய்ப்பு, கல்வி போன்ற பல்வேறு நோக்கங்களுக்காக நாடுகளுக்கிடையில் குடிப்பெயர்வு இடம்பெறுகிறது என்பது குறிப்பிடத்தக்கது.

### ஆக்கிரமிப்பு தொடர்பான காரணிகள்

- சேனன், குத்திகனின் ஆக்கிரமிப்பு
- பண்டு பாரிந்த குழுவினரின் ஆக்கிரமிப்பு
- கலிங்க மாகனின் ஆக்கிரமிப்பு
- மேலைத்தேய ஐரோப்பிய நாட்டவரின் குடியேற்றவாத ஆக்கிரமிப்பு

### பல்வேறு தேசத்தவர்கள் வியாபார வர்த்தக நோக்கில் வருகை தந்தமை

- அரேபியர்
- இந்தியர்
- சீனர்
- ஐரோப்பியர்

### தொழிலாளர்கள் அழைத்து வரப்பட்டமை

இலங்கையில் பிரித்தானியரின் ஆட்சி நிலவிய போது பெருந்தோட்டச் செய்கையை மேற்கொள்வதற்காக தொழிலாளர்களாக தென்னிந்தியாவிலிருந்து தமிழர்கள் அழைத்து வரப்பட்டனர். அவர்களது மரபுகளும் தனித்துவம் இலங்கையின் பண்பாட்டு பல்வகைமையில் செல்வாக்குச் செலுத்தியுள்ளமையை அவதானிக்கலாம்.

## பன்மைக் கலாசார சமூகத்தில் நல்லாட்சியின் தேவை

### நல்லாட்சி பற்றிய அறிமுகம்

பொருளாதார மற்றும் மனிதவளங்களில் பற்றாக்குறை நிலவாதபோதிலும் நாடுகள் சிலவற்றின் பொருளாதார வளர்ச்சியானது மந்தமாகக் காணப்படல் மற்றும் சமூக நீதி வீழ்ச்சியடைந்திருத்தல் போன்ற பிரச்சினைகள் மீது பாதிப்புச் செலுத்துகின்ற காரணிகள் யாவை என்பது தொடர்பில், 1980 களின் பின்னர் உருவான உரையாடல்களிலிருந்து தோன்றிய ஓர் எண்ணக்கருவாக நல்லாட்சி விளங்குகிறது.

இத்தகைய நாடுகளில் காணப்படும் பொருளாதார மற்றும் மனித வளங்கள் உரிய வகையில் முகாமைத்துவம் செய்யப்படாமையை அடிப்படையாகக் கொண்டு பொருளாதார வளர்ச்சி மந்தகதியடைந்துள்ளது எனவும் அதன் பெறுபேறாக சமூக நீதியை நிலைநாட்டுதல் வீழ்ச்சியடைந்துள்ளது எனவும் மேற்படி உரையாடல்களின் மூலம் எடுத்துரைக்கப்பட்டது. இத்தகைய நிலைமைகள் தோன்றுவதன் மீது செல்வாக்குச் செலுத்தக் கூடிய சில காரணிகள் கீழே தரப்பட்டுள்ளன.

- அரசியல் அதிகாரம் முறையற்ற வகையில் ஒன்று குவிக்கப்பட்டிருத்தல்.
- அரச நிர்வாகம் வினைத்திறனற்றிருத்தல்.
- அரச சேவை அரசியல் மயமாக்கப்பட்டிருத்தல்.
- அரச கொள்கை உருவாக்கம் மற்றும் அமுலாக்கம் தொடர்பில் மக்கள் பங்கேற்பு காணப்படாமை.
- இலஞ்சம் மற்றும் ஊழல்கள் உயர்வடைந்து காணப்படல்.
- அரச நிர்வாகிகள் (ஆட்சியாளர்கள்) பொறுப்புக் கூறாது செயற்படல்.

அநேக நாடுகளில் எதிர்நோக்கப்படும் இத்தகைய பிரச்சினைகளில் இருந்து விடுபட வேண்டுமாயின் மேற்படி பலவீனங்களைக் களையவேண்டியதன் அவசியம் வலியுறுத்தப்படுகிறது. அத்துடன் இது தொடர்பிலான ஒரு தீர்வு வழிமுறையாகவே நல்லாட்சி பற்றிய எண்ணக்கரு முன்வைக்கப்படுகிறது.

''நல்லாட்சி என்பது அரச கொள்கைத் தீர்மானம் மற்றும் அதனைச் செயற்படுத்தல் என்பதுடன் தொடர்புபட்டதொரு செயற்பாடாகும். அதன் போது பொதுமக்களின் நலன்களை உச்ச அளவில் பேணத்தக்க வகையிலும் மனித உரிமைகள் மற்றும் சமூக நீதி பாதுகாக்கப்படும் வகையிலும் சட்டத்தை மதித்தும் வெளிப்படையாக செயற்படும் இலஞ்சம், ஊழல் அற்றதாயும் பொறுப்புடன் செயற்படுதல் ஆட்சியாளரின் கடமையாகும்.''

## நல்லாட்சியின் அடிப்படைப் பண்புகள்

1. ஊழல்களற்ற, முறைகேடுகளற்ற ஆட்சியும் நிர்வாகமும்.
2. சுதந்திரமும், சமூக நீதியும் நிலைநாட்டப்படல்.
3. சட்டத்தின் ஆட்சிக்கு மதிப்பளித்தலும் நீதித்துறையின் சுதந்திரம் பாதுகாக் கப்படலும்
4. ஆட்சியதிகாரங்களை நடைமுறைப்படுத்துவோர் மக்களுக்கும் பொறுப்புக் கூறுவதற்குக் கடமைப்பட்டிருத்தல்.
5. உரிமைகள் பாதுகாக்கப்படலும், உறுதி செய்யப்படலும்
6. ஊடக சுதந்திரத்தைப் பாதுகாத்தல்
7. வளங்களை வினைத்திறனான வகையில் பயன்படுத்தல்.
8. வெளிப்படைத் தன்மையான வகையில் செயற்படல்
9. அரசியல் சமுதாயப்படுத்தலுக்கு அவசியமான பின்னணியை உருவாக்குதல்
10. அரசியல் யாப்பினை அடிப்படையாகக் கொண்டு ஆட்சி நிர்வாகம் இடம்பெறுவதைப் பாதுகாத்தலும், உறுதி செய்தலும்.

## நல்லாட்சி தொடர்பில் ஒவ்வாருவரினதும் அரசியல், சமூக, பொருளாதார மற்றும் கலாசாரப் பெறுமானங்களுக்கு மதிப்பளிக்க வேண்டியதன் முக்கியத்துவம்.

நல்லாட்சியினை ஏற்படுத்துவது தொடர்பில் ஒவ்வொருவரினதும் அரசியல், சமூக, பொருளாதார, கலாசார ரீதியான பெறுமானங்களுக்கு மதிப்பளிப்பளிப்பதுடன் நல்லாட்சியின் பண்புகளை சமூகத்தில் உறுதி செய்வதும் அவசியமாகும். இது தொடர்பாகப் பின்வரும் விடயங்களில் கவனம் செலுத்த வேண்டியது இன்றியமையாதது.

### அரசியல்

- ஒவ்வொருவரினதும் அரசியல் பெறுமானங்களுக்கு மதிப்பளித்தல்.
- தமக்கு விருப்பமான அரசியல் கருத்தைப் பின்பற்றுதல்.
- முடிவுகளை மேற்கொள்வது தொடர்பில் சுதந்திரமாகச் செயற்படல்.
- அரசியல் தீர்மானங்களை மேற்கொள்வோர் மீது தடைகளை ஏற்படுத்தாதிருத்தல்.
- சுதந்திரமானதும், நீதியானதுமான தேர்தல் நடாத்துதல்.
- அரசியல் தலைமைத்துவத்துக்கு மதிப்பளித்தல்.

## பொருளாதாரம்

- தாம் விரும்பிய சட்டபூர்வமான தொழில் அல்லது வியாபார முயற்சியை மேற் கொள்ளுதல்.
- தொழிற் சங்கங்களை நிறுவிச் செயற்படுத்துதல்.
- உட்கட்டமைப்பு வசதிகளை அபிவிருத்தி செய்தல்.
- சமனற்ற வகையில் வருமானம் பகிரப்படுவதை நீக்குவதற்கு நடவடிக்கை எடுத்தல்.

## சமூகமும் பண்பாடும்

- தாம் விரும்புகின்ற சமயத்தை பின்பற்றுதல்.
- பழக்க வழக்கங்களைக் கடைப்பிடித்தல்.
- பல்வேறு வைபவங்களை மேற்கொள்ளல்.
- தாம் விரும்பிய பிரதேசத்தில் வாழுதல்.
- பல்வேறு மொழிகளைக் கற்று அவற்றைப் பயன்படுத்துதல்.
- ஏனைய கலாசாரங்களை மதித்தல்.

மேலே காட்டப்பட்டுள்ள அரசியல், பொருளாதார, சமூக, பண்பாட்டு ரீதியிலான பெறுமானங்களுக்கு மதிப்பளித்துச் செயற்படுவது பன்மைப் பண்பாட்டுச் சமூகத்தின் சிறப்பான இயக்கத்திற்கு அத்தியாவசியமானதாகும்.

## பன்மைப் பண்பாட்டுச் சமூகத்தில் நல்லாட்சியைச் செயற்படுத்துவதன் மூலம்,

- இனங்களுக்கிடையே நம்பிக்கையைக் கட்டியெழுப்ப முடிகிறது.
- ஒவ்வொருவருக்கும் இடையில் புரிந்துணர்வு விருத்தியடைகிறது.
- ஆட்சி நடவடிக்கைகள் தொடர்பில் சகல இனத்தவர்களினதும் பங்குபற்றல் வளர்சியடைகிறது.
- ஒவ்வொருவருக்கும் இடையே பரஸ்பரம் மதிப்பளிக்கும் தன்மை விருத்தியடைகிறது.
- சமய, கலாசார வேறுபாடுகளைக் கருத்திற் கொள்ளாது ஒற்றுமையுடன் செயற்படும் நிலை ஏற்படுகிறது.
- சட்டதிட்டங்களுக்கு மதிப்பளித்து சிறந்த பிரசையாக வாழ்வதற்குரிய அனுபவங்களைப் பெற்றுக் கொள்ள முடிகிறது.
- ஒழிவு மறைவின்றி வெளிப்படைத் தன்மையுடன் செயற்படும் நிலை உருவாகின்றது.

## பன்மைப் பண்பாட்டுச் சமூகமும் நவீன அரசும்

நவீன தேசிய அரசு தொடர்பிலான எண்ணக்கருவானது ''ஒரு சமூகத்திற்கு ஓர் அரசு'' என்ற கருவை முன்வைக்கின்றது. இதன் மூலம் கருதப்படுவது யாதெனில், அரசு என்பது ஒரு தேசியம் என்பதாகும். ஒரு நாட்டினுள் பல்வேறு பண்பாடுகளுக்கு உரித்தானவர்கள் வாழ்ந்தாலும் அவர்கள் ஒரே இனமாகவே கருதப்படுவர்.

இலங்கையில் சிங்களவர், தமிழர், முஸ்லிம், வேறு இனங்களைச் சேர்ந்தோர் மற்றும் பல்வேறு பண்பாடுகளுக்கு உரித்தானவர்கள் வாழ்கின்ற போதிலும், அவர்கள் இலங்கையர் என்பதாகவே கருதப்படுகின்றனர்.

சனநாயக ஆட்சிமுறை நடைமுறையிலுள்ள அரசுகளில் பல்வேறு பண்பாட்டு பெறுமானங்களுக்கு மதிப்பளித்தல், வேற்றுமைகளைக் களைவதன் மூலம் ஒரே தேசத்தவர்கள் என்ற வகையில் சுதந்திரமாக அபிவிருத்தியை நோக்கிச் செல்வதற்கு முயற்சிக்கப்படுகிறது.

அநேக அபிவிருத்தியடைந்த நாடுகள் பொருளாதார, சமூக மற்றும் அரசியல் செயற்பாடுகளின் போது அவற்றின் பன்மைப் பண்பாட்டுத் தன்மையை மிகவும் பயனுள்ளதாக ஆக்கிக் கொண்டுள்ளன. '' வேற்றுமைகளுக்கு மத்தியில் ஒற்றுமையை ஏற்படுத்துதல்'' என்பது அவர்களின் இலக்காக விளங்குகின்றது. உதாரணமாக சிங்கப்பூர், சுவிட்சர்லாந்து போன்ற நாடுகளைக் குறிப்பிடலாம்.

**செயற்பாடு**

''பன்மைப் பண்பாட்டுச்சமூக இயல்பை நாட்டு நலனுக்காகப் பயன்படுத்துவோம்'' எனும் தலைப்பின் கீழ் 250 சொற்களுக்கு குறையாத வகையில் கட்டுரை ஒன்றை எழுதுக.

## பன்மைப் பண்பாடுட்டுச் சமூகத்தின் சிறப்பான செயற்பாட்டிற்கு பிரசையொருவரினால் விருத்தி செய்யப்பட வேண்டிய பண்புகள்

- ஒவ்வொருவரினதும் பண்பாடுகளையும் கலாச்சாரங்களையும் அறிந்து கொள்ளல்,
- புரிந்துணர்வு அடிப்படையில் செயற்படல் மற்றும் ஒவ்வொருவருக்கும் மதிப்பளித்தல்.
- பிற சமயங்களுக்கு இடையூறுகளை ஏற்படுத்தாதிருத்தல்.
- பிற கலாசாரங்களை மதித்தல்.
- முரண்பாடுகள் ஏற்படாத விதத்தில் செயற்படல்.

- ஒற்றுமையாகச் செயற்படுவதன் மூலம் சுலபமாக வெற்றியடையலாம் என்பதைப் புரிந்துகொள்ளல்.
- பிற இனத்தவர்களின் மொழிகளைக் கற்றுக் கொள்ளுதலும் பயன்படுத்தலும்.
- சர்வதேச மத செயற்பாடுகள், வேலைத்திட்டங்களை முன்னெடுத்தல்
- பிறரது கருத்துகளைச் செவிமடுத்தலும் அவற்றுக்கு மதிப்பளித்தலும்.
- சமத்துவத்துடன் செயற்படுதல்.

## பன்மைப்பண்பாட்டுச் சமூகத்தின் உறுப்பினர் என்ற வகையில் ஒற்றுமை யுடன் வாழ்வதன் தேசிய முக்கியத்துவம்

**பன்மைப் பண்பாட்டுச் சமூகத்தில் மக்கள் ஒற்றுமையுடன் செயற்படுவதன் மூலம்,**

- தேசிய ஐக்கியம் மற்றும் சகவாழ்வு நிலை விருத்தியடைகிறது.
- முரண்பாடுகள் தீர்க்கப்படுகின்றன.
- அந்நியொன்ய தொடர்பும் நம்பிக்கையும் விருத்தியடைகின்றது.
- ஒரே தேசம் ஒரே நாடு எனும் உணர்வு விருத்தியடைகின்றது.
- மனித சுதந்திரமும் சனநாயகமும் உறுதிப்படுத்தப்படுகின்றது.
- நாட்டின் அபிவிருத்திக்காக சகல பிரசைகளும் ஒன்று சேர்ந்து செயற்படல்.
- தேசிய கடப்பாடாக எண்ணிச் செயற்படுகின்ற நிலை உருவாகின்றது.
- பிற சமயங்களுக்கும் பண்பாடுகளுக்கும் கலாசாரங்களுக்கும் அகௌரவம் ஏற்படாத விதத்தில் செயற்படும் நிலை வளர்ச்சியடைகின்றது.

பன்மைப் பண்பாட்டுச் சமூகமொன்றில் சகவாழ்வுடன் செயற்படுவதன் மூலம் வெற்றியினை இலகுவாகப் பெறமுடிகிறது. சமாதானம், பாதுகாப்பு, சமூக நீதி என்பன நாட்டிலுள்ள பிரசைகள் அனைவருக்கும் சமமாகக் கிடைக்கப்பெறுதல் வேண்டும். சகலரும் ஒற்றுமையுடனும் மகிழ்ச்சிகரமாகவும் வாழவேண்டுமாயின், நாம் முதலில் ஒன்றிணைந்து ஐக்கியமானதும் பலம்மிக்கதுமான தேசத்தினைக் கட்டியெழுப்ப வேண்டியுள்ளது. அதற்காக அர்ப்பணிப்புடன் செயற்படுவது எமது கடமையாகும்.

''ஒரு தாய்ப் பிள்ளைகள் போல'' எமது நாட்டின் தேசிய கீதத்தில் குறிப்பிடப்படும் அம்சத்தினை மலரச் செய்வது நம் அனைவரினதும் பொறுப்பு என்பதை உணர்வோமாக.

### செயற்பாடு

- உமது பிரதேசத்தில் உங்களுடன் சேர்ந்து வாழும் வேறு இனத்தவர்கள், அவர்கள் பின்பற்றுகின்ற சமயங்கள் தொடர்பான தகவல்களை ஆராய்க.
- எமது நாட்டினரால் பயன்படுத்தப்படும் பிரதான மொழிகளைக் கற்றுக்கொள்வதன் முக்கியத்துவம் பற்றி 05 காரணிகளை விளக்கி எழுதுக.
  (விசேடமாக சிங்களவர் தமிழ் மொழியையும் தமிழர் சிங்கள மொழியையும்)

# 04 பொருளாதார முறைமைகளும் தொடர்புகளும்

**இவ்வலகினைக் கற்பதன் மூலம் உங்களுக்கு,**

- அடிப்படைப் பொருளாதாரப் பிரச்சினைகள் மற்றும் பொருளாதார நடவடிக் கைகள் தொடர்பாக விளங்கிக் கொள்வதற்கும்
- பல்வேறு பொருளாதார முறைமைகள் தொடர்பான தகவல்களை ஆராய்ந்து அறிவதற்கும்
- அபிவிருத்தியினை இலக்காகக் கொண்டு சமகாலப் பொருளாதார முறைகளைப் பகுப்பாய்வு செய்வதற்கும்
- இலங்கை மீது உலகமயமாதல் ஏற்படுத்தி இருக்கும் தாக்கங்களைப் பகுத்தாராய்வதற்கும்

**இயலுமென எதிர்பார்க்கப்படுகிறது.**

## அடிப்படைப் பொருளாதாரப் பிரச்சினைகளும் பொருளாதாரச் செயற்பாடுகள்

மனிதர்கள் சமூகமாக இணைந்து வாழ்க்கையை மேற்கொள்ளும்போது பல்வேறு தேவைகளும் விருப்பங்களும் உருவாகின்றன. இத்தகைய தேவைகளையும் விருப்பங்களையும் நிறைவேற்றிக் கொள்வது தொடர்பில் மனிதர்களுக்குப் பல்வேறு பிரச்சினைகளை எதிர்நோக்க வேண்டி ஏற்படுகிறது. அவ்வாறு எதிர்நோக்கப்படும் பிரச்சினைகளுக்குத் தீர்வினைக் காண்பது தொடர்பில் செயற்படுத்தும் வழிமுறைகள் ஒவ்வொரு சமூகத்திலும் வேறுபடுகின்றன. மனிதர்களால் எதிர்கொள்ள நேரிடும் பிரச்சி னைகளைத் தீர்த்துக் கொள்வது தொடர்பில் சமூக அமைப்புகள் ஒழுங்கமைத்துள்ள விதமே பொருளாதார முறை என அழைக்கப்படுகின்றது.

மனிதர்கள் சமூகத்தில் இணைந்து வாழும்போது பல்வேறு தேவைகளும் விருப்பங்களும் உருவாகின்றன என்பதை நீங்கள் நன்கு அறிந்திருப்பீர்கள். மனிதர் தமது செயற்பாடுகளை மேற்கொள்வது தொடர்பில் அத்தியாவசியமான அம்சங்கள் ''தேவைகள்'' என அழைக்கப்படுகின்றன. உணவு, உடை, உறையுள் போன்றன தேவைகளுக்கு உதாரணங்களாகும். இவை அடிப்படைத் தேவைகள் என்பதாகவும் பொருள் கொள்ளப்படுகின்றன.

மேற்குறிப்பிட்ட தேவைகளைப் பூர்த்தி செய்துகொள்வது தொடர்பில் வெவ்வேறு தனியாட்கள் வெவ்வேறு விதமாகச் செயற்படுகின்றனர். இத்தகைய தேவைகளைப்

பூர்த்திசெய்து கொள்வது தொடர்பில் ஏற்படும் ஆசைகள் 'விருப்பங்கள்' என அழைக்கப்படுகின்றன. வீடு ஓர் அடிப்படைத் தேவையாக விளங்குகின்ற போதிலும் அவற்றைப் பூர்த்தி செய்வது தொடர்பில் பல்வேறு விதங்களில் செயற்படமுடியும். இதன்படி குடிசை வீடு, களிமண்வீடு, மாடி வீடு போன்ற வீடுகளை நிறுவ முற்படலாம். தனிப்பட்டவர்களின் சமூக, பொருளாதார நிலைமைகளைப் பொறுத்து விருப்பங்கள் வேறுபடலாம் என்பது மேற்படி உதாரணத்திலிருந்து தெரியவருகின்றது.

தனியாட்களின் விருப்பங்கள் பல்வேறுபட்டவையாகக் காணப்படுவதனைப் போன்று அவை வரையறையற்றவையாகவும் காணப்படுகின்றன என்பதையும் அத்துடன் இவ்விருப்பங்களை நிறைவேற்றிக்கொள்வது தொடர்பில் போதுமான அளவு வளங்கள் கிடையாது என்பதையும் நாம் அறிவோம்.

எமக்கு பெரியதொரு வீடு ஒன்றை அமைப்பதற்குத் தேவையிருப்பினும் எம்மிடமுள்ள நிலவசதி, மூலதனம் போன்ற காரணிகள் வீட்டை அமைக்கும்போது பிரச்சினைகளைத் தோற்றுவிக்கலாம். எனவே கிடைக்கப் பெறும் வளங்களின் மூலம் எமது வரையரையற்ற விருப்பங்களைப் பூர்த்தி செய்துகொள்ள வேண்டுமாயின் நாம் ஏதாவது முறையானதும் விஞ்ஞான பூர்வமானதுமான ஒழுங்குமுறைகளின் கீழ் செயற்பட வேண்டியுள்ளது.

**செயற்பாடு**

மனிதர்களின் தேவைகளையும் அவற்றுடன் தொடர்புடைய விருப்பங்களையும் இனங்கண்டு அவற்றை அட்டவணைப்படுத்துக.

## அடிப்படைப் பொருளாதாரப் பிரச்சினைகள்

மனிதர்கள் தமது தேவைகளையும் விருப்பங்களையும் பூர்த்தி செய்வதற்கு முற்படும் போது பல்வேறு பிரச்சினைகளுக்கு முகங்கொடுக்க வேண்டியேற்படுகிறது என்பதை மேலே கற்றுக்கொண்ட விடயங்களிலிருந்து தெரிந்து கொண்டுள்ளோம். இப்பிரச்சினைகள் அனைத்துப் பொருளாதார முறைகளுக்கும் பொதுவானவை. மனிதர்களின் தேவைகளும் விருப்பங்களும் வரையறையற்றவையாகவும், அவை தொடர்பாகக் கிடைக்கப்பெறும் வளங்கள் வரையறையானவையாகவும் இருப்பதே இதற்குக் காரணமாகும். இவ்வாறு வளங்கள் தேவையிலும் பார்க்கக் குறைவாகக் காணப்படும் தன்மையையே நாம் **அருமை** அல்லது பற்றாக்குறை என அழைக்கின்றோம். பற்றாக்குறை நிலை காரணமாக விருப்பங்களைப் பூர்த்தி செய்வது தொடர்பில் தெரிவினை மேற்கொள்ள வேண்டியுள்ளது. சகல பொருளாதார முறைமைகளிலும் எதிர்நோக்க நேரிடுகின்ற பிரச்சினைகள் பொருளாதாரப் பிரச்சினைகள் எனப்படுகின்றன.

அடிப்படைப் பொருளாதாரப் பிரச்சினைகளை மூன்றாக வகைப்படுத்தி நோக்கலாம்.

**1. எதனை, எந்தளவு உற்பத்தி செய்வது ?**

**2. எவ்வாறு உற்பத்தி செய்வது ?**

**3. யாருக்காக உற்பத்தி செய்வது ?**

### • எதனை, எந்தளவு உற்பத்தி செய்வது ?

உற்பத்தியின் போது எத்தகைய பொருட்களை உற்பத்தி செய்வதென்பது கிடைக்கப்பெறக் கூடிய வளங்களைப் பொறுத்தே தீர்மானிக் கப்படுகிறது. அதேவேளை தேர்ந்தெடுக் கப்பட்ட பண்டங்களை எந்தளவு உற்பத்தி செய்வது என்ற பிரச்சினையும் ஏற்படுகிறது. வளங்களிலிருந்து பெற்றுக் கொள்ளக்கூடிய மாற்றுப் பயன்கள் காரணமாகவே இப்பிரச்சினை தோற்றம் பெறுகின்றது.



உரு 4.1

தனியாட்களின் சகலவிதமான தேவைகளும் விருப்பங்களும் பூர்த்தி செய்ய முடியாதனவாக இருப்பதால், முதலில் அவற்றுள் எதனை நிறைவேற்றுவது என்பதைத் தீர்மானிக்க வேண்டியுள்ளது. மேற்படி விளக்கங்களிலிருந்து இவை தொடர்பாக மேற்கொள்ளப்பட வேண்டியுள்ள தீர்மானங்கள் பல காணப்படுகின்றன. எதனை, எந்தளவு உற்பத்தி செய்வது என்பது பொருளாதாரம் ஒழுங்கமைந்துள்ள தன்மையை அடிப்படையைக் கொண்டே தீர்மானிக்கப்படுகிறது.

### • எவ்வாறு உற்பத்தி செய்வது ?

உற்பத்தி செய்யப்பட வேண்டிய பண்டங்களை எந்தளவு உற்பத்தி செய்வது என்பது தொடர்பான பிரச்சினையைத் தீர்த்ததன் பின்னர் எதிர்நோக்கப்படும் பொருளாதாரப் பிரச்சினையாக விளங்குவது, எவ்வாறு உற்பத்தி செய்வது என்பதாகும். இதன்கீழ் இரு உபபிரச்சினைகளுக்கு முகங்கொடுக்க வேண்டியுள்ளது. அவையாவன,

I. ***பயன்படுத்தப்படும் நுட்பங்கள் யாவை ?***

II. ***யாரால் (எத்துறையினால்) உற்பத்தி செய்யப்படுகிறது ?***

### I. *பயன்படுத்தப்படும் நுட்பங்கள் யாவை ?*

உற்பத்தி தொடர்பாகப் பயன்படுத்தக்கூடிய நுட்பங்கள் பிரதானமான இரு முறைகளாக நோக்கப்படுகின்றன.

### முதலீட்டு நுட்பம்

பண்டங்களை உற்பத்தி செய்வது தொடர்பில் இயந்திர சாதனங்களையும் வேறு முதலீட்டுப் பொருட்களையும் அதிகளவு உபயோகிப்பதே முதலீட்டு நுட்பம் எனப்படுகிறது.

உதாரணம் : விவசாய நடவடிக்கைகளில் அதிகளவு இயந்திரங்களைப் பயன்படுத்துதல்.

### உழைப்பு நுட்பம்

பொருட்களை உற்பத்தி செய்தல் தொடர்பாக மனித வலுவை அதிகம் பயன்படுத்துதல் உழைப்பு நுட்பம் எனப்படுகின்றது.

உதாரணம் : விவசாய நடவடிக்கைகளில் அதிகளவு தொழிலாளர்களை ஈடுபடுத்துதல்.

### II. யாரால் (எத்துறையினால்) உற்பத்தி செய்யப்படுகிறது?

எந்தத் துறையினரால் உற்பத்தி செய்யப்பட வேண்டும் என்பதையே இது குறித்து நிற்கிறது. உற்பத்திகளுடன் தொடர்புடைய மூன்று துறைகள் காணப்படுகின்றன. எவ்வாறு உற்பத்தி செய்வது என்பது தொடர்பாக அவை முக்கியத்துவம் பெறுகின்றன.




நவீன உலகில் உற்பத்தி நடவடிக்கைகளை இலகுபடுத்துவதற்காக தனிநபர்கள், கம்பனிகள், பங்கு வர்த்தகம், கூட்டுறவுச் சங்கங்கள் எனப் பல்வேறு விதமான ஒழுங்கமைப்புகள் காணப்படுகின்றன.

- **யாருக்காக உற்பத்தி செய்வது ?**

பொருட்கள் சேவைகள் என்பன யாரை நோக்காகக் கொண்டு உற்பத்தி செய்யப்படுகின்றன என்பதே இதன் மூலம் கருதப்படுகிறது. விலை செலுத்திக் கொள்வனவு செய்வதற்குரிய இயலுமைக்கு அமைவாக சமூகத்தில் பல்வேறு நுகர்வுப் பொருட்கள் காணப்படுகின்றன. உற்பத்தியின் போது அவ்வுற்பத்தியாளரின் இலக்காக அமைவது எந்த குழுவுக்காக என்பதாகும். அதாவது உற்பத்தி செய்யப்படும் பொருட்கள், சேவைகள் நுகர்வோர் மத்தியில் எவ்வாறு விநியோகிக்கப்படல் வேண்டும் என்ற விடயமே இதன் மூலம் கருதப்படுகிறது.

உதாரணம்: உயர்வருமானம்பெறுவோரைமையமாகவைத்துஉயர்இலாபமீட்டக்கூடிய ஆடம்பரப் பொருட்களை உற்பத்தி செய்வதா? அன்றேல் குறைந்த வருமானம் பெறுவோரை மையமாகக் கொண்டு அத்தியவசியப் பொருட்களை உற்பத்தி செய்வதா? என்பது குறித்துத் தீர்மானம் மேற்கொள்வதனைக் குறிப்பிடலாம்.

**செயற்பாடு**

பிரதான பாதையை அண்மித்ததாக உமக்குச் சொந்தமான காணித்துண்டு ஒன்று உள்ளதெனக் கருதுக. இதனைப் பொருளாதார நடவடிக்கைக்கு உட்படுத்த நீர் கருதுவீராயின் மேற்படி கற்றுக் கொண்ட பொருளாதாரப் பிரச்சினைகளுக்கு அமைவாக நீர் மேற்கொள்ளும் தீர்மானம் யாது என்பதை விளக்குக.

## உற்பத்திக் காரணிகளும் அவற்றின் அமையச் செலவுகளும்

மனிதர்களது தேவைகளையும் விருப்பங்களையும் நிறைவேற்றிக்கொள்வது தொடர்பில் பல்வேறு பொருட்களும் சேவைகளும் பயன்படுத்தப்படுகின்றன. அவற்றைப் பிரதானமாக இரு பகுதிகளாகப் பிரித்து நோக்கலாம்.

- **பொருளாதாரப் பண்டங்கள்**

உற்பத்தியின்போது செலவு ஏற்படுவதும் அவற்றை நுகர்வு செய்யும்போது விலை செலுத்த வேண்டியிருப்பதுமான பொருட்கள் பொருளாதாரப் பண்டங்கள் என அழைக்கப்படுகின்றன.

உதாரணம்: உணவு, உடை, மருந்துகள் போன்றன.

- **பொருளாதாரமல்லாப் பண்டங்கள்**

எமக்கு இயற்கையாகவும் இலவசமாகவும் கிடைக்கப்பெறும் பொருட்கள் அல்லது பண்டங்கள் பொருளாதாரமல்லாப் பண்டங்கள் எனப்படுகின்றன.

உதாரணம்: சூரிய ஒளி, நீர், வளி போன்றன.

## பொருளாதாரமல்லாப் பண்டங்கள் சில வேளைகளில் பொருளாதாரப் பண்டங்களாக மாற்றமடைகின்றன

எமக்கு இலவசமாகக் கிடைக்கும் சில பொருளாதாரமல்லாப் பண்டங்கள் சில வேளைகளில் பொருளாதாரப் பண்டங்களாவதும் உண்டு.

உதாரணம்:

- நீர் எமக்கு இலவசமாகக் கிடைக்கின்ற போதும் போத்தலில் அடைக்கப்பட்ட நீரைப் பெற்றுக் கொள்ளும் போது அதற்கு விலை செலுத்த வேண்டி ஏற்படுகின்றது.
- சூரிய ஒளியைப் பயன்படுத்தி உற்பத்தி செய்யப்படும் மின்சாரத்திற்கு விலை செலுத்த வேண்டி ஏற்படுகின்றது.
- நைதரசன் வாயுவைச் சேமித்து வாகனங்களைச் செலுத்தும் போது அவற்றுக்கு விலை செலுத்த வேண்டி ஏற்படுகின்றது.

பொருளாதாரப் பண்டங்களை உருவாக்குவது தொடர்பில் உற்பத்திச் செயன்முறை யொன்று அவசியமானதாக விளங்குகின்றது. உற்பத்திச் செயற்பாடுகளுக்காகப் பயன்படுத்தப்படும் வளங்கள் உற்பத்திக் காரணிகள் என அழைக்கப்படுகின்றன. அவை நிலம், உழைப்பு, மூலதனம், முயற்சி என நான்கு பிரதான பகுதிகளாகப் பிரிக்கப்படுகின்றன. இத்தகைய வளங்களை உற்பத்திச் செயற்பாடுகளுக்காகப் பயன்படுத்தும் போது சில கொடுப்பனவுகளைச் செலுத்தவேண்டும். அவை முறையே வாடகை, கூலி, வட்டி, இலாபம் என்பதாக அழைக்கப்படுகின்றன.

### 1. நிலம்



உரு 4.2

பூமியும் அது சார்ந்துள்ள வளங்களும் நிலம் என்பதற்குள் உள்ளடக்கப்படுகின்றன. இதனை உற்பத்திச் செயற்பாடுகளுக்கும் பயன்படுத்தும்போது வழங்கப்படும் கொடுப்பனவு வாடகை எனப்படுகின்றது.

## 2. உழைப்பு / ஊழியம்



உரு 4.3

பொருட்கள் சேவைகளின் உற்பத்தி தொடர்பில் பல்வேறு தனிப்பட்டவர்களால் செலுத்தப்படும் உடல், உளரீதியான சக்தியே உழைப்பு எனப்படுகின்றது. தொழிலாளர்கள், விவசாயிகள், சாரதிகள் போன்றோர் உடலியல் சக்தியை அதிகமாக வழங்குவதனால் அது உடல் உழைப்பு எனப்படுகின்றது. வைத்தியர்கள், பொறியியலாளர்கள், ஆசிரியர் போன்றோர் மூளைச்சக்தியை அதிகம் வழங்குவதனால் அது மூளை உழைப்பு எனப்படுகிறது. இத்தகைய உழைப்புக்காக வழங்கப்படும் கொடுப்பனவு கூலி (ஊதியம்)எனஅழைக்கப்படுகின்றது.

## 3. முதலீடு / மூலதனம்



உரு 4.4

உற்பத்தி நடவடிக்கைகளுக்காக மனிதரால் பயன்படுத்தப்படும் பல்வேறு கருவிகள் மற்றும் உபகரணங்கள் ஆகியன முதலீடுகளாகும். முதலீடுகளுக்கு உதாரணங்களாக இயந்திர உபகரணங்கள், கட்டிடங்கள் போன்றவற்றைக் குறிப்பிடலாம். முதலீடுகளுக்காக வழங்கப்படும் கொடுப்பனவு வட்டி என அழைக்கப்படுகின்றது.

## 4. முயற்சி



உரு 4.5

உற்பத்திச் சாதனங்கள் ஓரே இடத்தில் நிலையாகக் காணப்படுவதில்லை அவை பல்வேறு இடங்களில் பல்வேறு நபர்களிடத்தில் பரந்து காணப்படுகின்றன. உற்பத்திக் காரணிகளை ஒன்று சேர்த்து உற்பத்தி நடவடிக்கைகளில் பயன்படுத்துதலே முயற்சியாண்மை என அழைக்கப்படுகின்றது. முயற்சியாண்மைக்காக வழங்கப்படும் கொடுப்பனவு இலாபம் என அழைக்கப்படுகின்றது.

## செயற்பாடு

*மனிதர்களது தேவைகளை நிறைவேற்றப் பயன்படுத்தப்படும் பொருட்கள் 5 ஐப் பெயரிடுக. ஒவ்வொரு பொருள் தொடர்பிலும் பயன்படுத்தப்படும் உற்பத்திக் காரணிகளை அட்டவணைப்படுத்துக.*

## பொருளாதாரம் ஒன்றின் பிரதான செயற்பாடுகள்

பொருளாதார முறையினுள் பல்வேறு செயற்பாடுகள் இடம்பெறுகின்றன. அவற்றைப் பிரதானமாக மூன்று பிரிவுகளாகப் பிரித்து நோக்கலாம்.

1. உற்பத்தி
2. விநியோகம்
3. நுகர்வு

### 1. உற்பத்தி

பொருளாதாரமொன்றில் மனிதர்களின் தேவைகளை நிறைவேற்றக் கூடிய வகையில் வளங்களை மாற்றிக் கொள்ளல் உற்பத்தி எனப்படுகின்றது. பொருளாதாரத்தில் இடம்பெறும் உற்பத்தியினைக் கீழே குறிப்பிடப்பட்டுள்ளவாறு மூன்று துறைகளாகப் பிரிக்கலாம்.


உரு 4.6

- **விவசாய உற்பத்தி**

தேயிலை, இறப்பர், தெங்கு, நெல் மற்றும் வேறு தானியவகைகள், மரக் கறிகள், பழங்கள், இறைச்சி, மீன், முட்டை போன்றன.



- **கைத்தொழில் உற்பத்தி**

இயந்திர சாதனங்கள், மோட்டார் வாகனங்கள், ஆடைகள், காகிதாதிகள், எண்ணெய் வகைகள் மற்றும் தயாரிக்கப் பட்ட உணவு வகைகள் போன்றன.



- **சேவைகள் உற்பத்தி**

கல்வி, சுகாதாரம், தபால், தொலைத் தொடர்பு, மின்சாரம், போக்குவரத்து போன்றன.

உரு 4.8

உற்பத்தி செய்யப்படும் பொருட்களை அவை பயன்படுத்தப்படுகின்ற விதத்திற்கேற்ப மூன்று பிரிவுகளாகப் பிரித்துநோக்கலாம்.

| நுகர்வுப் பொருட்கள் | இடைநிலைப் பொருட்கள் | மூலதனப் பொருட்கள் |
|---|---|---|
| தனியாட்களின் தேவைகளையும் விருப்பங்களையும் பூர்த்தி செய்வது தொடர்பில் உபயோகிக்கப்படும் பொருட்கள் மற்றும் சேவைகள் நுகர்வுப் பொருட்கள் எனப்படுகின்றன.<br>உதாரணம் :<br>அன்றாடம் பயன்படுத்துகின்ற உணவுப் பொருட்கள், ஆடையணிகள், மருந்துகள் போன்றன. | ஏதாவது ஒரு பொருளை உற்பத்தி செய்வதற்குப் பயன்படுத்தப்படும் உள்ளீடுகள் இடை நிலைப் பொருட்கள் எனப்படுகின்றன.<br>இடைநிலைப் பொருட்கள் ஒரு முறை பாவனையுடன் முடிவடைதல் என்பது விசேட பண்பாகும். அவற்றைமீண்டும் மீண்டும் பயன்படுத்த முடியாது.<br>உதாரணம் :<br>நெல் உற்பத்திக்குப் பயன்படுத்தும் உரம், வீட்டுத் தளபாடங்களின் உற்பத்திக்காகப் பயன் படுத்தும் பலகை முதலியன | உற்பத்தி செயற்பாடுகளுக் காக நேரடியாகப் பயன் படுத்தப்படும் பொருட்கள் மூலதனப் பொருட்கள் எனப்படும்.<br>முதலீட்டுப் பொருட்கள் அல்லது மூலதனப் பொருட்களை உற்பத்தி நடவடிக்கைகளில் மீண்டும் மீண்டும் பயன்படுத்த முடியும்.<br>உதாரணம் :<br>இயந்திரசாதனங்கள், கட்டடங்கள், வாகனங்கள் போன்றவை |

## 2. விநியோகம்

உற்பத்தி செய்யப்படும் பொருட்களை நுகர்வோரிடம் கொண்டு செல்லும் செயன்முறையே விநியோகம் எனப்படுகின்றது. புராதன காலத்தில் மனிதர் தமக்குத் தேவையானவற்றைத் தாமே உற்பத்தி செய்து பயன்படுத்தினர். அங்கு பொருள் விநியோகம் இடம்பெறவில்லை. அதன் பின்னர், பொருட்களுக்காக வேறு பொருட்களைப் பண்டமாற்றும் முறை உருவாகியது.

**உதாரணம் :**

நெல் உற்பத்தியின் போது தமது நுகர்வைவிட மேலதிகமானவற்றை வேறு நபர்களுக்கு வழங்கி அவற்றுக்குப் பதிலாக உப்பு, மீன், கருவாடு மற்றும் ஆடைகள் போன்றவற்றைப் பெறுகின்ற முறை நிலவியது.

சமகாலத்தில் சந்தைகளின் மூலம் பணத்தை மையமாகக் கொண்டு பொருட்களைக் கொடுக்கல் - வாங்கல் செய்யும் முறை மேற்கொள்ளப்படுகிறது. இத்தகைய செயன்முறை வர்த்தகம் என அழைக்கப்படுகின்றது.

வர்த்தக நடவடிக்கைகள் நாட்டிற்குள் மாத்திரமன்றி சர்வதேச ரீதியாக நாடுகளுக்கு இடையிலும் இடம்பெறுகின்ற ஒரு செயன்முறையாக விளங்குகின்றது. இதற்கமைய வர்த்தக நடவடிக்கைகளை இரு வகையாகப் பிரித்து நோக்கலாம்.



உரு 4.9

- **மொத்த விற்பனை**

உற்பத்தி செய்யப்படுகின்ற பொருட்களை பாரிய அளவில் நுகர்வோருக்கு அல்லாது இடைநிலை வர்த்தகர்களுக்கு வழங்குவது மொத்த விற்பனையாகும். இது உற்பத்தியாளர்களுக்கும் மொத்த விற்பனையாளர்களுக்கு இடையிலும், மொத்தவிற்பனையாளர்களுக்கும் சில்லறை வர்த்தகர்களுக்கும் இடையிலும் நடைபெறுகின்றது.



உரு 4.10

- **சில்லறை விற்பனை**

உற்பத்தியாளர்களிடமிருந்து அல்லது மொத்த விற்பனையாளர்களிடமிருந்து சில்லறை விற்பனையாளர்கள் பெற்றுக் கொள்ளுகின்ற பொருட்கள் நுகர்வோருக்கு நேரடியாக விற்பனை செய்கின்ற நடவடிக்கை சில்லறை விற்பனை எனப் படுகிறது.

### 3. நுகர்வு

பொருளாதாரமொன்றில் உற்பத்தி செய்யப்படும் பொருட்கள் மற்றும் சேவைகளைப் பயன்படுத்துவதன் மூலம் தனியாட்கள் தமது தேவைகளையும் விருப்பங்களையும் பூர்த்தி செய்துகொள்ளல் நுகர்வு எனப்படுகின்றது. அவ்வாறு தேவைகளைப் பூர்த்தி செய்யும் தனியாட்கள் நுகர்வோர் என அழைக்கப்படுகின்றனர். தனியாட்களின் தேவைகள் மற்றும் விருப்பங்களை நேரடியாகப் பூர்த்தி செய்ய உதவுகின்ற பொருட்கள் நுகர்வுப் பொருட்கள் எனப்படுகின்றன.

**உதாரணம் :**

உணவு, பானம், ஆடையணிகள், வாகனங்கள்

## செயற்பாடு

உமக்குத் தெரிந்த பொருட்கள் மற்றும் சேவைகளைக் குறிப்பிட்டு பின்வரும் அட்டவணையைப் பூர்த்தி செய்க.

| நுகர்வுப் பொருட்கள் | இடைநிலைப் பொருட்கள் | மூலதனப் பொருட்கள் |
|---|---|---|
| | | |

## பல்வேறு பொருளாதார முறைகள்

பொருளாதார முறைகள் என்பது, மனிதர் எதிர்நோக்குகின்ற அடிப்படைப் பொருளாதாரப் பிரச்சினைகளான எதனை, எவ்வாறு, எந்தளவு மற்றும் யாருக்காக உற்பத்தி செய்வது என்பவற்றைத் தீர்த்துக் கொள்வது தொடர்பில் பல்வேறு சமூகங்கள் முன்வைத்திருக்கின்ற தீர்வுகளைக் குறிக்கின்றது. அவை பொருளாதார முறைகள் எனப்படுகின்றன. அவ்வகையில் நாடுகளில் நிலவும் பிரதான பொருளாதார முறைகளாகப் பின்வருவன காணப்படுகின்றன.

1. முதலாளித்துவப் பொருளாதார முறை
2. சமதர்மப் பொருளாதார முறை/ சமவுடைமைப் பொருளாதார முறை
3. கலப்புப் பொருளாதார முறை

### முதலாளித்துவப் பொருளாதார முறை

முதலாளித்துவப் பொருளாதார முறை என்பது, பொருளாதாரத்தின் சொத்துக்களினதும் வளங்களினதும் உரிமையின் பெரும்பகுதியைத் தனியார்துறை கொண்டிருப்பதோடு பொருளாதார நடவடிக்கைகள் இலாபத்தினை மையமாகக் கொண்டு மேற்கொள்ளப்படுகின்ற வகையில் ஒழுங்கமைந்துள்ள பொருளாதார முறைமையைக் குறிக்கின்றது.

**இத்தகைய பொருளாதாரமொன்றின் அடிப்படைப் பண்புகள் பின்வருமாறு**

- போட்டித்தன்மை வாய்ந்த சந்தை முறை நிலவுதல்.
- உற்பத்திக் காரணிகளின் பெரும்பான்மை உரிமையை தனியார்துறை பெற்றிருத்தல்.
- இலாபத்தை நோக்காகக் கொண்டு உற்பத்தி நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படல்.
- வருமானம் சமமற்ற வகையில் பகிரப்படல்.

முதலாளித்துவப் பொருளாதாரத்தில், வர்த்தக விளம்பரப்படுத்தல்களின் மூலம் நுகர்வோரை உற்பத்திகளின் பக்கமாகக் கவர்ந்திழுக்கும் நடவடிக்கை முறையைக் காணலாம். இருப்பினும் சந்தையில் காணப்படும் உற்பத்திகளுக்கு மத்தியில் தமது விருப்பத்திற்கமைய பொருட்களை விலைகொடுத்துப் பெறுகின்ற சுதந்திரம் நுகர்வோருக்கு உண்டு.

முதலாளித்துவப் பொருளாதார முறை நிலவுகின்ற நாடுகளுக்கு உதாரணமாக ஐக்கிய அமெரிக்கா, பிரித்தானியா, ஜப்பான், அவுஸ்திரேலியா போன்ற நாடுகளை குறிப்பிடலாம். ஆயினும் உலகில் முழுமையான முதலாளித்துவப் பொருளாதார முறை நிலவுகின்ற நாடுகளைக் காணமுடியாது. ஏனெனில் எல்லா நாடுகளும் சில உற்பத்திக் காரணிகளின் உரிமையை (தனியாரிடம் ஒப்படைக்காது) அரசுடைமையாக வைத்திருப்பதனாலாகும்.

### சமதர்மப் பொருளாதார முறை

ஒரு மத்திய மயப்படுத்தப்பட்ட திட்டமிடல் குழுவொன்றின் மூலமாக அடிப்படை பொருளாதாரப் பிரச்சினைகளுக்குத் தீர்வு காண்பதற்கு முயற்சிப்பதோடு உற்பத்திக் காரணிகள் அனைத்தும் அரசுடைமை முறையின் கீழ் நிருவகிக்கப்படுவதுமான பொருளாதார ஒழுங்கமைப்பு சமதர்மப் பொருளாதார முறை எனஅழைக்கப்படுகின்றது. சமதர்மப் பொருளாதார முறையானது திட்டமிடப்பட்ட பொருளாதார முறையெனவும் அரசுடைமைப் பொருளாதார முறை எனவும் அழைக்கப்படுகிறது.

**இத்தகைய பொருளாதாரமொன்றின் அடிப்படைப் பண்புகள் பின்வருமாறு**

- உற்பத்திக் காரணிகள் அனைத்தும் அரசுடைமையாக்கப்பட்டிருத்தல்.
- மத்திய திட்டமிடல் சபையின் மூலம் பொருளாதாரம் நிருவகிக்கப்படல்.
- அடிப்படைப் பொருளாதாரப் பிரச்சினைகளுக்குத் தீர்வு காணும் போது சமூக நன்மையைக் கருத்திற்கொண்டு செயற்படல்.

சமதர்மப் பொருளாதார முறை நிலவும் நாடுகளுக்கு உதாரணமாக வடகொரியா மற்றும் கியுபா ஆகிய நாடுகள் விளங்குகின்றன. எனினும் தற்போது சமதர்மப் பொருளாதார முறையும் மாற்றமடைந்து வருகின்றன.

### கலப்புப் பொருளாதார முறை

முதலாளித்துவ மற்றும் சமதர்மப் பொருளாதார முறைகளது பண்புகளை உள்ளடக்கிய பொருளாதார முறை கலப்புப் பொருளாதார முறை எனப்படுகின்றது. உலகின் அநேக நாடுகள் கலப்புப் பொருளாதார முறையினையே பின்பற்றுகின்றன. இலங்கையும் கலப்புப் பொருளாதார முறையைப் பின்பற்றும் நாடாகவே கருதப்படுகின்றது.

**இத்தகைய பொருளாதாரமொன்றின் அடிப்படைப் பண்புகள் பின்வருமாறு**

- உற்பத்திக் காரணிகளின் உரிமை அரசு மற்றும் தனியார்துறை ஆகிய இரு பிரிவினரிடத்திலும் காணப்படல்.
- அடிப்படைப் பொருளாதாரப் பிரச்சினைகளைத் தீர்ப்பது தொடர்பில் அரசு, தனியார் ஆகிய இருதுறைகளும் செயற்படல்.
- சந்தை நிலைமையை அடிப்படையாகக் கொண்டு பொருட்களின் விலைகள் தீர்மானிக்கப்படுகின்ற போதிலும் அரசு இது தொடர்பாகத் தலையிடுதல்.
- அரச நிறுவனங்கள், தனியார்துறை நிறுவனங்கள் என இரு பிரிவுகள் காணப்படல்.
- பொது நலன்களை நிறைவேற்றுவது தொடர்பில் நலன்புரிப் பணிகளை மேற்கொள்வதில் அரசு தலையிடல்.

**செயற்பாடு**

- முதலாளித்துவப் பொருளாதார முறையின் நன்மை, தீமைகளை ஆராய்க
- இலங்கையின் பொருளாதாரத்தில் காணக்கூடிய கலப்புப் பொருளாதார முறைப் பண்புகளை ஆராய்க.
- கலப்புப் பொருளாதாரத்தின் மூலம் மக்களுக்குக் கிடைக்கப் பெறும் நன்மை, தீமைகளை விளக்குக.

## சந்தைப் பொருளாதார முறை பற்றிய எண்ணக்கரு

சமகாலத்தில் நிலவுகின்ற சந்தைப் பொருளாதார முறையானது **நவ லிபரல்வாதப்** பொருளாதார முறை எனவும் அழைக்கப்படுகின்றது. இதன் கீழ் தனியார் துறையினரால் மேற்கொள்ளப்படும் விடயங்கள் அரசினால் மேற்கொள்ளப்படுவதில்லை. அத்துடன் அரசு குறைந்த தலையீட்டுடன் சந்தைச் செயற்பாடுகளுக்கு இடமளிக்கும்.

சமதர்மப் பொருளாதார முறையினைப் பின்பற்றிய நாடுகளான ரஷ்யா, சீனா, போலந்து போன்ற நாடுகள் படிப்படியாக சந்தைப் பொருளாதார எண்ணக்கருவைச் சமகாலத்தில் பின்பற்றுவதைக் காணமுடிகிறது.

சமகாலத்தில் செயற்படுகின்ற **நவ லிபரல்வாத** சந்தைப் பொருளாதார முறையின் அடிப்படைப் பண்புகள் சில கீழே தரப்பட்டுள்ளன.

- அரச நிறுவனங்களைத் தனியார் மயப்படுத்துதல்.
- சந்தை நிலைமையை அடிப்படையாகக் கொண்டு விலைகளைத் தீர்மானிப்பதற்கு இடமளிக்கப்பட்டிருத்தல்.

- தனியார்துறை முதலீடுகள் ஊக்குவிக்கப்படல்.
- உள்நாட்டு முதலீட்டாளர்களுக்கு விசேட அனுசரணை வழங்குதல்.
- மானியங்களும் விலைக்கட்டுப்பாட்டு முறையும் தளர்த்தப்படல்.
- தனியார் சொத்துடைமைக்கு சுதந்திரமளிக்கப்பட்டிருத்தல்.
- பொருளாதார நடவடிக்கைகளில் அரசதுறையின் தலையீடு குறைவடைதல்.
- சந்தை தொடர்பான சட்டதிட்டங்கள் தளர்வடைந்திருத்தல்.

சந்தைப் பொருளாதார எண்ணக்கருவினுள் பாதகமான பண்புகளும் காணப்படமுடியும். அவற்றுள் சந்தைப் பொருளாதார முறையில் உற்பத்தி நடவடிக்கைகளின் போது ஏனைய தரப்புக்கு ஏற்படும் பாதிப்புகள் குறித்து கவனம் செலுத்தாமையை முக்கியமாகக் குறிப்பிடலாம். இவை நேரடிப் பாதிப்புகள் எனப்படும்.

உதாரணமாக: தொழிற்சாலைகளை நிறுவும் போது சுற்றாடல் மாசடைதல், மக்கள் பாதிப்பு தொடர்பாக கவனம் செலுத்தப்படாதிருப்பதைக் குறிப்பிடலாம்.

## சந்தைப் பொருளாதாரத்தின் பல்வேறு இயல்புகள்

சந்தைப் பொருளாதார முறையைப் பின்பற்றக்கூடிய நாடுகள் தொடர்பாக ஆராயும் போது பிரதானமாக மூன்று இயல்புகளைக் அவதானிக்கலாம்.

1. முதலாளித்துவப் பொருளாதாரத்தின் சந்தை இயல்பினை அதிகமாகக் கொண்டிருத்தல்

   உதாரணமாக : சிங்கப்பூர், தென்கொரியா, தாய்வான், ஹொங்கொங்
2. சமதர்மப் பொருளாதாரத்தின் சந்தை இயல்பினை அதிகமாக கொண்டிருத்தல்
   உதாரணமாக : சீனா, ரஷ்யா
3. நிலைமாறும் பொருளாதாரம் அல்லது சந்தைப்பொருளாதார இயல்பினைக் கொண்டிருத்தல்

   **உதாரணமாக** : செக்குடியரசு, போலந்து, ருமேனியா, பல்கேரியா போன்ற சோவியத் ஒன்றியத்தில் முன்னர் இணைந்திருந்த நாடுகள்.

நிலைமாறும் பொருளாதாரத்தின் அடிப்படைப் பண்புகளாகப் பின்வருவனவற்றைக் கொண்டு திகழ்கின்றன.

**நிலைமாறும் பொருளாதாரத்தின் அடிப்படைப் பண்புகள்**




**செயற்பாடு**

- இலங்கையின் பொருளாதார முறையின் கீழ் சந்தைப் பொருளாதார முறையை அடிப்படையாகக் கொண்ட பண்புகளை காணமுடிகின்றதா? விளக்குக.
- சந்தைப் பொருளாதார முறையின் சாதக, பாதகமான விளைவுகளை அட்டவணைப்படுத்துக.

## இலங்கை மீது உலகமயமாதலின் செல்வாக்கு

இலங்கை நீண்ட வரலாற்றுப் பாரம்பாரியத்தைக் கொண்ட ஒரு நாடாகும். புராதான காலந்தொட்டு இன்று வரை நிலவிவந்துள்ள பொருளாதார முறைகளை ஆராயும் போது அவற்றில் பல்வேறு இயல்புகள் நிலவி வந்திருப்பதனைக் காணலாம். ஆட்சியிலிருந்த அரசாங்கங்களின் கொள்கைகளுக்கு அமைய பொருளாதாரக் கொள்கையும் காலத்திற்குக் காலம் மாற்றமடைந்து வந்திருக்கின்றது. 1948 இல் நாம் பிரித்தானிய ஆட்சியிலிருந்து சுதந்திரத்தைப் பெற்றுக் கொண்டதன் பின்னர் சமதர்ம, முதலாளித்துவ மற்றும் கலப்புப் பொருளாதார முறைகளின் பண்புகளை உள்ளடக்கிய பொருளாதார முறையொன்று செயற்பட்டு வந்துள்ளதனை அறிய முடிகின்றது.

## இலங்கையின் சமகாலப் பொருளாதார முறையும் அபிவிருத்தியும்

இலங்கையில் 1977 ஆம் ஆண்டின் பின்னர் அறிமுகம் செய்யப்பட்ட திறந்த பொருளாதாரக் கொள்கையை அடிப்படையாகக் கொண்ட பொருளாதார முறையே சமகாலத்தில் நடைமுறையிலுள்ளது. 1977 இற்கு முன்னர் சமதர்மப் பொருளாதார முறையின் இயல்புகள் காணப்பட்ட போதிலும் இன்று அது சந்தைப் பொருளாதார முறையாக மாற்றமடைந்துள்ளது.

1977 இன் பின்னர் திறந்த பொருளாதாரக் கொள்கையின் கீழ் தனியார்துறை முயற்சி களை ஊக்குவிப்பது தொடர்பில் பொருளாதார முறையில் அறிமுகம் செய்யப்பட்டு வந்துள்ள பல்வேறு நடவடிக்கைகள் பின்வருமாறு.

- பல்வேறு வரிச்சலுகை முறைகளைப் பெற்றுக்கொடுத்தல்
- வரிச்சலுகை வாய்ப்புகளை நீக்குதல்
- ஏற்றுமதி - இறக்குமதியை அடிப்படையாகக் கொண்ட பொருளாதாரமுறை அறிமுகப்படுத்தப்பட்டமை.
- அரச நிறுவனங்கள் போட்டிச் சந்தை முறைக்குத் திறந்துவிடப்பட்டமை.
- உட்கட்டமைப்பு வசதிகள் விருத்தி செய்யப்பட்டமை.
- சுதந்திர வர்த்தக வலயங்கள் தாபிக்கப்பட்டமை.

இலங்கையில் சந்தைப் பொருளாதார முறையின் இயல்புகளின் பிரதிபலிப்பு வளர்ச்சியடைந்து வருகின்றமை தொடர்பில் நாம் அறிந்து கொண்டுள்ளோம். அத்தகைய பண்புகள் சில கீழே காட்டப்படுகின்றன.

**இலங்கையில்காணப்படும் சந்தைப் பொருளாதார முறையின் பண்புகள்**

- தனியார்துறை செயற்பாடு ஊக்குவிக்கப்படல்
- அரசு, பொருளாதார நடவடிக்கைகளிலிருந்து விடுபடமுயற்சித்தல்
- அரச தொழில் முயற்சிகளைத் தனியார் மயப்படுத்துதல்
- சர்வதேச வர்த்தகத்துடன் தொடர்புடைய கட்டுப்பாடுகளைத் தளர்த்துதல்
- அரசு, செலாவணிக் கட்டுப்பாட்டு முகாமையிலிருந்து நீங்கிக் கொள்ளல்
- அரசு, தொழில் முயற்சிகளின் ஊக்குவிப்பாளராக மட்டும் செயற்படல்
- ரூபாவின் பெறுமதியினைச் சந்தையில் மிதக்கவிடல்

## அபிவிருத்தி அறிமுகம்

பொருளாதார முறையினுள் பல்வேறு விதங்களில் வளர்ச்சி ஏற்படுவதனைக்காண முடியும். ஒரு விதத்தில் அவை சமூகத்திற்குச் சாதகமானவையாகவோ அல்லது பாதகமானவையாகவோ அமையலாம். உதாரணமாக குற்றச்செயல்கள் மற்றும் விபத்துக்கள் அல்லது அனர்த்தங்கள் அதிகரித்தல் பாதகமான வளர்ச்சியாகும். எனவே சமூகத்திற்குச் சாதகமான விதத்தில் இடம்பெறுகின்ற வளர்ச்சிகளையே பொருளியலாளர்கள் அபிவிருத்தி எனக் குறிப்பிடுகின்றனர்.

''அபிவிருத்தி'' என்பது தொடர்பாக முன்வைக்கப்பட்டுள்ள வரைவிலக்கணங்கள் சில கீழே தரப்பட்டுள்ளன.

*''அபிவிருத்தி என்பது பொருளாதார, சமூக, அரசியல் மற்றும் மானுடத் துறைகளில் முன்னேற்றம் ஏற்படுவதும் வறுமை நிலையைக் குறைப்பதன் மூலம் நிலையான முன்னேற்றத்தை ஏற்படுத்துவதுமாகும்.''*

*(ஐக்கிய நாடுகள் அபிவிருத்தி அறிக்கை, 2000)*

*''சிக்கலான பண்பாடு மற்றும் சுற்றாடல் காரணிகள் ஆகியவற்றுக்கிடையிலான செயற்பாட்டினை அடிப்படையாகக் கொண்டு ஏற்படும் பொருளாதார மற்றும் சமூக வளர்ச்சியடைதல் செயன்முறை அபிவிருத்தியாகும்.''*

(WWW. business dictionary. com 2013.08)

சமகாலத்தில் அதிகமாகக் கலந்துரையாடப்படுகின்ற விடயமாக நிலையான அபிவிருத்தி (Sustainable Development) விளங்குகின்றது. அபிவிருத்தியை இலக்காகக் கொண்டு செயற்படுகையில் பொருளாதாரத்தின் வளங்களை எதிர்கால சந்ததியினரின் பயன்பாட்டுக்காக பாதுகாத்துக் கொண்டு சமகாலத்தின் தேவைகளைப் பூர்த்தி செய்துகொள்வது நிலையான அபிவிருத்தி எனப் பொருள் கொள்ளப்படுகின்றது. இது பேண்தகு அபிவிருத்தி என்றும் அழைக்கப்படுகின்றது.

அபிவிருத்தி தொடர்பில் நிலையான வரைவிலக்கணம் வழங்குவது கடினமானதாகும். தனியாட்களினதும் சமூகத்தினதும் பூரண அபிவிருத்தி என்பதே இவ் எண்ணக்கருவின் மூலம் கருதப்படுகிறது. இதன்போது கருத்திற்கொள்ள வேண்டிய பல பிரிவுகள் காணப்படுகின்றன.




பொருளாதாரமொன்று அபிவிருத்தி அடையும் போது பொருளாதார அபிவிருத்தி மாத்திரமன்றி அது தொடர்பாக மேலும் பல்வேறு பிரிவுகளும் தொடர்புபடுகின்றன. என்பது மேற்படிக் காரணிகளின் மூலம் தெளிவாகின்றது. அவற்றுள் மிக முக்கியமானது நிலையான அபிவிருத்தியாகும். நிலையான அபிவிருத்தியின் போது கருத்திற்கொள்ள வேண்டிய அடிப்படைக் கொள்கைகள் சில சேச்ஸ் என்பவரால் (sachs 2004) குறிப்பிடப்பட்டுள்ளது.



**செயற்பாடு**

- ''நிலையான அபிவிருத்தி'' யின் போது கவனத்திற் கொள்ளப் படவேண்டிய காரணிகளை அட்டவணைப்படுத்துக.
- ''நிலையான அபிவிருத்தி'' என்பதன் முக்கியத்துவத்தை விளக்குக.

அபிவிருத்தி தொடர்பாக ஐக்கிய நாடுகள் சபையினால் புத்தாயிரமாம் ஆண்டு மாநாட்டின் போது ''புத்தாயிரமாம் ஆண்டு அபிவிருத்தி இலக்குகள் (மிலேனியம் இலக்குகள்) எட்டு நிறைவேற்றப்பட்டன.

1. வறுமையையும் பட்டினியையும் இல்லாதொழித்தல்.
2. ஆரம்ப, பொதுக் கல்வியை சகலருக்கும் பெற்றுக்கொடுத்தல்.
3. பால்ரீதியான சமத்துவமும் பெண்களை வலுப்படுத்தலும்.
4. சிசு மரண வீதத்தைக் குறைவடையச் செய்தல்.
5. உளச் சுகாதாரத்தை விருத்தி செய்தல்.
6. எயிட்ஸ், மலேரியா போன்ற நோய்கள் பரவுவதைக் கட்டுப்படுத்தல்.
7. சுற்றாடலை நிலையாகப் பேணல்.
8. அபிவிருத்திக்காக பூகோள ரீதியான தொடர்புகளை ஏற்படுத்திக் கொள்ளல்.

மேற்படி இலக்குகளைப் பூர்த்தி செய்து கொள்வதன் மூலம் அபிவிருத்தியை நோக்கிச் செல்வதற்கு முடியும். இலங்கையும் இவ் இலக்குகளை கொள்கையாக ஏற்றுக்கொண்டுள்ளது.

''கல்வியின் மூலம் இலங்கை ஆசியாவின் அறிவுக் கேந்திர நிலையமாகுதல்'' என்பது சமகாலத்தில் கொள்கையாக ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளது.

## இலங்கையின் சமகாலப் பொருளாதார அபிவிருத்தியின் புதிய போக்கு

பண்டைய இலங்கை விவசாயப் பொருளாதாரத்தை அடிப்படையாகக் கொண்டிருந்தது என்பதை நாமறிவோம். எனினும் ஆங்கிலேயரின் ஆட்சிக்கு உட்பட்டதும் பெருந்தோட்ட விவசாயத்தை அடிப்படையாகக் கொண்ட ஏற்றுமதி - இறக்குமதிப் பொருளாதாரமாக அது மாற்றமடைந்தது. 1977 ஆம் ஆண்டிற்கு முன்னர் விவசாயத்துறை, கைத்தொழில்துறை மற்றும் சேவைத்துறை ஆகியவற்றில் அரச துறையின் பங்களிப்பினைக் குறிப்பிடத்தக்கவகையில் காணக்கூடியதாக இருந்தது. தேசிய மூலவளங்களைப் பயன்படுத்தி வெளிநாட்டு ஏற்றுமதிக் கைத்தொழில்களை நிறுவுவதிலும் கவனம் செலுத்தப்பட்டது.

இலங்கையின் புதிய அபிவிருத்திச் செல்நெறிகளை ஆராய்ந்து பார்க்கும் போது சுதந்திரத்தின் பின்னர் ஏற்பட்ட மாற்றங்களை காலப்பகுதியின் அடிப்படையில் நோக்க முடியும். ஒவ்வொரு காலப்பகுதியிலும் காணப்பட்ட சிறப்பியல்புகள் சில கீழே அட்டவணையிற் காட்டப்பட்டுள்ளன.

| காலப்பகுதி | சிறப்பியல்புகள் |
|---|---|
| 1948 - 1960 | ★ ஏற்றுமதி - இறக்குமதியை மையமாகக் கொண்ட பொருளாதார முறை நிலவுதல்.<br>★ பொருளாதாரச் செயற்பாடுகளில் அரசு மற்றும் தனியார்துறை இரண்டும் தொடர்புபடல்.<br>★ பெருந்தோட்ட விவசாயத்துறைக்கு முக்கியத்துவம் வழங்கல்.<br>★ தேசிய இயல்புடைய விவசாயத்துறையை ஊக்குவித்தல்.<br>★ தனியார் உடைமைகளை மக்கள் மயப்படுத்தல்.<br>*(1956 இன் பின்னர்)*<br>★ நுகர்வோருக்கு சலுகைகளை வழங்குதல். |
| 1961 - 1970 | ★ பொருளாதாரம் அரைகுறையாக மூடிய பண்பினைக் கொண்டிருத்தல்.<br>★ அந்நியச் செலாவணி தொடர்பான சட்டங்கள் தளர்த்தப்படுதல்.<br>★ தனியார் துறை முயற்சியாளர்களுகு இடமளித்தல்.<br>★ உணவு மானியம் ( பங்கீட்டு அரிசி) குறைக்கப்பட்டமை.<br>★ மூடிய பொருளாதாரக் கொள்கையைக் கடுமையாகக் கடைப்பிடித்தல். |
| 1970 - 1977 | ★ இறக்குமதிக்குப் பிரதியீடான கைத்தொழில்கள் ஆரம்பிக்கப்பட்டமை.<br>★ இறக்குமதி தொடர்பில் கட்டுப்பாடுகள் விதிக்கப்பட்டமை.<br>★ உணவுப் பொருள் விநியோகம் தொடர்பில் புதிய சட்டங்கள் விதிக்கப்பட்டமை.<br>★ உணவுப் பொருட்கள் பங்கீட்டு அடிப்படையில் விநியோகிக்கப்பட்டமை.<br>★ தனியார் காணி உரிமை வரையறுக்கப்பட்டமை.<br>★ உள்நாட்டு சீவனோபாய விவசாயத்துறை ஊக்குவிக்கப்பட்டைமை.<br>★ அந்நியச் செலாவணி தொடர்பான சட்டங்கள் கடுமையாக்கப்பட்டமை. |

| | |
|---|---|
| | ★ உள்நாட்டு வளங்களை அடிப்படையாகக் கொண்டதாக அபிவிருத்தி காணப்பட்டமை. |
| **1978 - 1993** | ★ திறந்த பொருளாதாரக் கொள்கை அறிமுகம்.<br>★ ஏற்றுமதி, இறக்குமதிக் கட்டுப்பாடுகள் தளர்த்தப்பட்டமை.<br>★ வெளிநாட்டு முதலீட்டாளர்களுக்கு வரிச்சலுகை வழங்கப்பட்டமை.<br>★ ஏற்றுமதி நோக்கிலான கைத்தொழில் ஆரம்பிக்கப்பட்டமை.<br>★ உணவு மானியம் வரையறுக்கப்பட்டமை.<br>★ கைத்தொழில் துறை மீது அதிக கவனம் செலுத்தப்பட்டமை.<br>★ சுதந்திர வர்த்தக வலயங்கள் உருவாக்கப்பட்டமை.<br>★ இலவச பாடநூல், இலவச சீருடை மதிய போசனம் என்பன வழங்கப்பட்டு இலவசக் கல்வி முன்னெடுக்கப்பட்டமை.<br>★ நட்டத்தில் இயங்கிய அரச நிறுவனங்கள் தனியார் மயப்படுத்தப்பட்டமை. |
| **1994 - 2004** | ★ திறந்த பொருளாதாரக் கொள்கையை மேலும் நடைமுறைப்படுத்தல்.<br>★ தனியார் துறையினருக்கு வரிச்சலுகை வழங்குதல்.<br>★ சில அரச நிறுவனங்களை தனியார் மயப்படுத்தல்.<br>★ உட்கட்டமைப்பு வசதிகளை ஏற்படுத்துவது தொடர்பில் தனியார்துறையின் பங்களிப்பைப் பெறுதல்.<br>★ அரச நிறுவனங்களை மீளமைப்புச் செய்தல்.<br>★ பொதுக்கொள்கை உருவாக்கத்தின் போது சர்வதேச ஆலோ சனைகளைப் பெற்றுக்கொள்ளல். |

2004 இன் பின்னரும் கூட திறந்த பொருளாதாரக் கொள்கையே பின்பற்றப்பட்டு வருவதனைக் காணலாம். இருப்பினும் உள்ளூர் விவசாயத்துறை மற்றும் முதலீடுகள் தொடர்பில் அதிக கவனம் செலுத்தப்படுகிறது. இக்காலப் பகுதியில் காணப்படக் கூடிய விசேட பண்புகள் சில கீழே தரப்பட்டுள்ளன.



கொழும்புத் துறைமுகம்



அதிவேக நெடுஞ்சாலை



மத்தள விமான நிலையம்

உரு 4.11

- அரச நிறுவனங்களைத் தனியார் மயமாக்கும் செயன்முறை கைவிடப்படல்.
- தனியார் மயப்படுத்தப்பட்ட அரச நிறுவனங்களை மீண்டும் அரசுடமையாக்குதல்.

**உதாரணம்:** ஸ்ரீலங்கன் விமானசேவை, செவனகல சீனி கம்பனி, கடதாசித் தொழிற் சாலை, செல்கேஸ் லங்கா நிறுவனம் (தற்போது லித்ரோ )

- உள்ளூர் விவசாயம் சார் பொருளாதாரத்தை முன்னேற்றுவதற்கு நடவடிக்கை மேற்கொள்ளல்.

**உதாரணம்:** விவசாயிகளுக்கான உரமானியத்திட்டம், நெல் சந்தைப்படுத்தும் சபையை நிறுவுதல், 'நாம் பயிரிடுவோம் நாட்டைக் கட்டியெழுப்புவோம்' வேலைத் திட்டம்

- உட்கட்டமைப்பு வசதிகளை அபிவிருத்தி செய்தல்.

**உதாரணம்:** அதிவேக நெடுஞ்சாலை நிறுவுதல், துறைமுகம், விமானநிலையம் என் பவற்றை நிறுவுதல், கொழும்புத் துறைமுகத்தை நவீனமயப்படுத்தல் மின்னுற்பத்தி நிலையங்களை நிறுவுதல்.

- பொருளாதார அபிவிருத்திக்காக பல்வேறு வேலைத்திட்டங்களை முன்னெடுத்தல்.

**உதாரணம்:** வடக்கின் வசந்தம், கிழக்கின் உதயம், திவிநெகும (வாழ்வு எழுச்சித் திட்டம்), மகநெகும (வீதி எழுச்சித் திட்டம், கிராமத்திற்கு ஒரு வேலை திட்டம், நகரங்களை அழகுபடுத்தல், வீதி அபிவிருத்தி)

- வறிய மக்களின் வாழ்க்கை நிலையை உயர்த்துதல்.

**உதாரணம்:** சமுர்த்தி வேலைத் திட்டம், சுயதொழில் ஊக்குவிப்பு முயற்சி, வீட்டுத் தோட்டச் செய்கைத் திட்டம்.

- தகவல் தொழில்நுட்பத்துறையை முன்னேற்றுதல்.

**உதாரணம்:** நனசல வேலைத்திட்டம், விதாதா வளநிலையத் திட்டம்.

- கல்வித்துறையில் புதிய மாற்றங்களைக் கொண்டுவருதல்.

**உதாரணம்:** பல்கலைக்கழக மாணவர்களுக்கான தலைமைத்துவப் பயிற்சித் திட்டம் உயர்தர தொழினுட்பத்துறையை அறிமுகம் செய்தல், தொழில் மற்றும் தொழில்நுட்பப் பயிற்சிகளுக்கான பல்கலைக்கழகம் நிறுவுதல், 1000 பாட சாலைகள் வேலைதிட்டம் மகிந்தோதய விஞ்ஞான ஆய்வு கூடங்களை நிறுவுதல் போன்றன.

தற்போது செயற்பாட்டிலுள்ள அபிவிருத்தி நடவடிக்கைகள் காரணமாக இலங்கை பெற்றுவரும் நன்மைகள்.

| நன்மைகள் |
|---|
| ★ வேலை வாய்ப்புகள் அதிகரித்தல் |
| ★ அன்னியச் செலாவணிவருமானம் அதிகரித்தல். |
| ★ மக்களின் வாழ்க்கைத் தரம் உயர்வடைதல். |
| ★ பிரதேச அபிவிருத்தி துரிதமாதல். |
| ★ அதிகரித்த பொருளாதார வளர்ச்சி வேகம் காணப்படல். |
| ★ உலகின் பிரச்சினைகளை எதிர்கொள்ள முடிதல். |
| ★ உட் கட்டமைப்பு விருத்தியுறல். |
| ★ புதிய தொழில் சந்தை தோன்றுதல். |
| ★ சர்வதேசத்தில் சிறப்பான நிலையினைப் பெறல். |
| ★ சமாதானத்தைத் தோற்றுவித்தல். |

## செயற்பாடு

1. இலங்கையின் அபிவிருத்தி தொடர்பாக மேற்கொள்ளப்படும் பல்வேறு செயற்பாடுகளை அட்டவணைப்படுத்துக.
2. இத்தகைய வேலைத்திட்டங்களின் மூலம் இலங்கைக்குக் கிடைக்கப்பெறும் நன்மைகளை விளக்குக.

இலங்கையின் சமுர்த்தி பயனாளிக் குடும்பங்களின் எண்ணிக்கை படிப்படியாகக் குறைவடைதல்

| வருடம் | 2005 | 2006 | 2007 | 2008 | 2009 | 2010 | 2011 | 2012 |
|---|---|---|---|---|---|---|---|---|
| குடும்பங்களின் எண்ணிக்கை | 1960664 | 1916594 | 1844660 | 1631133 | 1600786 | 1572129 | 1541619 | 1515613 |

**இலங்கையின் சமூக அபிவிருத்திக் குறிகாட்டி**

| சுட்டிகள் | 2009 | 2010 | 2011 | 2012 |
|---|---|---|---|---|
| சிசு மரண வீதம் | 10.0 | 8.5 | 8.5 | 9.4 |
| பிறப்பு வீதம் | 18.4 | 17.6 | 17.6 | 17.4 |
| எழுத்தறிவு வீதம் | 91.3 | 91.4 | 91.9 | 92.2 |
| ஆரம்பக்கல்விக்காகச் சேர்த்துக் கொள்ளப்படும் வீதம் | 102 | 91 | 97 | 92 |
| மனிதவள அபிவிருத்திச் சுட்டி | 102 | 91 | 97 | 92 |

## செயற்பாடு

1. மேற்படி அட்டவணைக்கு மேலதிகமாக இலங்கையின் முக்கியமான வேறு அட்டவணைகளை மத்திய வங்கி அறிக்கை மூலம் பெற்று அட்டவணைப்படுத்துக.
2. இவ்வட்டவணைக்கேற்ப இலங்கையின் அபிவிருத்தி தொடர்பாகச் சுருக்க அறிக்கை ஒன்றை எழுதுக.

## தொழில்னுட்ப முன்னேற்றம் மற்றும் உலகமயமாதல் என்பவற்றினால் உலகப் பொருளாதாரத்திலும் இலங்கைப் பொருளாதாரத்திலும் ஏற்படுகின்ற பாதிப்புகள்

### தொழில்நுட்ப முன்னேற்றமும் உலகமயமாதலும்

தனிமையில் வாழ்ந்த மனிதன் சமூகமாக வாழும் போது பல்வேறு கண்டு பிடிப்புகள் தொடர்பில் கவனம் செலுத்தினார்கள். ஐரோப்பாவில் புதிய தொழினுட்பம் படிப்படியாக வளர்ச்சிகண்டது. இன்று இத்தகைய விஞ்ஞான மற்றும் தொழில்நுட்பங்களை அடிப்படையாகக் கொண்டு உலகின் அனைத்துப் பகுதிகளும் ஒன்றிணைந்துள்ளன. இதுவே உலகமயமாதல் அல்லது பூகோளமயமாதல் என அழைக்கப்படுகின்றது.



உரு. 4.12 நவீன தொழினுட்ப உபகரணங்கள் சில

நவீன தொழில்நுட்பத்துடன் வளர்ச்சியடைந்த உற்பத்திச் சாதனங்கள் சில மேலேயுள்ள உருவில் காட்டப்பட்டுள்ளன. இந்தத் தொழில்நுட்ப உபகரணங்கள் கைத்தொழில், தொடர்பாடல், வர்த்தகம், கல்வி, சுகாதாரம் போக்குவரத்து போன்ற சகல துறைகளிலும் பரவிக் காணப்படுகின்றன.

உலகில் ஏற்பட்டுவரும் தகவல் தொழில்நுட்ப விருத்தியுடன் இணைந்தவகையில் உலகின் எந்த மூலையில் இடம் பெறும் நிகழ்வுகளையும் தொழில்நுட்பத்தின் மூலமாகத் தெரிந்துகொள்ள முடிகின்றது. எனவே தொழில்நுட்பத்துடன் இணைந்ததாக உலகம் ஒரு கிராமமாக சுருங்கியுள்ளதை, உலகமயமாதல் என வரைவிலக்கணப்படுத்தப்படுகிறது.

பொருளாதார, அரசியல் மற்றும் பண்பாட்டு செயற்பாட்டாளர்கள் மத்தியில் இடம்பெறும் அன்னியோன்யமான தொடர்புகள் உலகமயமாதல் எனப்படுகிறது. உலகப் பொருளாதாரம் ஓர் அலகாக மாற்றமடைதலும் உலகமயமாதலாகும். இதனாலேயே ஒரு நாட்டினுள் பொருளாதார ரீதியாக இடம்பெறும் மாற்றங்கள் ஏனைய நாடுகள் மீது பாதிப்புச் செலுத்துகின்றன.

**உலகமயமாதலின் சில விசேட பண்புகள்**

- வேலையுலகு விரிவடைதல்.
- உலக ரீதியான சந்தை விரிவடைதல்.
- உலகின் எந்தவொரு நாட்டிலும் வாழமுடிதல்.
- தமது தகைமைகளுக்கும் அனுபவங்களுக்கும் ஏற்ப வேறு நாடுகளில் சேவை புரிதல்
- குறைந்த செலவில் தொழிலாளர்களைப் பெற்றுக்கொள்ளக்கூடிய நாடுகளுக்கு கைத்தொழில்கள் பரவுதல்

உலகமயமாதல் பரவலடைவதில் பொருளாதாரக் காரணியுடன் அரசியல் சமூக மற்றும் பண்பாட்டுக் காரணிகளும் செல்வாக்குச் செலுத்துகின்றன. உலகமயமாதல் எண்ணக்கரு, முன்னேற்றமடைந்த நாடுகள் ஏனைய நாடுகள் மீது அரசியல் ரீதியாகத் தமது செல்வாக்கினை செலுத்த முற்படுவதைக் குறிக்கின்றது. சந்தைகளை முகாமை செய்தல், பொருளாதாரத் தடைகளை விதித்தல், பல்வேறு பண்பாடுகள் ஒன்று சேர்தல் போன்றன உலகமயமாதலினால் இடம்பெறுகின்றன. அதே போன்று உலக வல்லரசுகள் உலகச் சந்தையில் தமது ஆதிக்கங்களை நிலைநிறுத்துவதற்காகவும் உலகமயமாதலைப் பயன்படுத்த முற்படுகின்றன. அபிவிருத்தி அடைந்துவரும் நாடுகள் மீது நவகாலனித்துவ வாதத்தை பரவச்செய்தல் போன்ற பண்புகளும் உலகமயமாக்கல் காரணமாக ஏற்பட முடியும்.

**செயற்பாடு**

உலகமயமாதல் தொடர்பான தகவல்களைச் சேகரித்துக் கட்டுரையொன்று வரைக.

## உலகமயமாதல் உலகப் பொருளாதாரத்தில் ஏற்படுத்தும் பாதிப்புகள்

உலகமயமாதல் காரணமாக சர்வதேச வர்த்தகத்தில் பல்வேறு மாற்றங்கள் ஏற்பட்டுள்ளன. முழு உலகமும் ஒரே மொழியைப் பேசக்கூடிய ஒரே பண அலகைப் பயன்படுத்தக்கூடிய ஒரு தேசமாக மாற்றமுற வேண்டும் என்பது ஐரோப்பிய ஒன்றியத்தின் கருத்தாகும். ஐரோப்பிய ஒன்றியம் தமது வலய நாடுகள் மத்தியில் யூரோ பண அலகை அறிமுகம் செய்துள்ளமை இதற்குச் சான்றாகும்.

உலகமயமாதலில் முழு உலகையும் ஒரே பொருளாதார அலகாக மாற்ற உலக வல்லரசு கள் முயற்சிக்கின்றன என்பதை ஏற்கனவே நாம் அறிந்து கொண்டோம் இதற்கு ஆதரவான வகையிலேயே உலக வங்கி, சர்வதேச நாணய நிதியம், ஐக்கிய நாடுகள் சபை, ஆசிய அபிவிருத்தி வங்கி போன்ற பல்வேறு நிறுவனங்களும் செயற்படுகின்றன. இந்நிறுவனங்கள் ஏனைய நாடுகள் மீது நேரடியாகவும் மறைமுகமாகவும் செல்வாக்குச் செலுத்துவதைக் காணலாம்.




இத்தகைய தாக்கங்களின் மூலம் உலகின் பலம் மிக்க அரசுகள் தமது இலாபத்தை அதிகரித்துக் கொள்வதற்காகவும் அரசியல் உறுதிப்பாட்டை ஏற்படுத்திக் கொள் வதற்காகவும் முயல்கின்றன.

உலகமயமாதலை எதிர்கொள்ளும் நோக்கில் பல்வேறு அமைப்புக்களைத் தோற்றுவிக்கின்ற போக்கு நிலவுவதனை சமகாலத்தில் காணமுடிகிறது. அத்தகைய அமைப்புக்கள் சிலவும் அவற்றின் முக்கிய குறிக்கோள்களும் கீழே அட்டவணையின் மூலம் காட்டப்பட்டுள்ளன.

| அமைப்பு | அங்கத்துவ நாடுகள் | நோக்கங்கள் |
|---|---|---|
| ஐரோப்பிய ஒன்றியம் (EU) | ஒஸ்திரியா , பிரான்ஸ், டென்மார்க், பெல்ஜியம், ஜேர்மன், பின்லாந்து, கிரேக்கம், அயர்லாந்து, இத்தாலி, நெதர்லாந்து, லக்சம்பேர்க், போர்த்துக்கல், ஸ்பெயின், சுவீடன், ஐக்கியஇராச்சியம் மொத்தம் 28 நாடுகள் உள்ளன | • அங்கத்துவ நாடு களிடையே பொதுச் சந்தையொன்றை நிறுவுதல்<br>• அங்கத்துவ நாடுகளிடையே சமநிலையான அபிவிருத்தியை ஏற்படுத்தல் |
| வட அமெரிக்க சுதந்திர வர்த்தக உடன்படிக்கை (NAFTA) | அமெரிக்க ஐக்கிய நாடுகள், கனடா, மெக்சிக்கோ | • சுதந்திர வர்த்தகத்தை மேற்கொள்ளல் |
| தெற்காசிய முன்னுரிமை வர்த்தக உடன்படிக்கை (SAPTA) | இலங்கை, இந்தியா, பாகிஸ்தான்,பங்களாதேசம், பூட்டான், நேபாளம், மாலைதீவு | • பிராந்திய வர்த்தக நட வடிக்கைகளை மேம்படுத்தல் |
| வங்காள விரிகுடாவின் பல்துறைத் தொழினுட்ப மற்றும் பொருளாதார ஒத்துழைப்புக்கான அமையம் | பங்களாதேசம், இந்தியா, மியன்மார், தாய்லாந்து, இலங்கை, நேபாளம், பூட்டான். | • ஆடைகள், மருந்துகள், தகவல் தொழில்நுட்பம் போன்ற துறைகளில் முதலீட்டை விரிவுபடுத்தல்<br>• அரச மற்றும் அரச சார்பற்றஅமைப்புகளை ஊக்குவித்தல்<br>• பிராந்திய ஒத்துழைப்பை ஏற்படுத்தல் |

இவற்றுக்கு மேலதிகமாக உலகமயமாக்கல் காரணமாக உலக பொருளாதாரக் குழுக்களை ஏற்படுத்துதலும் இடம்பெற்றுள்ளது. உதாரணமாக G-7, G-77, G-24, G-15 போன்ற அமைப்புக்கள் தோற்றுவிக்கப்பட்டமை, உலகப் பொருளாதாரப் பிரச்சினைகளைத் தீர்த்துக் கொள்வதற்காக ஒத்துழைப்புடன் செயற்படுதல், விருத்தியடைந்த நாடுகளிலிருந்து செலுத்தப்படும் அழுத்தங்களுக்கு ஒற்றுமையாக முகங்கொடுத்தல் என்பன இத்தகைய சர்வதேச பொருளாதாரக் குழுக்கள் நிறுவப்படுவதன் அடிப்படைக் குறிக்கோளாக விளங்குகிறது.

## செயற்பாடு

*நீர் அறிந்த வேறு உலக அமைப்புகள், மற்றும் நிறுவனங்கள் பற்றிய தகவல் களைச் சேகரித்து சிறு நூலொன்றை ஆக்குக.*

## உலகமயமாதல் இலங்கை மீது ஏற்படுத்தியுள்ள செல்வாக்கு

உலகமயமாக்கலில் இருந்து இலங்கை விலகியிருக்க முடியாது. உலகமயமாக்கல் காரணமாக ஏற்படும் தாக்கங்களை நாம் அனுபவிக்க வேண்டியுள்ளது. 1977 இன் பின்னர் நடைமுறைப்படுத்தப்படும் திறந்த பொருளாதாரக் கொள்கை காரணமாக உலகமயமாக்கலின் பாதிப்புகள் அதிகமாக காணப்படுகின்றன. உற்பத்தி மற்றும் வர்த்தகம் என்பன உலகச் சந்தைக்கு திறந்து விடப்பட்டிருத்தல் இதற்குக் காரணமாகும்.

உலகமயமாக்கல் காரணமாக இலங்கைக்கு ஏற்பட்டுள்ள சாதகமானதும் பாதகமான துமான விடயங்கள் சில கீழே காட்டப்பட்டுள்ளன.

### சாதகமான தாக்கங்கள்

1. வெளிநாட்டு முதலீடுகள், புதிய தொழில்நுட்பங்களின் உள்வருகை.
2. வேலையுலகில் புதிய தொழில் வாய்ப்புக்கள் உருவாவதனால் வேலையின்மை குறைவடைதல்.
3. தேசிய உற்பத்திக் காரணிகளுக்கு அதிக கேள்வி உருவாதல்.
4. கைத்தொழில் மற்றும் சேவைத் துறைகளில் முன்னேற்றம் ஏற்படல்.
5. சர்வதேச சந்தையை மையமாகக் கொண்டு உள்ளூர் உற்பத்திகள் தோற்றம் பெறல்.
6. சென்மதி நிலுவை சாதகமாக அமைதல்.
7. பொருளாதாரம் பன்முகப்படுத்தப்படல்.
8. உயர்தரம் வாய்ந்த உற்பத்திகள் தோற்றம்பெறல்.
9. வெளிநாட்டு நிபுணத்துவ அறிவு நாட்டிற்கு பெற்றுக்கொள்ளப்படுவதனால் தேசிய மனிதவள அபிவிருத்தி ஏற்படல்.
10. உற்பத்தி தொடர்பிலான உட்கட்டமைப்பு வசதிகள் பரவலடைதல்.
11. தேசிய வளங்களிலிருந்து உச்ச பயனைப் பெற்றுக்கொள்ள முடிதல்.
12. பாரிய கைத்தொழில்கள் நகரங்களிலிருந்து வெளிப் பிரதேசங்களுக்கு எடுத்துச் செல்லப் படுவதால் அப் பிரதேசங்கள் அபிவிருத்தியடைதல்.
13. பல்வேறு வலய ஒழுங்கமைப்புகள் ஒன்றிணைதல்.

14 செயற்திறன் குறைந்த உற்பத்திகள் சந்தையிலிருந்து நீக்கப்படுதல்.

15 உள்நாட்டு நுகர்வோருக்கு உயர்தரமான பொருட்களைப் பெற்றுக் கொள்ளும் வாய்ப்புக் கிடைத்தல்.

## பாதகமான தாக்கங்கள்

1. பல்தேசிய கம்பனிகளின் உற்பத்திகளோடு தேசிய உற்பத்தியாளர்களுக்கு போட்டியிட முடியாது போதல்.
2. கைத்தொழில் நிறுவனங்களால் ஏற்படுத்தப்படும் சுற்றாடல் பாதிப்புகள் அதிகரித்தல்.
3. கடன்களுக்கான வட்டி, கடன்களை மீளச் செலுத்துதல் என்ற வகையில் அன்னியச் செலாவணி இலாபம், வெளிநாடுகளுக்குச் சென்றடைதல்.
4. மூளை சாலிகளின் வெளியேற்றம் துரிதமடைதல்.
5. அபிவிருத்தியடைந்த நாடுகளால் ஏற்படுத்தப்படும் தாக்கங்கள் அதிகரித்தல்.
6. பொருத்தமற்ற பொருளாதாரம் மற்றும் உதவிகளில் தங்கியிருக்கும் நிலை ஏற்படல்.
7. வெளிநாட்டுக் கடன்கள், தேவையற்ற நுகர்வுப் பழக்கவழக்கங்கள் ஏற்படுத்தப்படல்.
8. தேசிய பண்பாடுகளுக்கு பல்வேறுப் பாதிப்புகள் ஏற்படல்.
9. உலகப் பொருளாதார மாற்றங்களுக்கு நேரடியாக முகங்கொடுக்க வேண்டியேற்படல்.
10. அரசதுறை பொருளாதார நடவடிக்கைகளிலிருந்து விலகிச்செல்வதால் மக்களுக்கு கிடைக்க வேண்டிய நலன் புரிச் சேவைகள் தொடர்பில் பிரச்சினைகள் உருவாகுதல்.
11. வெளிநாட்டுக் கடன்களைக் கொண்டு பிழைக்க வேண்டியிருத்தல்.
12. அரசு விலைக் கட்டுப்பாட்டு முகாமையிலிருந்து விலகி இருப்பதால் வறிய மக்கள் பாதிப்புக்குள்ளாதல்.
13. தேசிய வளங்கள் சுரண்டப்படல்.
14. நமக்கேயுரிய பொருளாதார முறைமைகள் அழிவடைதல்.
15. உள்நாட்டுக் கைத்தொழில் துறை பாதிக்கப்படுதல்.

உலகமயமாக்கல் மிக விரைவாகப் பரவலடைவதன் காரணமாக அவற்றின் மூலமான சாதகங்களையும், பாதங்களையும் எதிர் நோக்க வேண்டியுள்ளமை என்பது மேற்படி விடயங்களிலிருந்து தெளிவாகின்றது. மக்களுக்கு விழிப்புணர்வை ஏற்படுத்துவதன் மூலம் பாதகமான தாக்கங்களைக் குறைத்துக் கொள்ளலாம்.

### செயற்பாடு

1. உலகமயமாக்கல் பண்புகளை அட்டவணைப்படுத்துக.
2. இதன் பாதகத்தைக் குறைத்துக் கொள்வதற்கான வழிமுறைகளை விளக்குக.
3. இவை தொடர்பில் பின்பற்றக் கூடிய மாற்று வழிகளைக் குறிப்பிடுக.
4. ''பன்மைத்துவ சமூகத்தின் சிறப்பான செயலாற்றத்திற்கு உலகமயமாக்கத்தின் பாதிப்புகள்'' எனும் தலைப்பில் கட்டுரை ஒன்றை வரைக.

# 05 சனநாயக சமூகமொன்றில் மோதலைத் தீர்த்தல்

**அறிமுகம்**

அன்றாடச் செயற்பாடுகளின் போது அடிக்கடி உச்சரிக்கப்படுகின்ற ஒரு சொற்பதமாக 'மோதல்' அமைந்துள்ளது. எல்லாச் சமூகங்களிலும் இது காணப்படுவதற்குக் காரணம் இது, வேற்றுமையின் பிரதிபலிப்பாகக் உள்ளமையாகும். மனிதர்களிடையிலான வேற்றுமை மோதலின் மூலம் வெளிப்படுத்தப்படும். தனிப்பட்ட நோக்கங்கள், தேவைகள் , விருப்பங்கள் என்பவற்றின் அடிப்படையில் மோதல் உருவாகும். இவ் வேற்றுமையானது மொழி, சாதி, சமயம், பிரதேசம் போன்றவற்றை அடிப்படையாகக் கொண்டு உருவாகலாம். அவ் வேற்றுமையின் பிரதிபலிப்பாக குழுக்களுக்குள்ளும், குழுக்களுக்கிடையிலும், குழுக்களுக்கும் அரசுக்குமிடையிலும் மோதல் உருவாகலாம்.

மோதலினால் ஏற்படும் பாதகமான விளைவுகளைப் போலவே இதில் சாதகமான விளைவுகளும் உண்டு. சமூக அபிவிருத்திச் செயற்பாடுகளுள் சாதகமானதும் ஆக்கபூர்வமானதுமான பணிகளை நிறைவேற்றும் காரணியாக மோதலை இனங்காண முடியும். உதாரணமாக நீண்டகாலப் பிரச்சினையின் தீர்வுக்கான நகர்வை இதன் மூலம் ஏற்படுத்தலாம்.

## மோதலுக்குட்படும் தனியாளின் மனநிலை

தனிநபர் ஒருவரின் மனதில் ஏற்படும் கட்டுப்படுத்த முடியாத உணர்ச்சிகளே மோதலுக்கான ஆரம்பமாக அமையும். அதன் பிரதிபலிப்பாக பதற்றம், பதகளிப்பு, முன்கோபம், சகிப்புத்தன்மையின்மை, மோசமான வார்த்தைப் பிரயோகம், சண்டைக்குத் தயாராதல், உடற் காயமேற்படும் வகையில் தாக்குதல் போன்ற நடவடிக்கைகளில் அந்நபர் ஈடுபடுவார். இம்மோதல் மனநிலையைச் சமநிலைப்படுத்திக் கொள்ளாது தொடர்ந்து செயற்படும்போது இறுதியில் அவர் ஒரு மன நோயாளியாகவும் மாறுவதற்கு இடமுண்டு.

இவ்வாறான நடத்தைக்குரிய நபர்களினால் குடும்பத்திலும் குடும்பங்களுக்கிடையிலும் சமூகத்திலும் நிறுவனங்களிலும் அடிக்கடி மோதல்கள் தோன்றுகின்றன.இந்நிலை தனியாட்களைப் போன்றே சமூகத்திற்கும் பாதிப்பாக அமையும் என்பதால், ஆரம்ப கட்டத்திலேயே அந்நிலைக்குத் தீர்வு காணுதல் அவசியமாகும். இங்கு மோதல் ஏற்படுவதற்குத் தனிநபரின் மனநிலை காரணமாக அமைவதால்,

மனதளவில் சமாதானத்தை உருவாக்குவதன் மூலம் மோதல் நிலையைக் குறைக்கவோ அல்லது நீக்கவோ முடியும்.

**மனதில் அமைதியை ஏற்படுத்திக் கொள்வதற்கான வழிகள்**

- சமய நடவடிக்கைகளில் ஈடுபடுதல்.
- உளவியல் பயிற்சிகளில் ஈடுபடுதல்.
- உளவளத்துணைச் சேவைகளை நாடுதல்/குறித்த நபரின் பிரச்சினையைத் தீர்த்தல்
- இயற்கைச் சூழலை அவதானித்தல்.

## மோதல் ஏற்படுவதற்கான அடிப்படைக் காரணங்கள்

ஜொஹான் கல்டூன் என்பவரால் அறிமுகப்படுத்தப்பட்ட **மோதல் முக்கோணம்** எனும் மாதிரி மோதல் தொடர்பான ஆய்வில் முக்கியத்துவம் பெறுகிறது.




B சூழ்நிலை என்பது மோதலுக்குப் பின்னணியாகும். இது மோதலுடன் சம்பந்தப் பட்டோரின் விருப்பின் பேரில் உருவாகும். இங்கு சூழ்நிலையானது சமூக, பொருளாதார, அரசியல் சூழ் நிலைகளை விளக்குவதாக அமையும்.

C மனப்பாங்கு என்பது மோதலை உருவாக்கும் உளவியல் காரணியாகும். அதாவது மோதலில் ஈடுபடும் நபர்கள் புரிந்து கொள்ளும் உண்மையான அல்லது பொய்யான நிலையாகும். பிழையான புரிந்துணர்வே வன்முறையான மோதல் நிலைக்கு காரணமாகும். இவற்றுள் பயம், சந்தேகம், ஏமாற்றம், விரோதம் எனும் உளவியல் காரணிகளால் உருவாகும் பிரதிபலனே விரோத மனப்பாங்கை ஏற்படுத்தி மோதலை உருவாக்கும்.

A நடத்தைகள் பல்வேறு வகைப்படும் அது ஒத்துழைப்பு சார்ந்ததாகவோ பலாத்காரமானதாகவோ அமையலாம். பலாத்கார நடத்தையானது வன்முறையாகவோ, அழிவாகவோ மாறலாம்.

## மோதல் ஏற்படும் தரப்புகள்







### செயற்பாடு

1. நீங்கள் முகங்கொடுத்த மோதல் நிலையொன்றை நினைவூட்டுங்கள்.
2. அந்த மோதலுக்கான அடிப்படைக் காரணம் யாது?
3. அதனால் நீர் அடைந்த தீய விளைவு யாது?
4. மோதல்நிலையைத் தவிர்த்துக் கொள்வதற்கு மேற்கொள்ளப்பட வேண்டியிருந்த செயற்பாடுகள் யாவை என்பன பற்றிக் கலந்துரையாடுக.

## மோதல் வகைகள்

மோதல் வகைகளை ஆய்வு செய்யும் போது அதன் பல்வேறு வடிவங்களை அறிந்து கொள்ள முடியும்.

கீழ்வரும் அட்டவணைக்கேற்ப மோதல்களைக் வகைப்படுத்தலாம்.

| | |
|---|---|
| தனியாள் மோதல் | தனிநபரின் உள்ளக வெளியகக் காரணங்களால் தனி நபரிடம் தோற்றம் பெறும் அகவழி மோதல்கள். |
| இரு நபர்களுக் கிடையிலான மோதல் | பல்வேறு கருத்துகள் மோதலாகும் மனபாங்குகள், வேற்றுமைகள் காரணமாக இருவருக்கிடையே ஏற்படும்.மோதல்கள் |
| குடும்பத்தினுள் மோதல் | கணவன், மனைவி, தாய், தந்தை, பிள்ளைகள் இடையே பல்வேறு காரணங்களால் ஏற்படும் மோதல்கள் |
| குழுக்களிடையே மோதல் | இன, மத, சாதி, பிரதேசம் எனும் அடிப்படையில் குழுக்கள் அல்லது பிரிவினரிடையே ஏற்படும் மோதல். |
| நாட்டினுள்ளே மோதல் | அரசகொள்கை, அரசியல் கருத்துகள், என்பவற்றினடிப்படையில் எழும் கிளர்ச்சி மற்றும் பயங்கரவாத மோதல்கள். |
| நாடுகளிடையே மோதல் | நாட்டின் எல்லை, வளப் பகிர்வு, வர்த்தகம், அரசியல் காரணங்களால் ஏற்படும் மோதல்கள். |
| நாடுகள் சிலவற்றுக்கிடையில் மோதல் | அரசியல் கருத்து வேற்றுமை, பொருளாதார, சமூக, அதிகார ரீதியில் ஏற்படும் மோதல்கள். |

மேற்படி வகைப்படுத்தலை விரிவாக நோக்கும் போது பிரதான பிரிவுகள் இரண்டின் அடிப்படையில் அவற்றை வகைப்படுத்தலாம். அவையாவன

- உள்ளக மோதல்கள் - உள்நாட்டு மோதல்.
- சர்வதேச மோதல் - நாடுகளுக்கிடையிலான மோதல்.

## உள்ளக மோதல்கள்

ஒரு நாட்டில் வாழும் மக்களிடையே ஏற்படும் தனியாள் மோதல் மற்றும் சமூக மோதல் என்பன உள்ளக மோதல் எனப்படும். இம் மோதல்களை இரண்டு வகையில் நோக்கலாம்.

- வெளிப்படையான மோதல்
- நுண்மையான மோதல்

தேசிய மட்டத்தில் அல்லது விரிவான வகையில் நிலவும் மோதல் வெளிப்படையான மோதலாகக் கருதப்படும். உதாரணமாக, இனங்களுக்கிடையே, சமயங்களுக்கிடையே, தொழிற் சங்கங்களுக்கிடையே ஏற்படும் மோதல்களைக் குறிப்பிடலாம். எதிர்பார்ப்புகள் ஏமாற்றமடையும் போது தனிநபரினுள் ஏற்படும் உளமுரண்பாடு, பொருளாதாரப் பிரச்சினை காரணமாக குடும்பத்தினுள் ஏற்படும் முரண்பாடு, வீட்டு வன்முறை, காணிப் பிரச்சினை என்பவற்றை நுண்மையான மோதல் என்று குறிப்பிடலாம்.

மோதல் ஏற்படுவதில், தனிநபர் மட்டத்திலிருந்து தேசிய மட்டம் வரையிலான காரணங்கள் பாதிப்புச் செலுத்துகின்றன. எனவே தனிநபர் மட்டத்தில் பிரச்சி னைகளுக்குத் தீர்வு காணாது தேசிய மட்டப் பிரச்சினைகளுக்கத் தீர்வு காண முடியாது என்பதும் தெளிவாகின்றது. மோதல் தீர்வின் போது மோதல் நிலவும் தனிநபர் மற்றும் தேசிய மட்டத்திலான தொடர்புகள் பற்றிய தெளிவான அறிவும் புரிந்துணர்வும் காணப்படுவது முக்கியமாகும்.

## சர்வதேச மோதல்கள்

நாடுகளுக்கிடையில் நிலவும் மோதல்கள் சர்வதேச மோதல்கள் எனப்படும். இம் மோதல்களை இரண்டு வகையில் நோக்கலாம்.

- கொள்கை ரீதியான மோதல்
- பொருளாதாரரீதியான மோதல்

அரசியல் மற்றும் சமூக, பொருளாதாரரீதியில் நிலவும் கருத்து வேற்றுமையை அடிப்படையாகக் கொண்டு எழும் மோதலே கொள்கை ரீதியான மோதல் எனப்படும். உதாரணமாக முதலாளித்துவ, சோசலிச அதிகார வர்க்கங்களிடையே நிலவிய மோதல், மேலைத்தேய, கீழைத்தேய பண்பாடுகளிடையே நிலவிய மோதல், மேலைத்தேய நாடுகளுக்கும் மத்திய கிழக்கு நாடுகளுக்குமிடையே கொள்கைரீதியில் ஏற்பட்டுள்ள முரண்பாடு என்பவற்றை இதற்கு எடுத்துக் காட்டுகளாக குறிப்பிடலாம்.



உரு. 5.1 - முதலாம் உலக மாகாயுத்தம்



உரு 5.2 - இரண்டாம் உலக மாகயுத்தம்

யுத்தத்திற்கு வளச்சுரண்டல், பொருளாதார இலாபம் தேடல், அதிகார ஆசை என்பவை செல்வாக்குச் செலுத்துகின்றன. சர்வதேச மோதலின் இறுதிப் பெறுபேறாக போர்கள் நிகழ்வதைக் காணமுடியும். இவை, சர்வதேச மட்டத்திலும், பிராந்திய மட்டத்திலும், நாடுகளுக்கிடையிலும் நிலவுவதை அவதானிக்கலாம். முதலாம் உலக மகா யுத்தம், இரண்டாம் உலக மகா யுத்தம் என்பன சர்வதேச மட்டத்தில் நிகழ்ந்த அதி பயங்கரமானயுத்தங்களாகும். இப்போர்களின் போது பல மில்லியன் கணக்கில் மனித உயிர்கள் பலியானதுடன் சொத்துக்களின் அழிவும் சூழல் அழிவும் ஏற்பட்டன. இன்று சர்வதேச மட்டத்திலான யுத்தங்கள் இடம்பெறாத போதிலும் நாடுகளுக்கிடையில் நடைபெறும் சில யுத்தங்கள் இன்றும் தொடர்வதைக் காணலாம். உதாரணமாக, - பலஸ்தீனத்திற்கெதிராக இஸ்ரேல் நடாத்தும் யுத்தம், இந்தியா - பாகிஸ்தான் எல்லைப்போர், ஆப்கானிஸ்தான், லிபியா, துருக்கி, சிரியா நாடுகளுக்கு எதிராக இஸ்ரேலுடன் இணைந்து ஐரோப்பிய நாடுகள் மேற்கொண்டு வரும் யுத்தங்களைச் சு ட்டிக் காட்டலாம்.



உரு 5.3 - காசாமீதான யுத்த அழிவு



உரு 5.4 - லிபியா யுத்த அழிவு



உரு 5.5 - சிரியா யுத்த அழிவு

**செயற்பாடு**

இன்றைய காலகட்டத்தில் நாடுகளுக்கிடையில் இடம் பெற்று வரும் யுத்தம் தொடர்பாக பின்வரும் தலைப்புகளின் கீழ் கட்டுரை ஒன்று எழுதுக.

1. போரில் ஈடுபட்டுள்ள நாடுகள்
2. போர் ஏற்பட்டமைக்கான காரணங்கள்
3. சமாதானத்திற்காக மேற்கொள்ளப்பட்ட முயற்சிகள்

## மோதல் ஏற்படுவதற்கான அடிப்படைக் காரணங்கள்

மோதல் ஏற்படுவதற்கான அடிப்படைக் காரணங்களாக இனப்பிரச்சினை, அரசியல் கருத்து முரண்பாடு, சமயக் கொள்கை வேறுபாடு மற்றும் சமூகப் பொருளாதாரப் பிரச்சினைகள் போன்றவற்றைக் குறிப்பிடலாம். இதனைப் பின்வரும் வரிப்படம் மூலம் விளங்கிக் கொள்ளலாம்.




இனப்பாகுபாடு

**சாதி** : ருவண்டாவில் டுட்சி, ஹுடு இனக்குழுக்களிடையிலான மோதல்

**கோத்திரங்கள்** :

**உடலியல் தன்மை** : தென்னாபிரிக்காவில் நிற பேதம்

**சமூக நிலை** :

**கருத்து முரண்பாடு** :

அரசியல்

**எல்லைப் பிரச்சினை** : பலஸ்தீன் எல்லை மீதான இஸ்ரேலின் ஆக்கிரமிப்பு

**அதிகாரப்பரம்பல்** :

சமூக, பொருளாதார நிலை

**வறுமை** : சோமாலியா, எதியோப்பியா

**சந்தை** : பொருளாதாரத் தொடர்புகள் உருவாதல்

**வளங்கள்** : மத்திய கிழக்கிழக்கு நாடுகளின் எண்ணெய்வளத்திற்காக ஐரோப்பிய நாடுகள் தொடுக்கின்ற யுத்தம்

சமயக் கொள்கை

**சமயப்பிரிவுகளிடையே** : கத்தோலிக்க - புரட்டஸ்தாந்து

**சமயங்களிடையே** : சிலுவைப் போர்

### செயற்பாடு

1. மேற்படி வரிப்படத்தின் மூலம் மோதல் ஏற்படுவதற்கான ஓர் அடிப்படைக் காரணத்தைத் தெரிவு செய்து, இன்றைய கால கட்டத்தில் நிகழும் யுத்தம் ஒன்றை உதாரணமாகக் கொண்டு விளக்குக.
2. போரின் அழிவுகள் பற்றியும் சமாதானத்தின் தேவை பற்றியும் சித்திரிக்கும் சுவரொட்டி (போஸ்ட்டர்) ஒன்றை வரைக.

## மோதலைத் தீர்க்கும் முறைகள்

மோதல் ஒன்று உருவாவதில் தனிநபர்களிடையேயான கருத்து வேறுபாடுகள் மற்றும் விருப்பு வெறுப்புக்கள் என்பன அடிப்படைக் காரணங்களாக அமைகின்றன. மோதலாக உருவெடுக்கும் முன் ஆரம்ப நிலையிலேயே அதனைத் தடுப்பதன் மூலம் மோதல்கள் ஏற்படுவதைத் தவிர்க்க முடியும். இதற்காக பல்வேறு உத்திகளைப் பின்பற்ற முடியும்.

மோதலைத் தீர்ப்பதற்குப் பயன்படுத்தக் கூடிய சிறந்த முறையாக சனநாயக முறை செயற்படுவதைச் சுட்டிக்காட்டலாம். மோதலுக்கு அல்லது கொள்கை வேறுபாட்டுக்கு அல்லது கருத்து வேறுபாட்டுக்கு ஆளாகியிருக்கும் தனிநபர்களினது கருத்துகளை கவனத்திலெடுத்து முடிவு காண்பதே இதன் பொருளாகும். இது, தனிநபருக்கு மட்டுமன்றி குடும்பம், நாடு, இனம், சர்வதேசம் தொடர்பான பிரச்சினைகளைத் தீர்க்கவும் ஏற்றது.

தனிநபர்களிடையே அல்லது குழுவினரிடையே கருத்து வேறுபாடு காணப்படும் போது அதனை அனுதாபத்தோடு அணுகாவிட்டால் அது ஒரு மோதலாக உருவெடுக்கலாம். எனவே குறிப்பிட்ட இரு தரப்பினரிடையேயும் சிறந்த தொடர்பாடலைக் கட்டியெழுப்புவதன் மூலம் அது வன்முறையாக மாறுமுன் அதனைக் கட்டுப்படுத்த முடியும்.

மோதல் மூலம் ஏற்படும் அழிவுகள் தனிநபரைப் போன்று சமூகத்துக்கும் பாதிப்பாக அமையும் அதனால் மோதலைத் தீர்த்து வைத்தல் முக்கியம் வாய்ந்ததாகும். சமூகத்தில் நிலவும் மோதல்கள் பல்வேறு வடிவங்களிலும் பல்வேறு நிலைகளிலும் காணப்படும். மோதல் தீர்வின் போது பிரச்சினையின் இன்றைய நிலையை நன்கு புரிந்து கொள்வது அவசியமாகும். அதற்கேற்ப அம்மோதல் தீர்விற்கு உரிய முறைகளைப் பயன்படுத்த முடியும். அதற்கான முறைகளாக கலந்துரையாடுதல், வேண்டுகோள் விடுத்தல், ஆலோசனைகளை முன்வைத்தல், மத்தியஸ்தம் வகித்தல், இணக்கப்படுத்தல், காப்பாற்றுதல், தீர்ப்பு வழங்கல், ஆலோசனை வழங்கல் எனும் முறைகள் முக்கியத்துவம் பெறுகின்றன.

#### கலந்துரையாடல்

மோதல் தீர்வுக்காகப் பயன்படுத்தும் ஆரம்ப அடிப்படை முறையாக அமைவது கலந்துரையாடலாகும். பிரச்சினையுடன் தொடர்பான தரப்பினர் நேரடியாகவோ மத்தியஸ்தர்கள் ஊடாகவோ கலந்துரையாடுவதன் மூலம் இருதரப்பினருக்கும் வெற்றி - வெற்றி (Win - Win Strategy) எனும் தீர்வைப் பெற்றுக்கொள்ள முடியும்.

## கலந்துரையாடலின் பண்புகள்

- கலந்துரையாடலின் மூலம் தீர்வை நாடுதல்.
- தனிப்பட்டதாகவும் நம்பிக்கையுடையதாகவும் இருத்தல்.
- உடனடித் தீர்வு கிடைத்தல்.
- செலவு குறைந்த முறையாகக் காணப்படுதல்.
- முறைசாராத கட்டமைப்பைக் கொண்டிருத்தல்.
- இரு தரப்பினருக்கும் வெற்றி - வெற்றி எனும் தீர்வு கிட்டுதல்.

### கலந்துரையாடல் மேற்கொள்ளப்பட வேண்டிய சந்தர்ப்பங்கள்

- தனிப்பட்ட மோதல்.
- குடும்ப மோதல்.
- சொத்துத் தகராறு.
- நிறுவனத்தினுள் மோதல்.
- நிறுவனங்களுக்கிடையிலான மோதல்.
- உள்நாட்டு மோதல்.
- நாடுகளுக்கிடையிலான மோதல்.

**செயற்பாடு**

உமது வகுப்பில் அல்லது பாடசாலையில் கண்ட மோதல் நிலை ஒன்றைத் தெரிவு செய்து அதனைத் தீர்ப்பதற்கான கலந்துரையாடல் முறையொன்றை மேற்கொள்ளும் விதத்தைப் பாத்திரமேற்று நடித்துக் காட்டுக.

### பேச்சுவார்த்தையும் பேரம் பேசும் முறையும்

தொழிலாளர்களிடையே தொழில்ரீதியான மோதல் ஏற்படும் சந்தர்ப்பத்தில் அதனை சனநாயக ரீதியில் தீர்ப்பதற்கு இம்மோதல் தீர்வு முறை மிகவும் உகந்தது. மோதலுக்குட்பட்ட தரப்பினர் தத்தமது நிலைப்பாட்டை பேச்சுவார்த்தை மூலம் கலந்துரையாடுவதற்கு முன்வருவர். இம்முறையின் கீழ் பிரச்சினைகள் ஏற்படும் சந்தர்ப்பத்தைப் போலவே இணக்கப்பாட்டுக்கு வராத சந்தர்ப்பத்திலும் இருதரப்பினரும் விலகித் தமது எதிர்ப்பைத் தெரிவிப்பது பிரதான இயல்பாகும்.

இறுதியில் இரு தரப்பினரும் தத்தமது வேண்டுகோள்களை கவனத்தில் கொண்டு சிற்சில விடயங்களில் ஒன்றுபட்டு மோதலைத் தீர்த்துக் கொள்வர்.

தொழிலாளர் பிரச்சினை, தோட்டத் தொழிலாளர் பிரச்சினைகளின் போது தொழிற் சங்கங்கள் பேச்சுவார்த்தை, பேரம் பேசுதல் போன்ற முறைகளைப் பின்பற்றுகின்றன.

### பேரம் பேசும் முறையின் பண்புகள்

- குழுவாகச் செயற்படுதல்.
- தொழிலாளர் - தொழில் தருநர் எனும் இரு தரப்பினர் காணப்படுதல்.
- ஒரே மேசையில் அமர்ந்து கலந்துரையாடல்.
- பரஸ்பர உடன்பாட்டுடன் நிகழ்தல்.

- ஒழுங்கமைக்கப்பட்டதாகக் காணப்படதல்.
- சேவை நிபந்தனைகள், சம்பளம் தொடர்பாக முடிவுகள் எட்டப்படல்.
- வேண்டுகோள்களை முன்வைப்பதன் மூலம் பேரம் பேசும் முறை ஆரம்பமாதல்.
- இணக்கப்பாட்டு ஒப்பந்தம் மூலம் பேரம் பேசும் முறை முடிவுறும்.

**செயற்பாடு**

1. பேரம்பேசும் பண்பகள் மூன்றைக் குறிப்பிட்டு விளக்குக.
2. தொழிலாளர், தொழில் தருனர் எனும் இரு தரப்பினரிடையே ஏற்படும் மோதலைத் தீர்ப்பதற்கு பேரம்பேசும் முறையைப் பயன்படுத்துவதால் ஏற்படும் நன்மைகளை விளக்குக.

## நடுநிலையாளராகத் தலையிடுதல்

தனிநபர், குழுக்களுக்கிடையில், சமூகக் குழுக்களுக்கிடையில், நாடுகளுக்கிடையில் ஏற்படும் மோதலைத் தீர்த்துக் கொள்வதற்குப் பேச்சுவார்த்தைமுறை பயனற்றுப் போகும் சந்தர்ப்பத்தில் அப்பிரச்சினையைத் தீர்ப்பதற்குப் பயன்படுத்தும் முறையே தலையிடுதல் ஆகும். இது போர்த் தன்மையற்ற சமாதான ரீதியிலான தலையீடாகும். இதற்காக தொழில்துறை சார்ந்த மத்தியஸ்த்தர்கள், சமாதான செயற்பாட்டாளர்கள், மோதலில் ஈடுபட்ட அங்கீகரிக்கப்பட்ட உறுப்பினர்கள் மற்றும் வெளிவாரியான தரப்பினர் என்போரை ஈடுபடுத்த முடியும்.

## நடுநிலையாளரின் பணிகள்

- பக்கச்சார்பற்றவராயிருத்தல்.
- மோதல் பற்றி முழுமையான விளக்கத்தைப் பெற்றிருத்தல்.
- தனது முடிவை அல்லது தீர்ப்பை மோதல் தரப்பினர் மீது சுமத்தாதிருத்தல்.
- இரு தரப்பினர் மீதும் செல்வாக்குச் செலுத்தாதிருத்தல்.
- இரு தரப்பினரதும் சம்மதத்துடன் தீர்வை நோக்கி வழிநடாத்துதல்.
- இரு தரப்பினரும் நேரடியாக சந்திக்க முடியாத கட்டங்களில் தனித்தனியாக அவர்களை சந்தித்துக் கருத்துகளைப் பெற்று இரு தரப்பினரிடமும் செய்தியை எடுத்துரைத்தல்.
- நெகிழ்வான தீர்ப்பினைப் பெற்றுக்கொள்ள வழிவகை செய்து வெற்றியைப் பெற்றுக்கொடுத்தல்.

## நடுநிலையாளரிடம் காணப்பட வேண்டிய பண்புகள்

- சிறந்த செவிமடுப்பவராகத் திகழ்தல்.
- நம்பிக்கையானவராக இருத்தல்.
- அர்ப்பணிப்புடையவராயிருத்தல்.
- நேர்மையானவராயிருத்தல்.
- பக்கச் சார்பற்ற தன்மை.
- மத்தியஸ்தராயிருத்தல்.
- அனுபவ முதிர்ச்சி உடையவராக இருத்தல்.
- விசாரணை செய்யும் பண்புடன் ஆக்கத் திறமையுள்ளவராயிருத்தல்.

## நடுநிலையாளராகத் தலையீடு செய்யக் கூடிய சந்தர்ப்பங்கள்

- குடும்பப் பிரச்சினை (வீட்டு வன்முறை)
- நுகர்வோர் மற்றும் வர்த்தகரிடையிலான பிரச்சினை
- வாடகைக் குடியிருப்பாளர், வீட்டு உரிமையாளர் இடையிலான பிரச்சினை
- ஊழியர் மற்றும் வேலை வழங்குநர்களுக்கு இடையிலான பிரச்சினை (சம்பளம், முற்பணம் தொடர்பானவை)
- மூத்தோரின் பிரச்சினைகள் (வயது முதிர்ந்த பெற்றோர், பிள்ளைகள் இடையிலானவை)
- இனங்களிடையே நிலவும் மோதல் நிலை
- நாடுகளுக்கிடையிலான மோதல்கள் (முடிவுக்குக் கொண்டு வருவதற்கு)

**செயற்பாடு**

1. தலையிடும் முறையின் சிறப்பியல்புகள் சிலவற்றை எழுதுக.
2. மோதல் தீர்வுக்கு தலையிடுதல் மூலம் கிடைக்கும் அனுகூலங்களை விளக்குக.
3. உமது நண்பர்களிடையிலான மோதல் நிலை ஒன்றின் போது நடுநிலையாளராகச் செயற்பட்ட அனுபவத்தை விளக்குக.

## இணக்கப்பாடு

இணக்கப்பாடு என்பது மோதலை அல்லது முரண்பாட்டைத் தீர்ப்பதற்கான நடவடிக்கையாக அமையும் ஒரு செயற்பாடாகும். இது மோதல் தீர்வாக அமையாது. இணக்கப்படுத்துநர் தனிநபராகவோ ஒரு குழுவாகவோ அமையலாம். மோதலுக்குத் தீர்வு காண்பதற்காக எதிர்த்தரப்பினருடன் கலந்துரையாடுவதன் மூலம் பிரச்சினையைத் தீர்த்துக் கொள்வதற்கு முன்வருதலே இதன் மூலம் எதிர்பார்க்கப்படுகின்றது. மோதல் நிலை ஒன்றை அடிப்படையாகக் கொண்டு எந்தவொரு தரப்பும் வெற்றி, தோல்வியின்றிச் செயற்படும் சந்தர்ப்பத்தில் இணக்கப்பாட்டாளர் ஒருவர் ஒரு தரப்பின் வேண்டுகோளின் பேரில் அல்லது இருதரப்பினரின் வேண்டுகோளின் பேரில் அல்லது வெளியார் ஒருவரின் வேண்டுகோளின் பேரில் செயற்பட முன்வரலாம்.

## இணக்கப்பாட்டாளரின் பணிகள்

- எதிர்த் தரப்பினரிடையே கலந்துரையாடலை ஏற்படுத்துதல்.
- மோதலுக்கான அடிப்படைக் காரணம் பற்றி விளக்கமளித்தல்.
- மோதலுக்கு அடிப்படையான காரணம் பற்றி நேரடியாக அல்லது மறை முகமாகக் கலந் துரையாடுதல்.
- எதிர்த்தரப்பினரிடம் காணப்படும் வேற்றுமை மற்றும் இடைவெளியைக் குறைக்கும் வகையில் செயற்படுதல்.
- இணக்கப்பாடொன்றுக்காக வேலைத்திட்டம் ஒன்றை முன்வைத்தல்.

இணக்கப்பாடு செய்வதற்கான சட்டரீதியான நிறுவனமாக ''இணக்கசபைகள்'' நீதி அமைச்சினால் நிறுவப்பட்டுள்ளன. இச்சபைகள் மூலம், மோதல், சிறுகுற்றம், குடும்பப் பிரச்சினைகள் போன்றவற்றை நீதி மன்றத்திடம் கொண்டு செல்வதற்கு முன்னர் தீர்த்துக் கொள்ள உதவுவதே இணக்கசபையின் பணியாகும். இவ்வாறான இணக்க சபைகள் பிரதேச ரீதியாக நாடு முழுதும் செயற்பட்டுவருகின்றன.

## இணக்கப்பாட்டை ஏற்படுத்திக்கொள்வதற்கான சந்தர்ப்பங்கள்

- குடும்பப் பிரச்சினையைத் தீர்ப்பதற்கு.
- தொழிலாளர் பிரச்சினையை தீர்ப்பதற்கு.
- குழுக்களிடையிலான பிரச்சினைகளைத் தீர்ப்பதற்கு.
- பொதுச் சொத்துகள் தொடர்பான பிரச்சினைகளைத் தீர்ப்பதற்கு.
- சிறு குற்றங்களை தீர்த்து வைத்தல்.
  உதாரணமாக - அவமானப்படுத்தல், அச்சுறுத்தல், சொத்துக்களுக்குச் சேதம் விளைவித்தல் போன்ற சிறு குற்றங்களை தீர்த்து வைத்தல்.

**செயற்பாடு**

*1. உமது பிரதேசத்தின் இணக்க சபை கூடும் நாளில் அங்கு சென்று அதன் நடவடிக்கைகளை நன்கு அவதானித்து அறிக்கை ஒன்றைத் தயாரிக்கவும்.*

## காப்பாற்றும் அல்லது மீட்கும் முறை

ஒரு பிரச்சினையில் சிக்கியிருக்கும் தரப்பினரின் விருப்பத்தின் பேரில் மோதலைத் தீர்த்துக்கொள்ளும் மத்தியஸ்த முறையாக இம்முறையைக் குறிப்பிடலாம். அதற்காகத் தேர்ந்தெடுக்கப்படும் நிபுணத்துவமுடையவர், மீட்பாளர் என அழைக்கப்படுவார். மோதலுக்கு உட்பட்டுள்ள இரு தரப்பினரிடமும் கேள்விகளைக் கேட்டு அவர்களது பதில்களைக் சரியாகச் செவிமடுத்து அதன் பின்னர் சரியான தீர்வை முன்வைப்பார். இரு தரப்பினரும் மத்தியஸ்தரின் தீர்ப்பு தமக்குச் சாதகமா யிருக்கும் என்று எதிர்பார்த்த போதிலும் ஒரு தரப்பினர் மட்டும் வெற்றியடைவது (Win - Lost Strategy) இதன் சிறப்பியல்பாகும்.

## மீட்பாளரிடம் காணப்பட வேண்டிய பண்புகள்

- நன்றாகச் செவிமடுத்தல்.
- பக்கச் சார்பற்றிருத்தல்.
- நடுநிலை வகித்தல்.
- சரியான முடிவெடுத்தல்.
- விமர்சகராகவும் ஆக்கத்திறன் உடையவராகவும் திகழ்தல்.
- ஒரு விடயத்தை அர்த்தமுள்ள வகையில் விளக்கும் திறமை.
- நீதி நேர்மையான குணவியல்புடையவராக இருத்தல்.

## காப்பாற்றுதல் அல்லது மீட்டலுக்கான சந்தர்ப்பங்கள்

- தொழிற்சாலைப் பிரச்சினைகளைத் தீர்த்தல்.
- ஊழியர் சம்பளம் மற்றும் உரிமைகள் தொடர்பான பிரச்சினைகள்.
- தொழிலாளர் பிரச்சினைகள்.
- ஒழுக்காற்று நடவடிக்கைகள்.
- நிதி தொடர்பான பிரச்சினைகள்.

## செயற்பாடு

1. காப்பாற்றும் அல்லது மீட்கும் முறை மூலம் பிரச்சினை ஒன்றைத் தீர்க்கும் முறையை நடித்துக் காட்டுக.
2. காப்பாற்றும் அல்லது மீட்கும் முறையின் மூலம் கிடைக்கும் சாதக, பாதகங்களைக் கலந்துரையாடுக.

### தீர்ப்புக் கூறல்

மோதல் தீர்வு தொடர்பான மரபு வழிச் செயற்பாடே தீர்ப்புக்கூறல் முறையாகும்.



உரு 5.6 உயர்நீதிமன்றம்

சட்டத்தை செயற்படுத்தும் நீதிமன்றம் ஒன்றினாலோ அல்லது அதற்குச் சமமான அதிகாரம் பெற்ற நிறுவனமொன்றினாலோ மோதலுக்குள்ளான இரு தரப்பினருக்கும் சமாதானத்துக்கு வருமாறு முதலில் அறிவுறுத்தப்படும். அதற்கு உடன்படாவிட்டால் வழக்கு விசாரணை மேற்கொள்ளப்பட்டு மோதலுக்கு தீர்ப்பு வழங்கப்படும். நீதிமன்றத்தின் தீர்ப்பே இறுதி முடிவாக அமையும். தோல்வியடையும் தரப்பினருக்கு மேன் முறையீடு செய்யவும் உரிமையுண்டு.

### தீர்ப்புக்கூறல் செயற்பாட்டின் இயல்புகள்

- வழக்கிலிருந்து இருதரப்பினரும் விடுபட முடியாது.
- குற்றவாளி நீதிமன்றத்தில் ஆஜராக வேண்டும்.
- சாட்சியமளித்தல், வழக்கு விசாரணை என்பன முறையாக நடைபெறும்.
- இரு தரப்பினருக்கும் சாட்சியமளிக்கவும் விவாதிக்கவும் கேள்விகேட்கவும் உரிமையுண்டு.
- சட்டத்தின் தன்மைக்கேற்பவே தீர்ப்பு வழங்கப்படும்.
- நீதிமன்றத்தின் தீர்ப்பே இறுதியானது. இரு தரப்பினரும் தீர்ப்பை ஏற்றுக் கொள்ளவேண்டும்.
- மேன்முறையீடு செய்யும் உரிமை இரு தரப்பினருக்கும் உண்டு.
- வழக்கில் தோல்வியடைந்த தரப்பினர் வழக்குச் செலவை செலுத்த வேண்டும்.

**செயற்பாடு**

1. மோதல் தீர்விற்கு நீதிமன்றத்தை நாடுவதன் நன்மை, தீமைகள் பற்றிக் கலந்துரையாடுக.
2. உமது சூழலில் உள்ள நீதிமன்றமொன்றில் வழக்கு விசாரிக்கப்படும் சந்தர்ப்பத்தைப் பார்வையிட்டு அறிக்கையொன்று தயாரிக்கக.

## உடன்படுதல்

மூன்றாவது தரப்பினர் மூலம் மோதலுக்குள்ளான இரு தரப்பினரையும் சம்மதிக்கச் செய்தல் உடன்படுதலாகும். இரு தரப்பினரும் உடன்படுவதை உறுதிசெய்யும் ஒப்பந்தம் ஒன்றில் கையெழுத்திட்டு மோதல் ஏற்படும் சந்தர்ப்பங்கள் குறைக்கப்படும். இவ்வுடன்பாடு அமுல்படுத்தப்படும் விதத்தை அவதானிப்பதற்காக மூன்றாம் தரப்பொன்று செயற்படுவது இதன் சிறப்பம்சமாகும்.

## உடன்பாட்டின் மூலம் மோதல் தீர்க்கப்படும் சந்தர்ப்பங்கள்

- குடும்பத்தினுள் தோன்றும் முரண்பாடுகள்
- தொழிலாளர் - தொழில்தருநர் முரண்பாடுகள்
- அயலவரிடையே ஏற்படும் முரண்பாடுகள்
- நிறுவனங்களுக்கிடையிலான முரண்பாடுகள்
- சமாந்தரக் குழுக்களிடையே தோன்றும் முரண்பாடுகள்

## ஆலோசனையும் வழிகாட்டலும்

தனிநபர் மோதலின்போதும் இரு தரப்பினருக்கிடையிலான மோதலின்போதும் மூன்றாந்தரப்பின் மூலம் பல்வேறு வகையிலும் வசதிகள் செய்து ஆலோசனைவழங்கி வழிகாட்டுவதன் மூலம் மோதலைத் தீர்த்து வைத்தலே ஆலோசனை வழங்கல் எனப்படும்.

இங்கு மோதல் தரப்பினருக்கு மாற்று வழிகளை அறிமுகப்படுத்தல், மோதலின் மூலம் ஏற்படும் பிரதிபலன் மற்றும் அழுத்த நிலைபற்றி இருதரப்பினரையும் அறிவூட்டல், மோதலின் இறுக்கத்தைத் தளர்த்துதல் போன்ற செயற்பாடுகள் இடம் பெறும்.

## மோதல் தீர்வு தொடர்பாக பிரசை ஒருவரிடம் காணப்பட வேண்டிய பண்புகள்

சமூகமொன்றில் வாழும் போது தான் முகங்கொடுக்க வேண்டிய சவால்களை வெற்றி கொள்வதற்காகத் தனிப்பட்ட ரீதியில் வளர்த்துக்கொள்ள வேண்டிய பல்வேறு பண்புகள் காணப்படுகின்றன. பிரச்சினைகளுக்கு முகங்கொடுத்தல் அவ்வாறு சவாலான ஒரு சந்தர்ப்பமாகும். அதற்காக நாம் வளர்த்துக்கொள்ள வேண்டிய பண்புகள் கீழ்வரும் வரிப்படம் மூலம் காட்டப்படுகிறது.







### செயற்பாடு

1. ஒரு நிமிடம் கண்களை மூடிக்கொண்டு சில தடவைகள் நன்றாக மூச்சை உள்ளிழுத்து வெளிவிடுங்கள்
2. உங்களிடமுள்ள விஷேட பண்புகளை நினைவுகூருங்கள்.
3. தங்களிடமுள்ள அத்தகைய விஷேட பண்புகளுக்காக மகிழ்ச்சி கொள்ளுங்கள்.
4. உங்களிடம் காணப்படும் பண்புகள் பற்றி ஆக்கபூர்வமான முறையில் சித்திரம் ஒன்றை வரைந்து காட்சிப்படுத்துங்கள்.

**மோதல்களை சமாதானமாகத் தீர்ப்பதனால் ஏற்படும் பயன்கள்**

உயிராபத்தைத் தடுத்தல்

↓

வளங்கள், சொத்துகளுக்கான ஆபத்தை தடுத்தல்

↓

அடிப்படை உரிமை, மனித உரிமைகளைப் பாதுகாத்தல்

↓

உளவியல் பதகளிப்பைக் குறைத்தல்

↓

தனிநபர் உளப்பண்பு மேன்மையுறல்

↓

சுயகௌரவம் பாதுகாக்கப்படுதல்

↓

சமாதானமும் பாதுகாப்பும் பேணப்படுதல்

↓

அரசியலில் உறுதிப்பாடு

↓

பொருளாதார உறுதிப்பாடு

↓

இனங்களிடையே ஐக்கியம் ஏற்படல்

↓

நாடு செழிப்படைதல்

மேற்படி அட்டவணைப் படி மோதல் என்பது, தனி நபரினதும் சமூகத்தினதும் வீழ்ச்சிக்குக் காரணமாகின்றமையால் மோதலைத் தவிர்த்துக் கொள்வது மக்களின் வளர்ச்சிக்கும் நாட்டின் அபிவிருத்திக்கும் காரணமாக அமையும். இதன் மூலம் தனிநபர் சமாதானம் ஊடாக குடும்ப சமாதானம் உருவாகும் அதேவேளை குடும்ப சமாதானம் மூலம் நாட்டின் சமாதானம் மேம்படும். அது உலக சமாதானத்துக்கும் அடிப்படையாக அமையும்.

**செயற்பாடு**

1. ஆவேசமான மனவெழுச்சியைக் கட்டுப்படுத்த சுயமாக மேற்கொள்ளக்கூடிய நடவடிக்கைகளை அட்டவணைப்படுத்துக.

2. பிறரைச் சிரமப்படுத்தும் நடவடிக்கைகளைத் தவிர்த்துக் கொள்வதற்கான ஆலோசனைகளை முன்வைக்கவும்.